# திருக்குறட்
# கருவூலம்

(கடவுள் வாழ்த்து)



சைவ சமயக் காவலர் சைவ சமய சண்ட மாருதம்
சைவ சித்தாந்தச் செம்மல் நக்கீரன் வழிவடிமை

புலவர். பி. மா. சோமசுந்தரனார்

இராணிப்பேட்டை.

வையம் துறந்தசிவ வாக்கியர் குறட்புலவர்
மாணருள் விரும்பலென்றோ

வண்மைகெழு தாயுமா னவரருட் கண்ணுடைய
வள்ளலருள் கொள்ள லென்றோ

சைவபா டியநில கண்டரா தத்தரொரு
சம்புவருள் உறுவதென்றோ

சாரா வளிக்குரு மணித்திரய தேசிகர்
தடங்கருணை மேவலென்றோ

உய்யுநெறி நின்றவடி யாரெவரும் என்னுடைய
உள்ளத்துள் ஒளிர்வதென்றோ

உயரறி விலாவேழை யறிகிலேன் உன்னையே
உள்ளபடி நம்பினேனால்

தெய்வங்கள் புகழருள் தெய்வமே ஆனரோ
தித்திக்கு முத்தி முதலே

தென்னறி வெனுஞ்சலதி பொங்குமுன் னூரில்வளர்
சிவசுப்பிர மணிய தேவே.

—பாம்பன் ஸ்ரீமத் குமாரகுருதாச சுவாமிகள்



# திருக்குறட் கருவூலம்

## (கடவுள்வாழ்த்து—விளக்கவுரை)

ஆசிரியர்

சைவ சமயக் காவலர் சைவ சமய சண்டமாருதம்

சைவ சித்தாந்த செம்மல் நக்கீரன் வழியடிமை

புலவர்

பி.மா. சோமசுந்தரனர்

இராணிப்பேட்டை

இராணிப்பேட்டை 1993 விலை. ரு.

# பொருளடக்கம்

| | | பக்கம் |
|---|---|---|
| 1. | தமிழ் செய்த தவம் | 15 |
| 2. | திருவள்ளுவர் | 20 |
| 3. | திருக்குறள் | 55 |
| 4. | முப்பாலும் நாற்பாலும் | 68 |
| 5. | திருக்குறள் உரையாசிரியன்மார் | 70 |
| 6. | குறள் வைப்பு முறை | 79 |
| 7. | கடவுள் வாழ்த்து | 90 |
| 8. | ஆதி பகவன் | 95 |
| 9. | வாலறிவன் | 127 |
| 10. | மலர்மிசை ஏகினான் | 141 |
| 11. | வேண்டுதல் வேண்டாமையிலான் | 149 |
| 12. | இறைவன் | 156 |
| 13. | பொறிவாயில் ஐந்தவித்தான் | 165 |
| 14. | தனக்குவமை இல்லாதான் | 170 |
| 15. | அறவாழி அந்தணன் | 177 |
| 16. | எண்குணத்தான் | 181 |
| 17. | பிறவிப் பெருங்கடல் | 187 |

திருமுருகன் பிரிண்டர்ஸ், மதுரை—1 போன்: 33215.

# அணிந்துரை

டாக்டர் பெ. கு. வரதராசன் எம்.ஏ., பி.ஓ.எல்., பி.டி.,
பி.எச்.டி.,

திருக்குறட் கருவூலம் எனது பார்வைக்கு மதுரை அன்பர் வழி 27-5-93 அன்று வந்தது அந்நூலை இயற்றியவர் எனது இலக்கிய வழிகாட்டி உயர்திரு. பி. மா. சோம சுந்தர னாரவர்கள். கடந்த பத்தாண்டுகளாக புலவர் பெருமான் பி. மா. சோ அவர்களுக்கும் எனக்கும் நெருங்கிய இலக்கிய வழித் தொடர்புண்டு.

அவரியற்றிய நூல்கள் அனைத்தையும் நான் பெற்று ஊன்றிப் படித்து மகிழ்ந்தவன். நக்கீரனடிமை எனத் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளுவதில் அவர் மிகவும் மகிழ்பவர். காரணம் பிறர் வெளிப்படுத்தும் கருத்துக்களில் குற்றங் குறைகள் காணப்படின் உடன் அவற்றை எடுத்துக் காட்டி உரியவரை, அவற்றைக் களைந்து கொள்ள வேண்டுவார். வேண்டுதல் பயனளிக்காதபோது மறுப்புரை எழுதித் தமிழ் மொழியையும் அதனால் வெளிப்படவிருக்கும் கருத்துக் களையும் செம்மைப்படுத்துவார்.

செம்மைப்படுத்துதல் என்பது எளிய செயலன்று. மனத் திண்மை, ஆழ்ந்த புலமை அஞ்சாமை போன்ற உயர்ந்த பண்புகள் தேவை. எப்பாடு பட்டேனும் தன் கருத்துக்களை நிலைநாட்ட, அக்கருத்துக்களுக்கு நூல் வடிவம் கொடுத்து விடுவார். இந்த உயர்ந்த பண்பே அவரை என் உள்ளங் கவர் நண்பராக்கிக் கொண்டது.

அண்மையில் 21-5-93 காலை 5-50 மணிக்கு சென்னை வானொலி நிலையத்தார் ஆத்திசூடிக்கு விரிவுரை தந்தார்கள். 'சனி நீராடு' என்பது ஆத்திசூடி — அதற்குப் பொருள் விளக்கம், 'சனிக்கிழமை தோறும் எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும் — குளித்தபின் ஓய்வெடுத்துக் கொள்ள

வேண்டுமென்பதாம். 'சனி' என்ற சொல்லுக்கு தானாகத் தோன்றுதல் என்ற பொருளை வெளிப்படுத்தவில்லை.

இதுபோல் எத்தனையோ அனுபவங்கள் எனக்குண்டு. ஆனைந்தும் ஆடினான் என்பதற்கு விளக்கம் தருகிறார் ஒரு சைவ அன்பர். ஆனைந்து - ஆ பசுவிடமிருந்து கிடைக்கும் அபிடேகப் பொருள்கள் ஐந்து - பஞ்ச கௌயம் என்பார்கள். அவை, பால், தயிர், நெய், சாணம், பசுவின் சிறுநீர், என்றால் கேட்க வேதனையாகத் தானிருந்தது. தில்லை ஆயிரங்கால் மண்டபத்தில் இப்பேச்சு. என் செய்ய! மறுத்துப் பேசும் ஆற்றலில்லை —

இதே போன்று — அஜம் என்றால் உயிரில்லாதது. 'ஜம்' உயிர்; அஜம் — உயிரில்லாதது. இதற்குப் பொரித்த நெல் என்பதே பொருள் இதுவே வேள்வித்தீயிலிடும் அவிப் பொருளாகும். அஜம் என்ற சொல்லுக்கு முதன் முதலாகப் பொருள் கண்ட பெரியவர் 'ஆடு' எனச் சொல்லி யாகத் தீயில் எத்தனை ஆடுகளைப் பலியிடச் செய்தார். பாவம்!

இவ்வாறான போலிப் புலமையையும், பொருளையும் மறுத்து உண்மையை நிலைநாட்ட வேண்டும் என்ற ஆர்வம் உடையவர் சைவ உலகில் இருக்கின்றார் என்றால் அவர் தான் இராணிப்பேட்டை நக்கீரனடிமை பி. மா. சோமசுந்தரனாரொருவரே எனக் கூறுவதில் நான் பெருமையுடைகிறேன்.

இவர்தம் அரிய படைப்பான திருக்குறட் கருவூலத்தை முழுதும் படித்தேன்; நூற்றுத் தொண்ணூறு பக்கங்கள். சுவைத்தேன்: ஆய்ந்தேன். எழுதியவற்றுள் இத்தலைப்பில் அமைந்த கருத்து சிறந்ததெனை ஏதாவதொன்று தோன்றினால் அதனை எடுத்துக் காட்டாகக் காட்டி நூலுக்குச் சிறப்புத் தேட சில அணிந்துரையில் எழுதலாம். அவ்வாய்ப்பினை இந்நூல் எனக்குத் தராமல் அனைத்துக் கருத்துக்களுமே ஒன்றை விட ஒன்று கருத்தழகில் ஆழத்தில் விஞ்சி

நிற்கின்றது. ஆதிபகவன் முதற்கொண்டு பிறவிப்பெருங் கடல் வரையுள்ள எல்லாத் தலைப்புகளில் உள்ள கருத்துக் களுமே சிறப்புடையன.

திருக்குறளுக்குப் பதின்மர் எழுதிய பழைய உரைகளு முண்டு. பின்னேயும் பலர் எழுதியுள்ளனர் எங்களூர்க் கவிஞர் நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளையவர்களும் திருக்குறளுக்கு ஓர் உரை எழுதியுள்ளார். அவ்வுரைக்கு மறுப்பாக பவானி திரு புலவர் குழந்தையவர்களும் ஓர் உரை எழுதினார். அஃது குழந்தையுரை. டாக்டர் மு.வ. அவர்கள் திருக்குறளுக்கு விளக்கவுரை எழுதினார் - தெளிவுரை - கையடக்கமான நூல். அதன் விலை அப்போது ரூ 1 ¼. பொருள் நோக்குடன் வெளியானது (On Commercial Basic) அண்மையில் திருக்குறளார் திரு முனுசாமி அவர்களும் கூட ஓர் உரை எழுதினார்கள். அதன் விலை ரூ 150. ஒரு காலத்தில் கடவுள் வாழ்த்தை திருவள்ளுவர் எழுதினாரில்லை என்ற வாதம் தமிழ் நாட்டில் தலைவிரித்தாடியது.

கடந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே திருவள் ளுவர் எங்கள் சமயத்தினர் என்று பூசலிட்டுக் கொண்ட சமய வாதிகளும் பலப்பலர். அவரவர்கள் தங்கள் வாதத்தை நிலைநாட்டிக் கொள்ள வள்ளுவர் வாழ்க்கைச் சரிதத்தைப் புனைந்து கூறினர். வள்ளுவருக்குப் பல்வகையான வேடங்-களையும் போட்டுப் பார்த்தனர். இவைகளையெல்லாம் ஆய்வு செய்து உண்மை நிலையினைக் காட்ட மூடியிருந்த பல திரைகளைக் கிழித்த பெருமை புலவர் பி. மா. சோம-சுந்தரனாருக்கேயுண்டு என்பதை, 'காய்தல் உவத்தலின்றி' இந்நூலின் கண் உண்மைப் பொருளை உணர்வார் காண்பர்.

பத்துப் பத்துப் பாடல்களாகப் பாடும் பழக்கம் வட மொழியில் தான் உண்டு; ஆகவே, திறக்குறள் வடமொழி-யின் பெயர்ப் பென்பாரும் இத்தமிழ் நாட்டில் வாழ்ந்தனர். பதிற்றுப்பத்து — ஐந்திணை ஐம்பது போன்ற சங்க நூல்-களையும், பதிகம் என்ற பிரபந்தத்தையும் காணாத கண்-மூடிகளே இவ்வாறு கூறத் துணிவர். வேதனை தரும் செய்திகளை விட்டு இந்நூலுக்கு அணிந்துரை என சில சொற்களால் கூறி அமைகின்றேன்.

'அறத்தாறு இதுவென வேண்டா' என்ற குறட்பா நண்பர் திரு. Dr. M. குப்புசாமி அவர்களுக்கும் நூலாசிரியருக்கு மிடையே விவாதிக்கப் பெற்றுள்ளது. 25-5-93 அன்று ஒரே காரில் சிதம்பரத்திலிருந்து திருநாரையூர் செல்லும் போது திரு. குப்புசாமி அவர்கள் என்னை மேற்போந்த குறட்பாவைக் கூறி விளக்கம் கேட்டார்கள்.

சிவிகை சுமந்தானும் ஊர்ந்தானுமாகிய இருவரும் சேருகின்ற இடம் ஒன்றுதான். சென்றபின் சிவிகையில் ஊர்ந்தான் உள்ளே அழைத்துச் செல்லப் பெறுகிறான் — உபசரிக்கப் பெறுகிறான். உண்பிக்கப் பெறுகிறான் — நாடிவந்த நற்பயனை அடைகிறான். சிவிகை சுமந்து வந்தவர்களோ வெளியே காத்துக் கிடக்கிறார்கள். என்ற நயம் கூறி மகிழ்ந்தோம்.

'நெருநல் உளனொருவன் இன்றில்லை' என்ற தொடரில் 'நெருநல்' என்ற சொல்லுக்கு — 'சற்றுமுன்' என்ற மணக்குடவர் உரையே சிறந்ததென அனுபவத்தால் உணரப் பெற்றது. இவ்வாறாக ஆய்ந்து பொருந்தாப் பொருளை நீக்கி இலக்கிய மரபு வழுவாது நடுநிலையோடு முதல்திகாரத்திற்குப் பொருளெழுதி முற்றுவித்த இத்திருக்குறட் கருவூலம் சிறந்த மதிப்புடைக் கருவூலமே: பொருளுமுடையதே.

நூலாசிரியர் அனைத்து அதிகாரங்களையும் ஆய்ந்து தமிழர்கள் உய்ய — உறுபொருள் தர எல்லாம் வல்ல எந்தை தில்லைக் கூத்தனை அருள் புரிய வேண்டி அமைதியுறுகின்றேன். இந்நூலை அனைவரும் விலை கொடுத்து வாங்கிப் படித்துச் செம் பொருள் காண — கண்டுய்ய வேண்டுமென்பதே எனது பெருவிருப்ப மாகும்.

அன்புள்ள,

பெ. கு. வரதராசன்

3, கோபாலகிருஷ்ணா காலனி,
பெங்களூர் சாலை,
கிருஷ்ணகிரி — 635001,
1 — 6 — 93.

குமார ஜெயம்

திருச்சிற்றம்பலம்

# அணிந்துரை

*தேவர் குறளும் திருநான் மறை முடிவும்*
*மூவர் தமிழும் முனி மொழியும் — கோவை*
*திருவா சகமும் திருமூலர் சொல்லும்*
*ஒருவா சகமென் றுணர்.*

— **ஔவையார்**

தமிழ் நூல்களில் தலைசிறந்த வாழ்க்கை நூல் திருக்குறள். தெய்வப் புலமைத் திருவள்ளுவ தேவரருளிய விந்நூல் உலகில் சுமார் எண்பது மொழிகளில் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளமையை நோக்கி உலகப் பொதுமறை யென எழுதுபவர்களும் பேசுபவர்களும் பலராயுள்ள **வீக்** காலத்தே, இஃது சைவ சமய நூலேயென விளக்கி கடவுள் வாழ்த்து பத்துச் செய்யுட்கட்கும் பேருரை செய்யப் பெற்றுள்ளது. திருப்புகழருளிய அருணகிரிநாத சுவாமிகள் ''இடரற முப்பால் செப்பிய கவிதை'' எனப் போற்றியும், கலை கொடு பவுத்தர் காம கருமிகள் துருக்கர் மாயர் கபிலர் பகரக் கணாதர் உலகாயர் கலகமிடு தர்க்கர் வாமர் பயிரவர் விருத்தரோடு கலகலெனச் சிலுகி யெதிர் குத்தி வாது செய்பவர்களெனப் புறச் சமயிகளைச் சாடியும் பழநித் திருப் புகழில் அருளிச் செய்கின்றாரெனில் அனைத்துச் சமயத்த வர்க்கும் திருக்குருள் பொது நூலாகுமா?.

திருக்குறளுக்கு உரைகண்டவர்கள். தருமர், மணக் குடவர், தாமத்தர், நச்சர், பருதி, பரிமேலழகர், திருமலையர், மள்ளல், பரிப் பெருமாள், காலிங்கர் முதலிய புலவர்கள் பதின்மர் ஆவர். இவைகளில் ஐவருரை யின்று உளது. உலகப் பொதுமறை யெனக் கூறியிருக்கின்றார்களா? கடவுள் வாழ்த்து 10 பாடல்களில் ஏழில் இறைவன் திருவடிச் சிறப்புக்

கூறப் பெற்றுள்ளமை சிந்திக்கத் தக்கது. திருவடிச் சிறப்புக் கூறுவதும் திருவடித்துணை வேண்டுவதும், தன் வயத்தவன், தூயவுடம்பினன், இயற்கையுணர்வினன், முற்று முணர்தலியல்பின்ன், பாசம் நீங்கியவன், பேரருளுடையவன், முடிவிலாலாற்றலுடையவன், வரம்பிலாயின்பமுடையவன் என எண் (எட்டு) குணத்தவனெனக் கூறுவதும் சைவ சமயம் ஒன்றுமேயாகும். 9-வது செய்யுளில்,

> ''கோளில் பொறியில் குணமிலவே எண் குணத்தான்
> றாளைவ ணங்காத் தலை.''

எனப் பொய்யாநாவிற் புலவன் தேவர் கூறுவதினின்று அவர் சைவ சமயத்தவர் என்பதற்கும் திருக்குறள் சைவ நூலே யென்பதற்கும் வேறு சான்று வேண்டுவ தின்றாம்.

சைவ சமயாபிமானமில்லாது சாத்திரம் பலவும் பேசி கோத்திரமுங் குலமும் பெரிதெனக் கொண்டு தடுமாறும் சாதிச் சைவரெனும் சழக்கர்களின் குதர்க்கவாத தர்க்கத்தாலும் செந்தமிழபிமானமில்லாது ஆங்கில அன்னியர் நாகரீக மோகிகளின் பெருக்கத்தாலும் தமிழ் மக்கள் நல்லாறு அறியாது அலைப்புண்டு,

> ''உலகத்தார் உண்டென்பதில்லென்பான் வையத்து
> அலகையாய் வைக்கப் படும்''

எனும் குறட்பாக் கருத்தையும் உணர வாய்ப்பின்றி நிற்கு மிக் காலத்தே சான்றோர் மிக்க தொண்டை நாட்டின் தொன்மைப் பதி இராணிப்பேட்டை நகரில் வதியும் நக்கீரன் வழியடிமை, புலவர் பி மா. சோமசுந்தரனாரவர்கள், தமிழ் ஓலைச்சுவடிகள் கறையான் வாய்ப்பட்டு மடிந்து தொலையுந் தருவாயில் அவைகளைத் தேடியெடுத்துச் செப்பஞ் செய்து அச்சுவாகனமேற்றி நூலாக்கித் தந்தவர் யாழ்ப்பாணம் - இராவ் பகதூர் சி. வை. தா மோதரப் பிள்ளை ஆவர். இவர்

ஓலைச் சுவடிகளை அச்சிடும் பணியை மேற்கொண்டு கி.பி. 1881-ல் வீரசோழியமும், 1883 ல் தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்குத் திறவு கோலான இறையனார்களவியலுரையும், சிவஞான முனிவரின் மாணவரான கச்சியப்ப முனிவரியற்றிய தணிகைப் புராணமும், 1887-ல் கற்றறிந்தா ரேத்தும் கலித்தொகையும் உரையும், 1889- ல் குட்டித் தொல்காப்பியமாகிய இலக்கண விளக்கமும் அச்சிட்டுத் தமிழன்னையைத் தலைநிமிரச் செய்து தமிழுக்காற்றிய தொண்டொப்ப, ஆறுமுக நாவலரவர்கள் சைவத்திற்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட சீர்த் தொண்டொப்ப நக்கீரன் வழியடிமை புலவரவர்கள் சைவத் தொண்டுந்தமிழ்த் தொண்டுமே குறிக்கோளாய்க் கொண்டு தமிழ் மணமும் சைவத்திறமும் பிறங்கச் சிவ பரத்துவம் துலங்கும் பல நூற்களையாத்தும், அச்சிட்டும் சொற் பெருக்காற்றியும் செய்யுந் தொண்டினை நோக்கித் திருச்சி-தமிழகச் சைவநெறிக் கழகம் காஞ்சிபுரத்தில் கூட்டிய சிவ பூஜை மகாநாட்டில் ''சைவசமய சண்ட மாருதம்'' என்ற பட்டத்தையும், சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றம் இரத்தினகிரியில் நடத்திய ஆண்டு விழாவில் ''சைவசமயக் காவலர்'' எனும் பட்டத்தையும், மதுரை-மறைமலையடிகள் மன்றம் ''சைவ சித்தாந்தச் செம்மல்'' என்ற பட்டத்தையும் வழங்கிப் பாராட்டப் பெற்றவர்கள்.

இவர்களியற்றிய ''செந்தமிழ்த்திறம்'', ''சிவம் பரப்பிர்மம்'', ''சிவபிரானின் முழுமுதன்மை'', சங்ககாலத் தமிழர் சமயம்'', ''ஏசு பிறந்தார்'' (பைபிள் ஆராய்ச்சி) ''ஏசுவின் ஆட்டுக் குட்டிகள்'', ''உலகம் படைக்கப் பட்டது ஏன்?'', அருணகிரிநாத அடிகளார் வரலாற்றாராய்ச்சி'', ''இகழுரை போக்குந் தகவுரை'', ''புலவர் பேரரசர் ஒட்டக்கூத்தர்'', ''பெரியோர் செய்த பெரும் பிழைகள்'' ஆகியவை இவரின் தமிழ்ப் புலமையையும், சைவத்திறத்தினையும்,

குமார பரமேசுவரன் திருவடிக்கன் பின் பெருக்கத்தையும் காட்டும் நூல்களாகும்.

இப்பொழுது திருக்குறள் முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்து பத்துச் செய்யுட்கட்கும் விரிவுரையெழுதியுள்ளார். உலகப் பொதுமறையெனக் கூறும் அன்பர்கள இவ்வுரையை வாசித்தறிந்த பின் பொதுமறை திருக்குறள் எனக்கூறும் பழக்கந்தவிர்ந்து சைவந்தழைக்கத் தமிழ் செழிக்க நின்று நடைதருவார்களென நம்புகிறேன். செந்தமிழ் பரமாச்சாரியன் சைவபரிபாலன சிவசண்முக தேசிகள் திருவருள் முன்னின்றருள்க.

மண்டபம் குகேசனடிமை,
14—1—1993. பழநி தங்கவேல்சாமி



டாக்டர். மு. குப்புசாமி அவர்கள்
B.E., M.S. (USA), ph.D. (LOS ALTOS)
D.phil (WU), FWA, F.T.S., F.I.S.E.,
F.I.E. (IND), M.A.M., Sc., Ag., E.
Former Chief Technical
Adviser United Nations & Chief Engineer,
Govt of India

# முன்னுரை

உலகினர் எல்லோருக்கும் உள்ளத் தெளிவும் ஊக்கமும் தந்து, தொட்டனைத்தூறும் மணற்கேணியினை யொப்ப, பயிலும் தோறும் விழுமிய பல்வேறு நுண்கருத்துக்களை வரையாது வழங்கிக் கொண்டே வரும் செவ்விய நன்னூல் திருக்குறள் என்பதனை நாம் அனைவரும் தெரிந்துள்ளோம். கால்ஞ் செல்லச் செல்ல, பொறியியல் போன்ற உலக வழக்குத் துறைகளிலெல்லாம் பெருவாரியான முன்னேற்றம் ஏற்பட்டுக் கொண்டேயிருப்பதுபோல், அறம் பொருள் முதலிய வாழ்வியல் துறையின் கண்ணேயும் இறையருளால் மேலும் மேலும் பல அரிய பேருண்மைகள் வரிசை வரிசையாக வெளிப்பட்டுக் கொண்டே வருமாறும் காண்கின்றோம். இம் முறையிற்றான் பேரலும் திருக்குறட்பாக்கள் பலவும் 'அறிதோறறியாமை கண்டற்றால்' எனுமிரங்கலிற் கேற்ப நாம் இது வரை நினைத்திராத புதிய பல உண்மைகளைக் காலப் போக்கில் உணர்த்திச் செல்லா நின்றவாறும் எனலாம். புதுமைக்கும் புதுமையான கருத்துக்கள் நாளாவட்டத்தில் வெளிப்பட்டு வருதலைக் காணப் பெருவியப்பில் ஆழ்கின்றோம். அருட்பெருங்கடலாகிய இறைவன் ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லாம் உய்யுநெறி காட்டி ஆட்கொள்வான் வேண்டி, திருவள்ளுவ நாயனார் மூலமாகச் செய்வித்தருளிய பெரு நூலே திருக்குறள் என்றறியலாயினோம். இதன் கண்

விளக்கப் பெறும் செய்திகள் எல்லாம் என்றும் நிலைத்து நிற்கும் பெற்றிய வாய், காலப்போக்கால் மாறுபாடு ஒரு சிறிதும் இலவாய் மிளிர்தலைக் காண்கின்றோமன்றோ? நீலமணிமிடற்றொருவன் போல மன்னுவன திருக்குறட் பாக்கள். இதனாற்றானன்றோ திருக்குறள் (பதிகரணம் வாய்க்கப்பெற்று) இறைவன் திருவருட்குறிப்பினால் உலகினர்க்கு மெய்யுணர்வு கூட்டுவான் பொருட்டுப் பெருமானாரால் யாக்கப் பெற்ற ஒப்பிலா நன்னூல் எனப் போற்றப் படுவதாயிற்று. எத்துணைச் சீரும் சிறப்புடையார் திருவள்ளுவ நாயனார்! அறநூலாயிருப்பினும் இதனுள் நகைச் சுவை தெரிக்கும் பாக்கள் பலவும் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளமையும் கண்டின் புறற்பாலது. (பெரிதினிது பேதையார் கேண்மை – குறள் 839—போலப் பத்தொன்பது பாக்கள் குறித்து வைத்துள்ளேன்).

இனி, திருக்குறளுக்குச் செய்யப் பெற்றுள்ள உரை நூல்களின் நிலையாதோவென ஆயப்புகும் போழ்து, அவை பலவும் நமக்குப் பெருந்துணையாய் நின்று நல்விளக்கம் தந்துள்ளமைக்குப் பெரிதும் கடப்பாடுடையேம் என்றறிகின்றோம். ஒரோ விடத்து உரையாசிரியன்மார் உள்ள நிலைக் கேற்பவும் அவர் தம் காலநிலைக் கேற்பவும் சிற்சில மாறுபாட்டுரைகள் உளவாதலும் காண்கின்றோம். முற்காலத்தில் தெரிவிக்கப் பெற்ற உண்மைகளினும் சிறந்த சிலபல உண்மைகள் காலவியல்பால் பின்னர் வெளிப்படுதல் இயல் பேயன்றோ? என்னை? பல திறப்பட்ட பெரியோர்தம் உரைகளை யெல்லாம் ஒப்பு நோக்கி ஆராய்ந்து, களைவன களைந்து, நம்முள்ளத் தெழும் கருத்தினைத் துணையாகக் கொண்டு தேர்ந்து செவ்விதாய முடிபு கோடல் இக்காலத்து இயல்வது போல் முன்னர் வாய்க்கப் பெறவில்லையாதலின் என்க. தன்முனைப்பின்றி, ஒருபாற்கோடாது சீர்தூக்கும் கோல் போல் ஆய்வு செய்வாருள்ளத்துள் முன்னையினும் சீரிய விளக்கங்கள் அவ்வப்போது தோன்றுதல் கூடுமன்றே.

அன்றியும் சில உரைகாரர் (தெரிந்தோ, தெரியாமலோ) வலிந்து பொருள் கொண்டு, நாயனாரது கருத்து வெளிப் படாதவாறு மறைத்துப் பிழை பட வரைந்துள்ளவாறும் காண்டுமன்றே. இற்றை நாளில் போலவே, பழங்காலத்தி-லும் தவறு செய்வார் இருந்தனர் எனுஞ் செய்தி திருஞான சம்பந்தப் பெருமானார் திருவாக்கினாலேயே அறியக் கிடக் கின்றது. ''விழையாதார் விழைவார் போல் விகிர்தங்கள் பல பேசி'' எனத் தொடங்கும் திருப்பாசுரம் இதனைத் தெளி வாக்குகிறது. இங்ஙனம் குற்றமிழைப் பார்க்கும் பேரருட் கடலாகிய சிவபிரான் பிழையாது தண்ணளி காட்டுவார் என்று அதே திருப்பாட்டில் (பிழையாத பெருமானார்) கூறி யுள்ளமை பெருவியப்பும் மகிழ்வும் ஒருங்கே விளைவிப்பதா கின்றது. தவறிழைத்தோரும், தெரியாது பிழை செய்வாரும், தீதகன்று மெய்ந்நெறிக்கண் விரைந்தேகுதற்கு இறைவன் நேர்வழி வகுத்துள்ளான். இது காலை சுடர்விட்டுளன் எங் கள் சோதி என்றாற் போல திருக்குறளின் பேரொளிக் கதிர்கள் படர்ந்தெழுந்து கிளர்கின்ற காலம் இக்காலம் எனலாம்.

இந்நிலையில், ஆழ்ந்த நுண்ணிய திருக்குறட்பாக்களின் உட்கருத்துக்களையெல்லாம் நம்மனோர் எளிதினுணரும் வகையில் எடுத்தோதுபவர்கள், தக்க தமிழ்ப் புலமையும், சமய அறிவு முதிர்ச்சியும், திட்பமும், ஒட்பமும், நடுவு நிலையும் உடையாராய் இருத்தல் வேண்டுமன்றே, இத்தகு நல்லார் தம் தொகை அருகி வருகின்றதோ என நாம் அஞ்சிக் கொண்டிருக்கும் இற்றை நாளில் திருவருட் பெருங் கருணையால் தூண்டப் பெற்றுத் தமிழுலகிற்குச் சீரிய தொண்டாற்றி வரும் பெரியார் ஒருவரை நம்மிடையே காண்-கின்றோம். சைவமும் தமிழும் முன்போல மீண்டும் செழித் தோங்கச் செய்வதற்கென்றே வருவிக்க வந்துற்ற பேரரு-ளாளர் புலவர் பி மா. சோமசுந்தரனார் அவர்கள் என்பது, அவர்கள் செய்தருளிய 'திருக்குறட் கருவூலம்' என்னும்

இப்பெரு நூலின் வாயிலாகவே தெளியக் கிடக்கின்றது. இப்பெரியார் தம் ஆய்வுத் திறனுக்கும், புலமைக்கும், சைவ நெறிப்பற்றுக்கும், காய்தல் உவத்தலிலா நடுநிலை-நோக்கிற்கும் பிற சான்றேதும் வேண்டப்படுவதின்று. இந்நூலொன்றேசாலும். இத்தகு சான்றோர் தொகை மேலும் பல்கிப் பெருகுமாறு திருவருள் கூட்டுவிப்பதாக.

மெய்யுணர்வு மேலோங்கி வளர்தற்கும், திருவள்ளுவர் கூறவந்த உண்மைக் கருத்துக்களை உலகினர் யாவரும் கண்டு உய்தி பெறற்கும் இவர்கள் அருளியுள்ள விளக்க நூல் பேருக்கம் தருவதாகின்றது. இதுகாறும் வெளிவந்துள்ள உரைகளெல்லாவற்றினும் மேம்பட்டு நின்றுமிளிர்வதிந் நூல் எனத் துணிந்துரைக்க வல்லேன். இலக்கியச் செறிவும் சிவநெறி மாண்பும் அறநெறித் தெளிவும் கொண்டிலங்கும் திருக்குறட் கருவூலம் இந்நிலவுலகின் கண் ஓர் கலங்கரை விளக்கம் என்னல் தகும். தான் பெற்ற நல்விளக்கங்களை நானிலம் முழுதும் பெறல் வேண்டுமெனும் நன்னோக்குடன் வரையப் பெற்ற இப்பெரு நூலினைத் தமிழர் அனைவரும் படித்துப் பேறெய்தி மகிழ்வாராக.

இந்நூல் நிறைவு செய்யுமிடத்தில், வீடு பேற்றினை விரைந்தளிக்க வல்ல அருள் நெறியாஞ் சீவகாருண்ய ஒழுக்கத்தினை விதந்தோதிய அண்மைக் காலச் சீலர் ஸ்ரீமத்பாம்பன் குமரகுருதாச சுவாமிகள், வடலூர் இராமலிங்க அடிகள், இவ்விருவர் தம் நல்லுரைகளை எடுத்தாண்டுள்ளமை சால நன்றாயிற்று. எல்லாவுயிர்க்கு மிரங்கியருளாளல் நல்லாற்றினுய்க்கும் நெறி என்பது நிலைநாட்டப் பெற்றது.

என்றும் இன்பம் பெருக்கும் இயல்பிற்றாய திருக்குறள் கருத்தினைச் செவ்வனே விளக்கியருளிய பெரும் புலவர் பி. மா. சோமசுந்தரனார் அவர்கள் நீடுவாழ்ந்து இன்னும் பல நன்னூல்கள் யாத்துத் தமிழுலகம் போற்ற நின்று, ஆலவாயண்ணலார் தம் புகழ் பரப்புவார்களாக, இவ்வொலி கடல்சூழ் உலகெலாம்.

மு. குப்புசாமி.
புதுடெல்லி. March'93.

# உரைப் பாயிரம்

இறைவனைச் ''சமய கோடிகள் எலாம் தம்தெய்வம் என்தெய்வம் என்று எங்கும் தொடர்ந்து எதிர்வழக்கிட நின்றவன் என்று தாயுமானவ அடிகளார் சாற்றுகின்றார். அங்ஙனமே அச்சமய கோடிகள் எலாம் தம்நூல் என்நூல் என்று எங்கும் தொடர்ந்து எதிர்வழக்கிட நிலவுவது திருக்குறள் ஆகும். கடவுள் உண்மையை ஏற்காத உலகாயதர், புத்தர், சமணர் முதலியவரும் திருக்குறளின் முதல் அதிகாரமே கடவுள் வாழ்த்து என்னும் உண்மையையும் கருதாது ''எம் ஒத்து'' என்று திருக்குறளை ஏத்துகின்றனர்.

திருக்குறள் கடவுள் வாழ்த்துக்கு உரிய பத்துப்பாக்கட்கும் விரிவுரை எழுதித்தரின் வெளியிடுவதாக மறைமலையடிகளின் மாணாக்கரும், திருக்குறள் பீடத்தலைவரும் ஆய அழகரடிகள் இசைத்தார். யாம் இசைந்து திருக்குறட் கருவூலம் என்னும் இந்நூலை எழுதத் தொடங்கினோம். நூல் எழுதி முடியும் முன்பே அழகரடிகள் இவ்வுலகை நீத்தார். இந்நூல் பற்றிப் புலவர் பேரரசர் ஒட்டக்கூத்தர் என்னும் எமது நூலில் வரும் குறிப்பைக் கண்ட இரத்தினகிரி திருமிகு. பாலமுருகனடிமை அடிகள் இதனை அச்சிட விழைந்தார். திருவருளுக்கு இசைவில்லை போலும்! தவப்பெருந் திருவினராய பாம்பன் குமரகுருதாச அடிகளாரைப் பரவும் எமது நூல் அவ்வடிகளார்பால் ஆராக் காதல் கொண்ட அன்பர் ஒருவர் பொருளுதவியால் இஞ்ஞான்று வெளிவரலாயது. பாம்பன் அடிகளார் முதற்செவியறிவுறூஉவில்,

''அந்தப் பரமரகசிய சக்தி இரகசியத்துக்கே பிரியப்படும். அதன் காரியத்தில் கண்ணும் கருத்துமாயிராநின்ற தேவர்களும் அந்தப்பிரியமே உடையராகலின் தேவகைங்கரிய தருமம் எதுவும் இடம் பத்தில் சேர்ந்தொழியாமே இரகசியம் பேணிச் செய்யப்படல் வேண்டும். சத்தியத்தின் பொருட்டு

நாவைக் காத்துக்கொளல் போலவே தருமத்தின் பொருட்டு இரகசியத்தையும் காத்துக் கொளல் தகுதித்தாம்''.

என்று அருளிய நெறி பிடித்துத் தம்பெயர் வெளிப்படலை அப்பெரியார் விழையாதவராய் உள்ளார். அவருக்கும் அவர் தம் மனைமகார்க்கும் இளைய பரமசிவனார் ''மிகுத்த கனமதுறு நீள்சவுக்ய சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வும் சிவஞான சித்தியும் அருள்வாராக.

அண்மையில் வெளிவந்த 'பெரியோர் செய்த பெரும் பிழைகள்' என்னும் எமது நூலைக் கண்ணுற்ற திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் அவர்கள்,

''தாங்கள் செய்யும் சமயத்தொண்டை நினைந்து உள்ளம் உருருகின்றேன். இத்துடன் ஒரு சிறு தொகை அனுப்பியுளேன். தங்கள் தொண்டுக்குப் பயன்படும். தங்கள் மேலான அன்புக்கு நன்றி. தங்கள் நலத்துக்குக் கந்தவேளை இந்தவேளை வேண்டுகிறேன்.

நான் 21 நாள் கோவை இயற்கை மருத்துவமனையில் தங்கியிருந்த காலை தங்களின் பல நூல்களைப் படித்தேன். தாங்கள் அனுப்பிய பெரியோர்கள் செய்த பெரும்பிழை என்னிடமிருந்து யாரோ அபகரித்துக் கொண்டார்கள். அந்தப் பக்கம் வரும்போது நேரில் பெற்றுக் கொள்வேன்''.

என்று கூறியருளினர். புலவர்மாமணி, சித்தாந்த வித்தகர். முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்கள்.

''சிவஞான முனிவர் கருத்துக்களைத் தாங்கள் மறுத்தெழுதியுள்ள பகுதிகளைப் படித்துப் பார்த்தேன். மிக்கதுணிவோடும் திறனோடும் முனிவர் கருத்துக்களை மறுத்திருக்கிறீர்கள். தங்கள் நுண்மாண் நுழைபுலத்தலைப் பாராட்டுகிறேன்''

என்று கூறியுள்ளார். மேலும் பலரும் பாராட்டியுள்ளனர். அவை இனி வெளியிடவுள்ள ''பெரியோர் செய்த பெரும்பிழைகள் – சிவஞானமுனிவர் - இரண்டாம் பகுதியில் இடம் பெறும். போற்றுவார் உளராதல் போலத் தூற்றுவாரும் உளராவரன்றோ! தூற்ற எழுந்தவர் தம் பெயரைச் ச. இரத்நவேலன் என்று எழுதுபவர். சங்கரன்கோயில் என்னும் ஊரினராய இவர் வெப்புநோய்க்கு ஆற்றாது பிதற்றுவசர்போலச்சில கூறியுள்ளார். இவர் பண்பை உணர்ந்தார். இவர் மொழிகளைப் பொருட்படுத்தார். இவர் பண்பையும் காட்டுவோம்.

இவர் தம் ஆசிரியரான ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை என்பார் 'சிவபரத்துவ நிச்சயம்' என்னும் நூலை ஆக்கினார். இவர் அதனை உரையோடு பகுதி பகுதியாகச் சென்னையில் வாழும் ஆங்கீரச வேங்கடேச சர்மா என்பாருக்கு அனுப்பினார். சர்மாவும் அவற்றைச் சிவஞான பூசாமலரில் வெளியிட்டார். ஆனால் அந்நூல் இதுகாறும் வெளிப்படாத ஒன்று போலவும் சர்மாவே முதல் வெளியீட்டாளர்; இவரே முதல் உரையாசிரியர் போலவும் சர்மாகருதலானார். இவர் அங்ஙனம் ஒரு பொய்த்தோற்றம் காட்டியிருப்பினன்றி சர்மா அங்ஙனம் கருதார்.

சர்மா அவர்கள் 7.9.92 இல் எமக்கு விடுத்த மடலில் ''திரு. ஈசுவரமூர்த்தியா பிள்ளையவர்களது சிவபரத்துவ நிச்சயம் இதுவரையில் அச்சிடப்பட்டதாகத் தெரியவில்லை. அதை மூதன்முதலாக வெளிப்படுத்தும் பேறு அடியேனுடையதாகவே இதுவரையிலும் நம்பியுள்ளேன். அதனை ஆண்டுதோறும் பகுதி பகுதியாக வெளியிடப் பிரதிசெய்து உரைவிளக்கம் மேற்கோள்களுடன் உதவியவர் மேற்படி பிள்ளையவர்களுடைய மாணவர். வித்துவான். ச. இரத்நவேலன் என்ற பெரியார். ஆவர்''.

எனல் காண்க. அந்நூல் காழி. பி. அகோரம் பிள்ளை-யால் உரையிடப்பட்டு T. M. வேங்கடசர்மையா B.A.B.O.L. அவர்களால் 1940 இல் அச்சிடப்பட்ட செய்தி செந்தமிழ்ச் செல்வி இதழில் யாவரும் காணவுள்ளதே. இங்ஙனம் உள்ள உரையை மறைத்தல் நலமோ? இத்தகையவர் மொழிகளும் பொருளாமோ? இவர் எம்மைப் பழிக்க எழுந்ததே எம்-வினையைக் கழிக்க எழுந்த தாமன்றோ?

வெப்புநோய்க்கு ஆற்றாது பிதற்றுவார் போலச் சில கூறியுள்ளார் என்று வரும் எமது கூற்றுக்கு ஓர் எடுத்துக்-காட்டும் தருவல்.

''தாங்கள் எடுத்துக்காட்டும் 17 தலைப்பு வழிக் குற்றங்-கள்யாவும் பிறரைவழி மொழிந்தனவேயன்றிப் புதுவதாக யாது உளது? என்று வினவியுள்ளார்.

எம் நூலில் வருவன பிறரை வழிமொழிவனவே என்று இவர் கூறுதலால் யாம் காட்டும் சிவஞான முனிவரின் குற்றங்கள் பலரால் காட்டப்பட்டனவே என்பது முடியும். அன்றியும் எம் நூலை மறுக்க ஒருவர் வரும் வரை பொறுத் திருப்பதாக இவரே கூறுதலால் அக்குற்றங்கள் குணங்களாம் வகைகாட்டும் திறனிலார் இன்றிக் குற்றங்களாகவே நிலவு கின்றன என்பதும் ஒப்புக் கொண்டார் ஆயினார். இங்ஙனம் அமைதி கூறமுடியாத பிழைகள் உடையாரே சிவஞான முனிவர் என்பதை இவரே உணர்த்தினாரும் ஆயினார்.

எம் நூலில் வருவன யாவும் பிறரை வழிமொழிவன என்பது வாய்மையா என்று காண்பாம்.

எம் நூலின் 17-ஆம் தலைப்பு ''முடிப்பு நுவற்சி''. இதில் காட்டப்படும் முனிவர் குற்றங்கள் யாவையோ? அவை யாரை வழிமொழிவனவோ? 16-ஆம் தலைப்பு 'சிவதத்துவ விவேகம்'. சிவதத்துவ விவேகம் அப்பைய தீக்கிதரென்று என்னும் ஆய்வாளரையே மறுப்பதாகும். எனவே இதில்

காட்டப்படும் முனிவரின் குற்றங்கள் யாவையோ? அவை யாரை வழிமொழிவனவோ?

9-ஆம் தலைப்பு 'துறவு நிலை' முனிவரின் நடை துறவு நிலையை முனிவதென்று இதற்குமுன் யார் உரைத்தாரோ? அவ்வாறு உரைத்துமா முனிவரின் துறவு நிலையைத் துரிசு-படுத்தும் பாடல்களை இன்னோர் கூறி மகிழ்கின்றனர்?

14-ஆம் தலைப்பு ''கம்பராமாயணக் குற்றங்கள்''; 13-ஆம் தலைப்பு ''மாதரும் மகரமீனும்''; 11-ஆம் தலைப்பு ''கேட்போரும் யாப்பும்''; 6-ஆம் தலைப்பு ''ஆகம வரலாறு''; 5-ஆம் தலைப்பு ''பிரமசூத்திரம்''; 4-ஆம் தலைப்பு ''சாதி வேற்றுமை'' ஆகியவற்றில் வருவன யாரை வழிமொழி-வனவோ? ஏனைய தலைப்புக்களில் வருவனவற்றில் சிற்சில பகுதிகள் பிறரால் சுட்டப்பட்டிருப்பினும் எம்போல் விரித்து விளக்கினார் எவரும் இலரே.

'சிறப்புப் பாயிரத் திலக்கணம் கூறும் கேட்போர் என்பதன் மெய்யுரை' என்னும் எமது கட்டுரை தமிழ்ப் பொழிலில் வெளியாயிற்று. மணற்சோறு பற்றியும் அதில் கூறினாம். அது கண்ட வித்துவான் க. வெள்ளைவாரணனார். அவர்கள் 9-2-76-இல் எமக்கு விடுத்த மடலில் ''தவறான கொள்கை-களை மறுக்கத்தான் வேண்டும். மறுப்பில் கடுமை இல்லா திருத்தல் நலம் என்பது எனது கருத்து'' என்று தெரிவித்-தார். பிரமசூத்திரம் பற்றிய முனிவர் கருத்தை மறுக்கும் ''முனிமொழி'' என்னும் எமது கட்டுரை தருமபுர மடத்து வெளியீடாகிய ஞானசம்பந்தம் இதழில் வெளிவந்தது

ஒரு கட்டுரைக்கும் மற்றொரு கட்டுரைக்கும் இடைவெளி மிகுதலால் சிவஞான முனிவர் செய்த பெரும் பிழைகளை ஒரு சேரக் காணும்பேறு செந்தமிழ் நாட்டு மக்களுக்கு வாய்த்-திலதே என்னும் கவஞ்சியே ''பெரியோர் செய்த பெரும்-பிழைகள்—சிவஞான முனிவர்-முதற்பகுதி'' என்னும் நூலாகத்

தோற்றம் கொண்டது. இப்போது கைக்கொண்டு உள்ள ''திருக்குறட் கருவூலப்'' பணி முற்றியதும், ''சிவஞான முனிவர்-இரண்டாம் பகுதி'' எழுதத் தொடங்குவோம்.

இங்ஙனம் முனிவர் செய்த பிழைகளைத் தொகுத்து வெளியிட்டார் எம்மையன்றிப் பிறர் இலரே. இந்நூலை மக்கள் பெரிதும் விரும்பிப் பெற்று ஓதுகின்றனரே.

''திருக்குறட் கருவூலம்'' என்னும் இந்நூற்கண் பாம்பன் அடிகளாரின் அருளுரைகள் ஆண்டாண்டு அணிசெய்கின்றன. எனவே இந்நூலைப் படிப்போர் பெரும்பயன் பெறுவர் என்று சொல்லவும் வேண்டுமோ? இறைவனைக் காணும் திரு வாய்க்கப் பெறாதார் நூலறிவும் சிந்தனைத் திறனும் கொண்டு கூறுவன மெய்யாய் விளங்குதலும் உண்டு; பொய்யாய்ப் போதலும் உண்டு. இறைவனைக் கண்டு அவன் திருவருளில் திளைக்கும் மெய்யடியவர்கள் கூறுவன அங்ஙனன்றி எஞ்ஞான்று உண்மையாகவே ஒளிசெய்து திகழும். அத்தகு மொழிகளே இந்நூற்கண் ஆளப்பட்டுள.

திருக்குறள் கடவுள் வாழ்த்தோடு நெருங்கிய தொடர்புடையது துறவற இயல் திருக்குறள் உணர்த்துவதும் அதனையே என்பது பாயிரத்துள் நீத்தார் பெருமையையே விதந்துரைப்பதால் பெறுதும் அந்நீத்தார் அறநீத்தாரேயாவர். அங்ஙனின்றி மனை, மக்கள், கிளை சூழ்ந்து இருப்பவும் துவராடையணிந்து கொண்டு இல்லறத்தார்க்கு உரிய ''காமஞ் சான்ற கடைக் கோட்காலை'' என்னும் தொல்காப்பிய நூற்பாவைத் தம் நிலைக்குத் துணையாக்கிக் கொள்வார் நீத்தார் அல்லர். இறைவன் திருவருள் இருப்பின் அவர் பெருமையையும் மற்றொரு காலை விரிப்போம்.

இராணிப் பேட்டை
15-4-1993

நக்கீரன் வழியடிமை
புலவர். பி. மா. சோமசுந்தரனார்.

# திருக்குறட் கருவூலம்

## 1: தமிழ் செய்த தவம்

### 1. தனக்கு உவமை இல்லாதார்

''சான்றோர் பலர் யான் வாழும் ஊரே'' என்பார் பிசிராந்தையார். சான்றோர் வாழும் நாடும் அதன் மொழியும் சிறந்து விளங்கும்.

எந்தச் சான்றோருக்கும் இல்லாத சிறப்பு திருவள்ளுவருக்கு உண்டு. அத்துவிதம் பரப்பியவர் சங்கர ஆசிரியர். அவரை எம்மவர் என்று மகமதியரோ, கிறித்தவரோ பேச மாட்டார். ஏசுவையும், நபியையும் எம்மவர் என்று உணர்வுள்ள இந்து மதத்தவர் ஏத்த மாட்டார். செகப்பிரியரை (Shakespeare) நாம் பாராட்டுவோம். ஆனால் நம்மவர் என்று உறவு கொண்டாட மாட்டோம். இளங்கோவடிகளாரை மேலைநாட்டவர் புகழ்தல் கூடும்; ஆனால் அவரைத் தம்மவர் என்று உரிமை கொண்டாட மாட்டார்.

இஃது இங்ஙனமாகத் திருவள்ளுவரை எல்லா மதத்தவரும் எம்மவர் என்று போலி உரிமை கொண்டாட மடிதட்டி நிற்கின்றனர். சைவர் அவரைச் சிவநெறியினர் என்று செம்மாப்பர். வைணவர் அவரை ஆழ்வாராகக் காணும் அவாமிக்குடையர். சமணர் அவரை அமணராக்கி அகமகிழ்வர். பௌத்தர் அவரைப் புத்தநெறியினர் என்றொரு புதுமை புகல்வர். நபிகள் நெறியினர் என்று நாச்சுவைப்பர் அம்மதத்தவர். கிறித்தவப் போலியாக்குவர் ஏசு மதத்தவர்.

உண்மையே பேசுக. இஃது எல்லா மதத்தினர்க்கும் உடன்பாடேயாம். எனினும் திருவள்ளுவரைத் தம்மவராக்கும் முயற்சியில் எல்லாரும் தம்மை அறியாமலே உண்மையினின்றும் வழுவுகின்றனர். பொய்யை மெய்யென்று மயங்கி

அதை நிறுவப் படாதபாடுபடுகின்றனர். அதற்குக் காரணம் இந்நாள்வரை திருவள்ளுவரை நிகர்த்த அல்லது அவரின் மேம்பட்ட ஓர் அறிஞர் உலகில் பிறவாமையேயாகும். தேவர்களில் தனக்கு உவமை இல்லாதவன் இறைவன் என்று திருவள்ளுவர் கூறுகின்றார். மாந்தரில் தமக்கு உவமை இல்லாதவர் திருவள்ளுவர் என்று உலகம் போற்றுகின்றது. இத்துணைப் பெருமையுடைய திருவள்ளுவர் தமிழ்நாட்டில் பிறந்தது தமிழ் செய்த தவப்பயனே என்று அறிக.

மெய்யுணர்வு கூடிய புலவன்மார் நூல்கள் அவர் தம் புகழுடம்புகளாகப் பொலிந்து நிலவும். அவை காலவெள்ளத்தைக் கடந்து வாழும். அங்ஙனம் பல்லாயிரம் ஆண்டுகள் கடந்தாலும் இன்றும் முழுப் பொலிவுடன் ஒளி செய்வன தொல்காப்பியமும் திருக்குறளுமேயாம். வள்ளுவரின் பேரறிவில விளைந்த தெள்ளமுதமாகிய திருக்குறள் அப் பெருமானின் திருவுள்ளத்தைக் காட்டும் ஆடியாகும். திருவள்ளுவர் தாம் பற்றி நின்று ஒழுகிய சமயக் கருத்துக்களையே பல சமயத்தவரும் உவந்து ஏற்குமாறு அறிவுறுத்துகின்றார். இதுவே திருக்குறளின் சிறப்பாகும்.

சமய நூல்கள் தம்தம் சமயத்துக்கே ஏற்றம் தரும். அவை ஏனைய சமயங்களை மறுத்தும் இழித்தும் பேசும். அவை தாம் கூறுவதை நம்பாதவருக்கும மறுத்து உரைப்பவருக்கும் நல்கு விதிக்கும். பகவத்கீதையும் இதற்கு விலக்கு அன்று. கடவுள் சொன்னது என்று முதலில் ஒருவர் ஒன்றை விதிப்பதும், மதத்தலைவர் என்பார் அதை விலக்கி வேறு விதிப்பதும் மதக்குருக்கண்மார் அதனை விலக்கி மற்றொன்றை விதிப்பதும் உண்டு. இவை சமயக்கணக்கர் மதிவழிச் செல்வன.

திருக்குறள் அத்தகையது அன்று. அது கூறும் எவ்விதி-யும் மறுப்புக்கும் மாற்றத்துக்கும் ஆட்படுவது அன்று. அதிற்பயிலும் ஒரு சொல்லை நீக்கி வேறு சொல்லையிட்டும்

திருக்குறள் இடம் கொடாது. அது தான் கூறும் கருத்துக் களை உலகநடைக்கு ஒப்பவே கூறிக்கொண்டு வந்து பிறவி யின் பயன் ஆகிய பொருளை முடித்துக் காட்டும் ஒட்ப முடையது. இஃது என்போலவோ எனின் கடுத்தின்னா தானைக் கட்டிபூசிக் கடுத்தீற்றியவாறாம் என்க. இத்தன்மை யைக் ''சமயக் கணக்கர் மதிவழி கூறா, துலகியல் கூறிப் பொருளிது என்ற வள்ளுவன்'' என்று கல்லாடம் கழறும். திருவள்ளுவர் பெருமானின் இப்பெருமாட்சியைத் தேர்ந்தே உரையாசிரியர் காலிங்கர் அவரை ''வள்ளுவக் கடவுள்'' என்று வழுத்தி நின்றார். இத்துணைச் சிறப்புடைய திருவள்ளுவர் தமிழ் மண்ணில் பிறந்தது தமிழ் செய்த தவமே அன்றோ! இனித் திருக்குறளின் மாட்சியும் சிறிது தெரிப்பாம்.

## 2. தண்டமிழின் மேலாம் தரம்

தமிழ் பெருங்கடல் போன்றது. அக்கடலிலுள்ள நூல்கள் முழுவதும் உணர்ந்து தேர்தல் கூடுவதன்று. அங்ஙனம் தேர முயலின் சின்னாள் பல்பிணிச் சிற்றறிவினராய் மாந்தர் பிறவியின் பயனைப் பெறாதே முடிவர். எனவே கற்க வேண்டும் நூல்களையே கசடறக் கற்க வேண்டும். திருக்குற-ளும் ''கற்க கசடறக் கற்பவை'' என்றே கூறிற்று. தமிழ்ப் புலமையை விரும்பினார் தமிழில் தலைமைப்பாகுடைய நூல் களைக் கற்றுத் தேர்தலே சாலும். அத்தகைய நூல்கள் இவை என்று ஆன்றோர் உணர்த்தியுள்ளனர். அந்நூல்களின் விவரம் வருமாறு.

> ''வள்ளுவர்சீ ரன்பர்மொழி வாசகம் தொல் காப்பியமே
> தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை — ஒள்ளியசீர்த்
> தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
> தண்டமிழின் மேலாந் தரம்.''

இப்பாடல் திருக்குறள், திருவாசகம், தொல்காப்பியம், திருக்குறள் பரிமேலழகர் உரை, பெரியபுராணம், சிவஞான

சித்தியார் ஆகிய ஆறு நூல்களைத் தண்டமிழின் மேலாந்தரம் என்று உணர்த்துகின்றது. இவ்வுலக வாழ்வுக்கு உரிய அறத்தையும் வீட்டுலக வாழ்வுக்கு உரிய அறத்தையும் கூறும் சிறப்புப் பற்றித் திருக்குறள் முதலில் வைத்துக் கூறப்பட்டது 'தேவர் குறளும்' என்னும் பாடற்கண் ஔவைப் பெருமாட்டியும் உபநிடதம், தேவாரம், பிரமசூத்திரம், திருக்கோவையார், திருவாசகம், திருமந்திரம் ஆகிய சைவ நூல்களுக்கு முன்னர்த் திருக்குறளை ஓதுதல் காண்க. வீட்டின்பம் ஆகிய திருவை விரைவில் கூட்டுவிப்பது திருவாசகம். மொழி நடையையும் உலக நடையையும் செந்நெறிப் படுத்துவது தொல்காப்பியம். திருக்குறளுக்கு எழுந்த உரைகளில் இன்றுவரை வீறி விளங்குவது பரிமேலழகர் உரை. கற்பனையில் எழுந்த காவியங்கள் போலாது மெய்யடியவரின் மெய்வரலாற்றை உணர்த்தி உய்தி நெறி காட்டித் தெய்வமணம் பரப்பித் திகழ்வது திருத்தொண்டர் புராணம். தமிழர் தம் தெய்வங் கொள்கையை விளக்கும் சீரிய திருநூல் சிவஞான சித்தியார். இவ்வாறு நூல்களையும் உணராதார் தமிழையோ தமிழர் தம் ஒழுகலாற்றையோ உணராதாரே என்க. இப்பேருண்மை மேற்பாடலால் புலப்படுகின்றது. மெய்கண்ட தேவநாயனார் அருளிச்செய்த சிவஞான போதம் என்னும் அரிய நூலுக்குச் செய்யுள் வடிவில் ஆக்கப்பட்ட பேருரையே சிவஞான சித்தியார் என்று தெள்ளறிஞர் போற்றுவர் என்பதும் அறியற்பாலது.

திருக்குறளாகிய ஒரு நூலைக் கற்றாலே அவர் புலவராவர். வேறு நூல்களைக் கற்க வேண்டும் என்பதின்று என்றனர் தமிழறிஞன்மார். கீழ்வரும் பாடலைக் காண்க.

''ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின் - போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப் புலவு
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்''

3. இத்துணை மாட்சிமையுடைய திருக்குறளைப் பிழையற வுணர்ந்தோர் இந்நாளில் அருகி வருகின்றனர். இது பெரிதும் இரங்கத்தக்கது. திருக்குறளை ஓதியுணர எல்லா நாட்டினரும் விழைகின்றனர். தங்கள் மதநூலாகிய விவிலியத்துக்கு அடுத்த நூலாகத் திருக்குறளைப் போற்றுகின்றனர். இது நெஞ்சில் இன்பத்தை விளைக்கின்றது. ஆனால் தமிழர் திருக்குறளை முறையாக ஓதியுணராது உள்ளனரே! திருக்குறளில் வரும் சொற்களை அலைத்துப் பொருள் கூறும் பொல்லாங்கு புரிகின்றனரே! 'தன்னெஞ்சறிவது பொய்யற்க' என்னும் திருக்குறளைத் துவை துவை என்று துவைக்கும் தீவினையை அஞ்சாது புரிகின்றனரே! இதனை எண்ணும் போது நெஞ்சில் துன்பம் நிறைகின்றது.

அம்மட்டோ! திருக்குறளின் பெயரையும் பிழைபடாது கூறமாட்டாராய்த் தமிழர் உள்ளனர். வள்ளுவம் எனவும் திருவள்ளுவம் எனவும் பேசியும் எழுதியும் வருகின்றனர். திருக்குறளுக்குப் பத்துப்பெயர்கள் உள. அவற்றுள் திருவள்ளுவர் என்பது ஒன்று வள்ளுவம், திருவள்ளுவம் என்பன மரபறியாப் பெரியோரின் மடமையில் எழுந்த புதிய பிழைபடு வழக்குகள் ஆகும். ''இந்நூல் திருவள்ளுவர் எனக் கருத்தாவின் பெயர் காரியத்துக்கு ஆயிற்று'' என்று ஓதிய இலக்கண விதியை அன்னோர் மறந்து விட்டனர். ''முப்பால் வகுத்த திருவள்ளுவரே முதலான ஞானநூல்கள் என்ற நன்னூல் உரைச் சிறப்புப்பாயிரமும் ''தொல்காப்பியம் திருவள்ளுவர் கோவையார்'' என்று வரும் இலக்கணக் கொத்தும் அன்னோர் நினைவிலிருந்தும் அகன்று விட்டன. வள்ளுவம் எனும் மரபுநிலை திரிந்த ஆட்சி யாங்ஙனம் புகுந்ததோ அறிகிலம். மாந்தர் என்பது ஒருமையின்றி எக்காலும் பன்மையிலேயே பயிலும் ஒரு பெயர். இத்தன்மையை மொழியாராய்ச்சியில் வல்ல அருட்பெருகு தனிக்கடலாம் பாம்பன் குமர குருதாச அடிகளாரும் விளக்கியுள்ளார். தூயதமிழ் பேணுவாம் என்று பெருமை பேசிக் கொண்டு மாந்தன்

என்னும் வழுச்சொல்லைச் சிலர் ஆட்சி செய்கின்றனர். இங்ஙனம் தமிழன்னையின் திருமேனி மாசுண் செயலையாற்றி மகிழவும் சிலர் உளரே! திருவள்ளுவர் பெருமானை ''வள்ளுவன்'' என்று நாக்கூசாது சிலர் விளம்புகின்றனர். திருவள்ளுவரினும் இன்னோர் ஒட்பமும் திட்பமும் வாய்ந்த அறிவினர் போலும்! அவன் என்று பெரியோரைக் கூறுதல் அறிவுடைமையாங்கொல்? அவர்க்குரிய மதிப்பளித்துப் போற்றல் நம் கடனன்றோ? இனியேனும் மொழிவரம்பு கடவாது திருக்குறளையும் திருவள்ளுவரையும் போற்றி வாழ்வாமாக.

## 2. திருவள்ளுவர்

சாவா மருந்து வேண்டித் தேவரும் அசுரரும் பாற்கடலைக் கடைந்தனர். அமுதம் பிறந்தது. திருமால் அசுரரை வஞ்சித்தார். அவர் அமரருக்கே அமுத மூட்டினார். இது பண்டைப் பனுவல் பகர்வதாகும். யாரையும் துணை வேண்டாது திருவள்ளுவர் அறிவாகிய கடலைக் கடைந்தார். அதில் திருக்குறள் என்னும் அமுதம் பிறந்தது. அதனை அவர் இன்னோர்க்கு என்னாது இன்னார் என்று இகழாது எல்லார்க்கும் வழங்கினார். தேவரே கொள்க என்று வஞ்சித்து ஊட்டிய திருமால் போலத் தமிழரே கொள்க என்னாது உலகமாந்தர் யாவரும் கொள்க என்று வழங்கியருளினார்.

இத்தகைய வள்ளலின் வரலாறு இஃதே எனத் துணிந்து கூற முடியவில்லை. அவர் பிறப்பைப் பற்றியும் வளர்ப்பைப் பற்றியும் வாழ்கையைப் பற்றியும் பலகதைகள் வழங்குகின்றன. அவை யாவும் கற்பனைகளேயன்றிக் கட்டுரைகள் அல்ல. உண்மை சிறிதும் கலந்தவையல்ல அவை. நம்முன்னோர் திருவள்ளுவரைப் பற்றிப் புனைந்த கதைகளே அவை. இந்நிலை தமிழர்க்குப் பெருமை கூட்டுவது அன்று.

### 1. கற்பனையில் விளைந்த கதைகள்

அ) கபிலர் அகவல் என்று ஒரு நூல் உள்ளது. அந் நூல் கடைச் சங்கப் புலவரும் பாரியின் நண்பருமான கபிலர் இயற்றியது என்று கூறப்படுகின்றனது. உருவத்தால் குறிய தாயினும் பொருள்வளத்தால் உயர்ந்து நிற்பதாகும். அந் நூல் நடை வளத்தால் அண்மைக் காலத்ததாகத் தன்னைக் காட்டிக் கொண்டு நிற்கின்றது. கபிலர், ஔவையார், திருவள் ளுவர், வள்ளி, அதியமான், உப்பை, உறுவை என்னும் எழு வரையும் ஒரு தாய் வயிற்று மக்கள் என்று அந்நூல் கதை கூறு கின்றது. மேலும் அது திருவள்ளுவரின் தாய் கருவூர்ப் புலைச் சியான ஆதி என்றும் தந்தை திருவாரூர்ப்பார்ப்பனனான பக வன் எனவும் கூறுகின்றது. திருப்புகழ் அருளிச் செய்த அருண கிரிநாத முனிவரைப் பார்ப்பனராக்கப் பெருமுயற்சி இஞ் ஞான்று நிகழ்வது போல அந்நாளிலும் நிகழ்ந்ததையே கபிலரகவல் உணர்த்துகின்றது. நூலின் நடை சங்க நாட் கபிலர் நடையும் அன்று; பதினொன்றாம் திருமுறையில் இடப் பெற்றுள்ள கபில தேவ நாயனார் நடையும் அன்று; பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புலவரின் நடை என்றே கணிக்கவுள்ளது. பண்டைத் தமிழ் நூல்களில் பயின்று வராத

பஞ்சேந்திரியம், சலம், புத்திரர், சண்டாளி முதலிய வட சொற்கள் இந்நூற்கண் உள. மேலும் பிரமனுக்குக் கூத்தி வயிற்றில் வசிட்டனும், வசிட்டனுக்குச் சண்டாளி வயிற்றில் சத்தியும், சத்திக்குப் புலைச்சி வயிற்றில் பராசரனும், பரா சரனுக்கு மீன் வாணிச்சி வயிற்றில் வியாதனும் பிறந்த கதை களைப் பேசுகின்றது. பராசரன் மீன் வாணிச்சியைப் புணர்ந்த முறை புல்லிதேயாம். மற்றும் சங்க நூல்களின் விவரம் கூறும் இறையனராகப் பொருளுரை கபிலரகவல் என்று ஒரு நூலி லிருந்ததெனக் கூறிற்றில்லை. உரையாசிரியின்மார் ஆட்சி யிலும் அஃது இடம் பெற்றிலது. இந்நூலை முரணி ஞானா மிர்தம் என்னும் நூல் யாளித்தத்தன் என்னும் பார்ப்பனனுக்

கும் பார்ப்பனி என்று கருதப்பட்ட புலைச்சி ஒருத்திக்கும் மகனாகத் திருவள்ளுவர் பிறந்தார் என்று கூறுகின்றது. திருமுருகன் திருவருட்கடலில் திளைத்தாடிய பாம்பன் குமர குருதாக அடிகளார் கபிலரகவல் பற்றிக் கூறுமாறு கீழே காண்க :

''அவர் ஆதி என்னும் தாயையும் பகவன் என்னும் தந்தையையும் உடையர் என்றல் ''அகர முதல எழுத் தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு என்னின் அவர் வாக்கினின்றே ஊகித்தலாக எழுந்தது என்பதூஉம், அவ் வெழுச்சியை விளக்கிக் காட்டற்காய கபிலரகவலானது விசாகப்பெருமாளையர் சரவணப் பெருமாளையர் எனும் வீரசைவர்களால் முன்னர்ச் சில அடிகளும் பின்னர்ச் சில அடிகளுமாக வரைந்து திருக்குறள் பதிப்புகளிலே சேர்க்கப் பட்டது என்பதூஉம் சாதிப்பான் மேற்கோள் பலப்பல காட்டி ஆய்வும் எழுதியுள்ள புத்தகம் என்னால் பார்வையிடப் பட்டது.''

மேலும் 1831இல் அச்சிடலாய திருக்குறளில் அதன் ஆசிரியர் யாரோடும் பிறந்தனர் என்பதொன்றுமின்று. 1835 ஆம் வருடத்தும் அதன் பின்னரும் அச்சிடப்பட்ட படிகளிலே யே அஃதுண்டு என்றும் அப்புத்தகம் அறைவதாகச் சுவாமி கள் அருளியுள்ளார்.

கந்தபுராண காலத்து வள்ளிப் பிராட்டியைத் திருவள்-ளுவரின் உடன்பிறந்தாளாகக் கனவுகாணும் கபிலரகவல் ஆராய்ச்சிக்கே உரியதன்று தூய தமிழ்வளர்த்து ஏற்றமும், தோற்றமும் படைத்த பெருமகனார் ஒருவர் இக்கபிலரகவல் கூற்றுக்களை ஒன்று கொண்டு ஆராய்வது இறும்பூதே என்க. கபிலர் என்பார் ஒருவரை ஆகமநூல் ஆசிரியராகப் பத்திர-கிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல் என்ற நூலைக் கூறும். ஞானவெட்டியான் என்றதொரு நூல் இயற்றியவர் திருக்-

குறள் தந்த திருவள்ளுவர் தாமே என்றொரு பெரும் பொய்யையும் அஞ்சாது கூறியுள்ளார் என்பதும் அறியற்பாலது.

ஆ) திருவள்ளுவர் பெருமான் உழவு, வணிகம், அரசு, பற்றிய செய்திகளைத் திருக்குறளில் கூறியுள்ளார். நெய்தல் தொழில் பற்றி யாதும் கூறினாரல்லர். புலவன்மார் அவரை நெய்தல் தொழில் புரிபவராகக் கற்பனை செய்து களித்தனர். அத்தொழிலால் ஏலேல சிங்கர் என்னும் வணிகரின் நட்பு வாய்த்ததாம். அங்ஙனம் நட்புக் கிழமை பூண்ட அவ்வணிகர் பின்னர்த் திருவள்ளுவருக்கு மாணாக்கராய் ஒழுகினராம்.

சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறமரிது. இதனை அடிப்படையாகக் கொண்டு பல கதைகள் எழுந்தன. அவற்றுள் திருவள்ளுவர்/ஏலேல சிங்கர் கதையும் ஒன்று.

ஒரு நாள் திருவள்ளுவர் ஏலேல சிங்கர் வீட்டுக்குச் சென்றார். பணியாள் அவரை வரவேற்று அமரச் செய்து ஏலேல சிங்கர் சிவபூசையில் இருக்கும் செய்தியைக் கூறினான். அது கேட்ட ஆசிரியர் ''செட்டியார் சிவபூசையில் இருக்கின்றாரா, குப்பத்தில் இருக்கின்றாரா என்று வினவினராம். பூசை முடிந்து வந்த ஏலேல சிங்கர் தம் ஆசிரியர் கூறியதைக் கேட்டுச் சிவபூசையிலிருந்தபோது தம் மனம் குப்பத்தில் செய்த வாணிகம் பற்றிச் சிந்தித்ததை எண்ணி நாணமடைந்தாராம். இங்ஙனம் சிவபூசையில் சிந்தை நில்லாக் குற்றத்தைத் திருவள்ளுவர் எடுத்துக் காட்டி ஏலேல சிங்கரை நல்லாற்றுப்படுத்தினராம்.

மற்றொரு நாள் ஆசிரியர் ஏலேல சிங்கரை ஒரு பெரிய மரத்தின்மீது ஏறச்செய்து அம்மரத்தின் கிளையொன்றைப் பிடித்துக் கொண்டு தொங்குமாறு கூறினார். அங்ஙனமே தொங்கிக் கொண்டிருந்த ஏலேல சிங்கரைக் கிளையைப் பிடித்துக் கொண்டிருந்த கைகளை எடுத்து விடும்படி சொன்னார். அவரும் கைகளை விட்டுவிட அவர் கீழே விழாது

அப்படியே இடைவெளியில் நின்று கொண்டிருந்தனராம். மீண்டும் ஒரு நாள் தம்மைத் தொடர்ந்து வரும்படி ஏலேல சிங்கருக்குக் கட்டளையிட்டு விட்டுத் திருவள்ளுவர் வெள்ளம் பெருக்கெடுத்தோடும் ஆற்றில் இறங்கிச் சென்றனர். ஏலேல சிங்கர் சிறிதும் அஞ்சாது வள்ளுவரைப் பின்தொடர்ந்து ஆற்றைக் கடந்தாராம். ஏலேல சிங்கரின் கப்பல் ஒருமுறை தரைதட்டிப் போயிற்று. அதைக் கடலுள் செலுத்த எத்தனை-யோ பேர் முயன்றும் முடியவில்லை. அதனையறிந்து திருவள்ளுவர் வந்து கப்பலைத் தம் கையால் தொட்டு ''ஏலையா'' என்று கூறி அதனை இழுக்கும்படி சொன்னார். அவ்வாறே செய்யவும் கப்பல் கடலில் செல்லலாயிற்று. அன்று முதல் ஏலையா என்று கூறிப் படகு செலுத்தும் வழக்கம் தொடக்க முற்றது.

ஓர்யாண்டு மழையின்மையால் அஃகம் சுருங்கிப் போ-யிற்று. அஞ்ஞான்று திருவள்ளுவர் ஏலேல சிங்கரை நோக்கி'' நின்களஞ்சியத்தைத் திறந்து அதில் உள்ள நெல்லைக் கொண்ட விலைக்குக் குறுணிகூட அளந்து விற்கும்படி சொன்னார். ஏலேல சிங்கர் அப்படியே செய்தார். வற்கடமும் ஒழிந்தது. ஏலேல சிங்கரின் செல்வமும் பெருகியது.

ஒரு நாள் தமக்கு ஆசிரியர் இட்ட ஆணைப்படி ஏலேல சிங்கர் தம்பால் இருந்த பொன்னையெல்லாம் உருக்கிக் கட்டியாக்கி அதில் தம் பெயரைப் பொறித்துக் கடலில் எறிந்து விட்டார். சில ஆண்டுகள் கழிந்தன. கடல்பாசி முதலிய அழுக்கெல்லாம் பொற்கட்டியில் படிந்து அதன் நிறத்தையே மாற்றிக் கல்லைப் போன்று காட்சியளிக்கச் செய்தது. அக்கட்டி வலைஞர் கையில் சிக்கி மீட்டும் ஏலேல சிங்கர்பால் வந்தது. அவர் அதை வீட்டு வாயிற்படிக்கு இட்டார். மக்கள் கால் அடிக்கடி பட்டு அழுக்கெல்லாம் நீங்கி அக்கல் மினுக்கம் செய்வதாயிற்று அதுகண்ட ஏலேல சிங்கர் அதனை நன்கு ஆராய்ந்து நோக்கி அதில் தம்பெயர்

பொறித்திருப்பதைக் கண்டார். கண்டு முன்பு ஆசிரியரின் ஆணைப்படி தாம் கடலில் வீசிய பொற்கட்டியே அஃது என்று அறிந்து தம் பொருளாய அஃது ஒழிந்துபடாமல் தம்பாலேயே வந்து சேர்ந்தது கருதி விம்மிதமும் மகிழ்ச்சியும் அடைந்தார்.

இ) ஈண்டு யாவரும் அறிந்து கொள்ள வேண்டிய இன்றியமையாச் செய்தி ஒன்று உள்ளது. அது வருமாறு :

கிறித்தவர் திருவள்ளுவர் பெருமானைத் தம்மவராக்குதற்குப் பல்லாற்றானும் முயன்றனர். அவற்றுள் ஒன்று ஆமாறு :- ஏசு கிறித்துவின் மாணாக்கரான தோமா என்பவர் கிறித்தவ மதத்தைப் பரவச் செய்யத் தமிழ்நாடு வந்தார் என்றும் அவரிடம் திருவள்ளுவர் அறவுரைகள் கேட்டார் என்றும் அவ்வறவுரைகளையே திருக்குறள் என்னும் நூலாக்கினர் என்றும் ஒரு புரளி கிளப்பினர். இந்தத் தோமா கிறித்துவையே நம்பாது இருந்தவர் தம் நண்பர்கள் செய்து வந்த சமயப் பணியிலும் கலந்து கொள்ளாதவர். அவர் தமிழ் நாடு வந்தார் என்பது பூனை புலியாயிற்று என்பது போன்றதே. திருமயிலையில் தோமா என்பவர் தங்கியது உண்மையெனில் அவர் நம் நாட்டுக்கு வந்த மேனாட்டு வணிகக் குழுவுடன் வந்த ஒரு பாதிரியாகலாமேயன்றி இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் இருந்தவராகார் என்க. திருவள்ளுவர் ஏசு கிறித்து பிறப்பதற்கு முன்பு வாழ்ந்தவர் என்பதும் நோக்குக.

இங்ஙனம் இது மறுக்கப்படலாம் என்று எண்ணிப்போலும் மற்றொரு புரளியையும் அன்னோர் பரப்ப முயன்றனர். இந்தத் தோமா என்பவரே ஏலேல சிங்கர் என்பவர் என்னும் புனைந்துரையே அது. இக்கதையை ஜே. ஆர். ஆர்னல்ட் சதாசிவம் பிள்ளை எழுதிய பாவலர் சரித்திர தீபகம் என்னும் நூலில் காண்க. கட்டுக் கதையை எப்படிக் கூறினாலும் என்ன பயன்? பொய் என்றும் பொய்யே.

ஈ) காவேரிப் பாக்கம் என்னும் ஊருக்குத் தலைவர் மார்க்கசகாயர் என்னும் வேளாண்குடிப் பெருமகனாராவர். அவர் ஆயிரம் ஏர் வைத்து உழவுத் தொழில் நடத்தி வந்தார். அவர்தம் விளைபுலன்களில் வித்திடப் பெற்றுப் பயிர் கிளைக்கும் காலத்து ஆண்டிருந்த பார்ப்பன அரக்கன் (பிரமராட்சதன்) ஒருவன் அவைகளைப் பாழ்படுத்தி வந்தான். அவனை விரட்ட யாராலும் முடியவில்லை. அதுகண்ட அச்செல்வர் அப்பார்ப்பன அரக்கனைப் பகுப்பாற்குத் தன் மகளை வாழ்க்கைத் துணையாக்கும் கருத்தினரானார். இந்நிலையில் திருவள்ளுவர் தம் பெருமையைச் செவியுற்ற அவர் வள்ளுவரை அண்மித்தம் குறையைத் தீர்க்குமாறு முறையிட்டார். திருவள்ளுவரும் காவேரிப் பாக்கம் எய்தி ஐந்தெழுத்து ஓதிப் பார்ப்பன அரக்கனை ஓட்டினார். அதனால் மகிழ்ந்த மார்க்க சகாயர் தம் மகளைத் திருமணங் கொள்ளுமாறு வேண்டினார். அவ்வேண்டுகோளைச் செவிக் கொண்ட திருவள்ளுவர் மார்க்க சகாயரிடம் இருப்புக் கடலையைத் தந்து அதனை அவர் மகள் வாசுகி அம்மையாரால் அவைத்துக் கொடுக்குமாறு கூறினார். வாசுகியும் இருப்புக் கடலையை அவைத்துத் தந்தார். திருவள்ளுவரும் அவளைத் திருமணங் கொண்டருளினார்.

உ) இங்ஙனம் இல்லறம் மேற்கொண்ட திருவள்ளுவர் பால் ஒருவர் வந்து இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதா என்று வினவினார். நாயனார் அவரைத் தம்முடன் சிலநாள் இருக்கும்படி கூறினார் ஒருநாள் திருவள்ளுவர் 'வாசுகி!' என்று கூப்பிட்டார். அம்மையார் அப்போது கிணற்றில் நீர் சேந்திக் கொண்டிருந்தார். கணவர் குரலைக் கேட்டதும் கயிற்றையும் குடத்தையும் அப்படியே விட்டுவிட்டு வந்தார். கயிறும் குடமும் கிணற்றில் விழாமல் வாசுகி விட்டுவிட்டு வந்த நிலையிலேயே இருந்தன. மற்றொரு நாள் அம்மையார் திருவள்ளுவருக்குப் பழஞ்சோறு படைத்தார். வள்ளுவர்

''வாசுகி! சோறு சுடுகிறது விசுறு'' என்றார். வாசுகி விசிறி கொண்டு விசிறினார். பழஞ்சோற்றிலிருந்து ஆவி பறந்து சென்றது. வேறொரு நாள் நண்பகலில் நாயனார் ஆடை நெய்து கொண்டு இருக்கையில் நூல் குழல் கீழே விழுந்து விட்டது. உடனே நாயனார் ''வாசுகி! நூல் குழல் கீழே விழுந்து விட்டது தேடி எடுப்பதற்கு விளக்கு கொண்டு வா'' என்றார். அம்மையாரும் விளக்கு ஏந்திக் கொண்டு வந்தார். இவற்றையெல்லாம் ஐயம் நிகழ்த்தினவர் கண்டார். ''இல்லதென இல்லவள் மாண்பானால்'' என்று தெளிந்து விடைபெற்றுக் கொண்டு சென்றார்.

ஊ) திருவள்ளுவரின் பொறுமையை விளக்க எழுந்த கதையும் ஒன்றுள்ளது. வள்ளுவர் தாம் நெய்த ஆடையினை விலை கூறிக் கொண்டிருந்தார். ஒருவன் அந்த ஆடையின் விலையைக் கேட்டான். அவர் நான்கு பணம் என்றார். அவன் அந்த ஆடையை வள்ளுவரிடமிருந்து வாங்கி இரண்டாகக் கிழித்து அந்தப் பாதியின் விலை யாது என்றான். அவர் இரண்டு பணம் என்றார். அந்தப் பாதியை மேலும் இரண்டாகக் கிழித்து விலை கேட்டான். அவர் ஒரு பணம் என்றார். இப்படிப் பல துண்டுகள் செய்து அவன் விலை உசாவியபோதும் வள்ளுவர் முகம் கோணாமல் விடை கூறிக் கொண்டு வந்தார். இப்படிச் செய்தும் வள்ளுவர் சினம் கொள்ளாதது கண்ட அவன் அவரது இல்லம் சென்று வாசுகி அம்மையாரை வம்பு செய்தான். அது கண்ட வள்ளுவர் அவனை நையப் புடைத்தார். அவன் ''ஐயா!'' அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலத் தம்மை இகழ்வாரைப் பொறுத்தல் தலை என்று பாடிய புலவர் நீவிர் தாமோ ''என்றான் நாயனார்'' அதை மட்டுமா பாடினேன்! செய் தக்க அல்ல செயக் கெடும் செய்தக்க, செய்யாமை யானும் கெடும் ''என்றும் பாடினேன். செய்தக்க அல்ல செயக் கெடும் என்பதற்கு நீ எடுத்துக் காட்டானாய் செய்தக்க

செய்யாமை யானும் கெடும் என்பதை நான் உனக்கு உணர்த்தினேன்'' என்றார்.

ஏ) நாயனார் தாம் அருளிய திருக்குறளை அரங்கேற்றும் பொருட்டு மதுரையை அடைந்தார் என்றும் அக்காலை மதுரையில் ஆட்சி புரிந்தவன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி என்றும கூறுவர். அவ்வேந்தன் அவைக் களத்தை அடைந்த வள்ளுவர் புலவன்மார் அமர்ந்திருந்த சங்கப் பலகையில் அமரப் புகுதலும் அப்பலகை அவரளவில் சுருங்கி ஏனைய புலவன்மாரைக் கீழே தள்ளி விட்டது என்றும் அக்காலை திருவள்ளுவரோடு ஒக்க இருக்கும் தகுதி பெற்றவர் உருத்திரசன்மரே என்று வானிழல் கூறியது என்றும் கூறுவர். இதற்கு,

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை ஒக்க — இருக்க
உருத்திர சன்மர் எனவுரைத்து வானில்
ஒருக்கவோ என்றதோர் சொல்

என்ற பாடலை மேற்கோளாகக் காட்டுவர்.

ஏ) வாசுகி அம்மையார் இவ்வுலகை விட்டு நீங்கும் போது அவர் உள்ளத்தில் ஓர் எண்ணம் ஊசலாடிக் கொண்டிருந்தது. அஃது உணர்ந்த திருவள்ளுவர் அம்மையாரை வினவினார். வள்ளுவர் உணவு கொள்ளும் வேளைகளில் அவர் விழைவின்படி வாசுகி அம்மையார் ஒரு கிண்ணத்தில் நீரும் ஓர் ஊசியும் வைப்பார். ஆனால் அவை ஒரு நாளும் பயன்படுத்தப்படவில்லை. அவற்றை வைக்குமாறு சொன்ன காரணம் யாது என்று அம்மையார் வினவினார். அதுகேட்ட நாயனார் புன்சிரிப்புடன் ''உணவு படைக்குங் காலைச் சோறு கீழே சிந்திவிடுதல் உண்டு. அப்படிச் சிந்தினால், சிந்திய சோற்றுப் பருக்கையை ஊசியால் எடுத்துக் கிண்ணத்தில் உள்ள நீரில் அலம்பித் தூய்தாக்கி உண்கலத்தில்

இட்டுக் கொள்ளுதல் முறையாகும். அதற்காகவே அவற்றை வைக்கும்படி சொன்னேன். ஆனால் நீ பரிமாறும் போது சோறு ஒரு நாளும் கீழே சிந்தவில்லை. எனவே அவற்றைப் பயன்படுத்தும் வாய்ப்பு நேரவில்லை'' என்றார். அதுகேட்ட அம்மையார் உள்ளம் அமைதி பெற்றது. அவர் இவ்வுலகைத் துறந்தார். அக்காலை நாயனார்

அடிசிற் கினியாளை அன்புடை யாளைப்
படிசொற் பழிநாணு வாளை — அடிவருடிப்
பின்தூங்கி முன்எழுர் பேதையை யான்பிரிந்தால்
என்தூங்கும் என்கண் எனக்கு

என்று வருந்தினர் என்பர். இப்பாடல் நச்சினார்க்கினியரால் தொல்காப்பியவுரைக்கண் காட்டப்படுவதால் பழம் பாடலே ஆகும்.

ஐ) இறைவன் திருக்கூத்தாடினன் அக்காலை அவன் ஒரு காலை மேல்நோக்கி எடுத்தனன் அதன் காரணம் அறியமாட்டாத தேவர் யாவரும் திரண்டு வந்து திருவள்ளுவரை வினவினர். நாயனர் இறைவன் திருவருளைச் சிந்தித்து

''பூவில் அயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி அளந்தோனும் தாம் இருக்க — நாவில்
இழைநக்கி நூல்நெருடும் ஏழை அறிவனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்தன் கூத்து''.

என்று விடையளித்தார் என்ப. எம்பெருமான் ஆடும்போது அவன் திருச்செவியில் இருந்த குழை நழுவிக் கீழே விழுந்தது. பெருமான் அதைத் தம் திருவடியால் எடுத்துக் காதில் பொருத்திக் கொண்டார் என்று இந்தப் பாடல் கரைகின்றது. சிவபெருமான் காதிலிருந்து குழை கீழே விழுந்ததும் அவன் அண்டமுற நிமிர்ந்து ஆடியதும் எக்காலம்? திருவள்ளுவர்

வாழ்ந்தது எக்காலம்? கால உணர்ச்சியே இன்றிக் கலைஞர்கள் இத்தகு கதைகளைக் கட்டிப் பரப்பியுள்ளனரே.

2. பாம்பன் அடிகளார் செவியறிவுறூஉ என்னும் திரு நூல் ஒன்று அருளிச் செய்துள்ளார். உருவத்தில் சிறியதும் பொருள் வளத்தில் பெரியதுமான அந்நூல் மாந்தராவார் ஒவ்வொருவரும் பயின்று தெளியவேண்டும் சிறப்பினதாகும். அதில் திருவள்ளுவர் செய்தி கூறும் கல்வெட்டுப் பாடல்கள் இரண்டு காட்டப்பட்டுள்ளன. அவை வருமாறு :

அ) ''மலர்கலி யுலகத் துன்னிய மேலோன் வள்ளலெண்
குணன் அற வாழி
குலகுரு மரபோன் கொற்றவன் என்னும் குடமது ராபுரிக்
கச்சன்
தவமதில் உதித்த தண்டமிழ் மறையோர் சருவமும்
உணர்ந்தபா வலனே
தலமெலா முதற்சீ ராகுல வியார சங்கமெய்ந் நாயனே
அருளே''.

ஆ) ''செந்நாப் புலவர் சீர்பெயர் பெற்றுத் தெண்ணிறை
திருக்குறள் அருளி
நன்னா வலர்க்கு நாவுரம் ஈந்து நானிலத் தோர் நல
முற்றார்
புன்னா அடியேன் போற்றவும் அறியேன் புனிதமெய்ஞ்
ஞானமா அமுதே
தின்னனூர் மேய திருவளூர் ஆனாய் சின்மய நாயனே
அருளே''.

இப்பாடல்கள் தமிழ் நாட்டிலே வடமதுரை என்னும் ஊரிலே வைகிய கச்சன் என்னும் சிற்றரசன் மகனே திருவள்ளுவர் எனக் கூறுதலையும் அவருடன் பிறந்தார் பற்றி ஏதும் குறியாமையும் காண்க. இப்பாடல்களும் பின்னாள் பாடல்களேயாம், உண்மையாது என்பது தெரியவில்லை. இப்-

பாடல்கள் உண்மையை உணர்த்த வேண்டியே ஈண்டுக் காட்டினாம்.

நற்புலமை வாய்த்த எம் நண்பர் ஒருவர் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர் என்னும் நூலை இயற்றியுள்ளார். அதன்கண் பாம்பன் அடிகளார் பற்றி அவர் தந்துள்ள செய்திகளில் சில அவர்தம் கற்பனையாயேவுள. இருபதாம் நூற்றாண்டுச் சான்றோர் வரலாறே இந்நிலையிற்று எனில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டு வாழ்ந்த திருவள்ளுவர் வரலாற்றில் கற்பனைச் செய்திகள் காணப்படுதல் வியப்பு ஆமோ? காணப்படாதிருப்பின் அன்றோ வியப்புக்கு உரியதாகும். இத்தகைய கற்பனைகளில் ஆழ்ந்து விடாது திருவள்ளுவர் பெருமான் அருளிய திருக்குறள் வகுக்கும் நெறியில் வாழ்ந்து உய்தி பெறுவோமாக. அக்கற்பனைக் கதைகள் காலக் கழிவில் கரந்துபடுதல் கூடும். கரந்துபடின் நம் முன்னோர் திருவள்ளுவர் பற்றிப் புனைந்த கற்பனைகளை அறிந்து சுவைத்தற்கு இயலாதன்றோ! அங்ஙனம் சுவைத்து இன்புறல் வேண்டும் என்று கருதியே அவற்றை ஈண்டு விரித்தனம் என்று அறிக.

தமிழாசிரியன்மார் திருவள்ளுவர் பெருமானுக்குப் பல பெயர்கள் சூட்டி மகிழ்ந்தனர். அவற்றுள் பத்துப் பெயர்கள் பலராலும் பாராட்டப் படுகின்றன. அப்பெயர்களுக்குக் கூறப்படும் காரணங்களும் பிற்றை நாளறிஞர் கற்பனைகளேயாம். உண்மைக் காரணங்களை உணரக் கூடவில்லை. அவற்றைக் காண்பாமாக.

## 3. ஆசிரியரின் பெயர் விளக்கம்

### அ) திருவள்ளுவர்

திருவள்ளுவர் என்னும் பெயருக்குப் பல காரணங்கள் கற்பிக்கப்படுகின்றன. பிறந்த குடி பற்றி வந்த பெயர் என்று

கூறுவர் சிலர். இவர் கீழ்வரும் திருவள்ளுவமாலைப் பாடலைச் சான்றாகக் காட்டுவர்.

''அறம்பொருள் இன்பம்வீ டென்னும் அந் நான்கின்
திறம் தெரிந்து செப்பிய தேவை — மறந்தேயும்
வள்ளுவன் என்பான் ஓர் பேதை யவன்வாய்ச் சொல்
கொள்ளார் அறிவுடை யார்.''

மாமூலனார் அருளிய இதில் வரும் ''வள்ளுவன் என்பான் ஓர் பேதை'' என்னும் தொடர் திருவள்ளுவர் பிறந்த குடியின் தாழ்வைக் காட்டும் என்பர். சங்க காலத்தில் வேற்றுமை தெரிந்த பல குடிகள் இருந்தனவாயினும் குடியின் உயர்வு தாழ்வு கற்பிக்கும் முறை காணப்பட்டிலது. அவரவர் செய்யும் தொழிற்கேற்பச் சிறப்பும் கொள்ளப் பட்டது. திருக்குறளும் ''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும், சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமையான்'' என்றே கூறிற்று.

இன்னோர் கருதுமாறு அவரை ''வள்ளுவன்'' என்று கூறுதல் பேதைமைத்து எனில், அவர்தம் இயற்பெயரைக் கூறிப்போற்றுதலே செய்தற்பாற்று. இயற்பெயரை இப்பாடலோ, திருவள்ளுவ மாலையில் உள்ள ஏனைய பாடல் களோ வேறு தமிழ் நூல்களோ உணர்த்தின அல்ல. திருவள்ளுவரின் உண்மை வரலாற்றைக் கூறுவது என்று மறைமலையடிகளும் பிறரும் கொண்டாடும் கபிலரகவலும் இயற்பெயரை உணர்த்திற்றில்லை அந்நூலும் வள்ளுவன் என்றே குறித்தலான் அதைப் பாடிய ஆசிரியரும் வள்ளுவரின் இயற்பெயரை உணர்ந்திலர் என்றே முடியும். மேற்பாடலில் திருவள்ளுவரைப் போற்ற வேண்டும் முறை பற்றிய விளக்கமும் இல்லை. ஆசிரியரால் அருளப் பட்ட நூலும் ''திருவள்ளுவர்'' என்ற பெயரைக் கொண்டுள்ளதே யன்றி இயற்பெயரைக் கொண்டிலது. திருக்குறளின் சிறப்புப் பாயிரமாகக் கருதப்படும் நூலும் 'திருவள்ளுவ மாலை' என்ற

பெயரால் அமைந்துள்ளது. இங்ஙனம் யாவரும் ஆசிரியர் பெருமானைத் திருவள்ளுவர் என்றே குறிக்கின்றனர். எனவே 'வள்ளுவன் என்பான் ஓர் பேதை' எனல் பயனில் லாது ஒழியும். அது நறிதன்று.

திருவள்ளுவ மாலையை ஊன்றி நோக்கின் வள்ளுவர் என்பது குடிப்பெயர் அன்று என்பது விளங்கும். திருவள்ளுவ மாலையில் ஐந்து பாடல்களே ஆசிரியரை 'வள்ளுவன்' என்று ஒருமையில் வைத்துக் கூறும். ஏனைய பாடல்கள் வள்ளுவர், வள்ளுவனார், திருவள்ளுவர் என்று உயர்வுப் பன்மையி லேயே கூறும நாமகள் பாடலும், இறையனார் பாடலும் நான்முகனே வள்ளுவராய் வந்தான் என்னும் உக்கிரப் பெருவழுதி பாடலும், காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடலும் மேற் காட்டிய பாடலுமே ஆசிரியரை ஒருமையில் வைத்துக் கூறுவன. அச்செயல் ஏற்புடைத்தே. ஆயின் 'வள்ளுவன் என்பான் ஓர் பேதை' என்பதன் கருத்து யாது?

திருவள்ளுவர் என்றும் வள்ளுவர் என்றும் வள்ளுவனார் என்றும் சிறப்பித்துப் பேசற்கு உரிய தெய்வத் திருவினாரை 'வள்ளுவன்' என்று ஒருமையில் வைத்துப் பேசுதல் சிறுமை செய்வதாகும். எனவே அங்ஙனம் பேசல் வேண்டா பேசுவார் உளரேல் அன்னோர் தம்பேதைமையை வெளிப்படுப்பாரே யாவர். இதனையே மேற்பாடலில் மாமூலனார் கூறுகின்றார். இந்நெறியை

i) ''தெருவந்து தபகுரவர் பேர் உரையார் இல்லத்
துறுமி நெடிதும் இரார் பெரியாரை
என்றும் முறைகொண்டு கூறார்'' (ஆசாரக் கோவை)

ii) நாண் இலன் நாய் நன்குநள்ளாதான் நாய் பெரியார்ப்
பேணிலன் நாய்'' (சிறுபஞ்சமூலம்)

என்னும் பாடல்கள் உணர்த்துதல் காண்க. 'வள்ளுவன்' என்று இக்காலக் கவிஞர் பாடுகின்றனரே எனில் அன்னோர் ''பாரததேவிதன் இருதாளினை'' என்றும் பாடிப் பாரத தேவியை நாற்காலியாக்குதலும் செய்வர். எனவே அவர் பற்றிக் கவலற்க. முன்னோரிலும் சிலர் கூறினரே எனில் அவரை நோக்கியே மாமூலனார் பாடல் எழுந்தது என்க.

''வள்ளுவன் சாக்கை'' என்னும் பெயர் மன்னற்கு உட்படு கருமத் தலைவற்கு ஒன்றும் என்று பிங்கலந்தை கூறுதலானே திருவள்ளுவர் அரசருக்கு உட்படு கருமத் தலைவராய் (PRIVATE SECRETARY) இருந்தார் எனபர் சிலர். நிகண்டு கூறும் வழக்கு சங்க காலத்தில் நிலவியிருந் தமைக்குச் சான்று இல்லை. அன்றியும் நாயனாரின் இயற் பெயர் யாது என்பதற்கும் இது விடையிறுப்பதாய் இல்லை.

தமிழ்நாட்டுப் பழங்குடியினரில் வள்ளுவர் என்பார் ஒரு பிரிவினராவர். அவர் அரசரின் பட்டத்து யானை மீது அமர்ந்து திருநாள், படைநாள், மணநாள் செய்திகளை முரசறைந்து மக்களுக்கு அறிவிப்பர். இவ்வுண்மையை

i) ''அரசு கொற்றத் தருங்கடம் பூண்ட
முரசெறி வள்ளுவ முதியனைத் தரீஇ'' எனவும்

ii) ''திருநாள் படைநாள் கடிநாள் என்றிப்
பெருநாட கல்லது பிறநாட் கறையாச்
செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்''

எனவும் பெருங்கதை உணர்த்துகின்றது. ஆகலின் பறை யறைவோருக்கும் முரசறைவோருக்கும் இடையில் உள்ள வேற்றுமை பெரிது. இதனால் வள்ளுவர் என்பது குடிபற்றி வந்த பெயரே என்பர் பண்டித நாவலர். ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் இப்பெயர் சாதிபற்றி வந்ததென்று

முதலில் கூறிய மறைமலையடிகளார் திருக்குறள் ஆசிரியருக்குத் திருவள்ளுவர் என்னும் பெயரை உலகத்தார் வழங்கி மகிழ்ந்தனர் என்றும் கூறுவர். அஃதங்ஙனமாக, பெருங்கதை இடைக்கால நூலேயாம். அதனை அளவு கோலாகக் கொண்டு சங்க கால ஒழுகலாறுகளைக் கணித்தல் பிழையாய் முடியும். சிலப்பதிகாரத்தில்

i) வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
கச்சை யானைப் பிடர்த்தலை ஏற்றி
வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்
கால்கோள் விழாவின் கடை நிலை சாற்றி''

என்று இந்திரவிழவூரெடுத்த காதையின் கண் வரு பகுதியிலும்

ii) வாழ்க சேனா முகமென வாழ்த்தி
இறையிகலி யானை எருத்தத் தேற்றி
அறைபறை யறைந்ததால் அணிநகர் மருங்கென்''

என்று காட்சிக் காதைக்கண் வரு பகுதியிலும்

iii) ''பொருநர் ஆர்ப்பொரு முரசெழுந் தொலிப்ப''
என்று கால்கோட்காதையின் கண் வரும் அடியிலும் முரசறைவோன் வள்ளுவன என்னும் குறிப்பே இல்லை. இதனை ஒப்பவே,

''வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
கச்சை யானைப் பிடர்த்தலை ஏற்றி
ஏற்றுரி போர்த்த இடியுரு முழக்கில்
கூற்றுக்கண் விளிக்கும் குருதி வேட்கை
முரசுகடிப் பிடூஉம் முதுகுடிப் பிறந்தோன்''

எனவரூஉம் மணிமேகலையும் அவன் வள்ளுவன் என்று தெள்ளிதாகக் கூறிற்றில்லை. மேலும் மகளிர் யானை எருத்

தத்தமர்ந்து மணவிழா அறிவிக்கும் செய்தியையும் சிலப்பதிகாரம் கூறுகின்றது. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியலில்

''ஏமாரு மன்னீர் எயில்திறமின் எம்கோமான்
வாமான்தேர்க் கோதை சதயநாள் — ஆமாறு
காமம் நுகருமின் கண்படுமின் என்னுமே
ஏம முரசின் குரல்

என்னும் பாடலை நச்சினார்ககினியர் காட்டி இஃது இழிகுலத்தோன் பறைசாற்றினது என்று கூறுதலும் கருதற்பாலது. இவற்றால் பெருங்கதை மேற்கோளின் வன்மை குன்றுவதாயிற்று. எனவே களப்பிரர் ஆட்சியில் தமிழர் ஒழுகலாறு சிதைவுற்ற பின் எழுந்த புறச்சமய நூலாகிய பெருங்கதை வன்மையுடைய சான்று ஆகாது என்று தெளிக.

இனி மு. இராகவையங்கார் என்பர் திருக்குறளாசிரியர் வள்ளுவர் குடியில் பிறநது பெருமை பெற்றவர் என்று கொள்வதில் குறை ஒன்றும் இல்லை எனவும் 'வள்ளுவன் சாக்கை எனும் பெயர் மன்னர்க்குட்பட்டு கருமத் தலைவற் கொன்றும்' என்று திவாகரம் கூறுதலால் வள்ளுவக் குடியினர் அரசாணையை முரசறைந்து சாற்றுதலாகிய உட்படு கருமத் தலைமையுடையவராகையால் அத்தலைமையுடைய முதுகுடியில் பிறந்தவரே தெய்வப்புலவர் என்றும் கூறினர். கூறுங்காலை வலைபர் என்ற வடசொல்லே வள்ளுவர் எனத் திரிந்தது என்றும் ஒரு கற்பனையையும் கூட்டிக் கொண்டு களிப்பாராயினார். இங்ஙனம் வள்ளுவன் என்பது குடிப்பெயரே என்று கருதுவோர் வள்ளுவன் என்ற சொல்லுக்கு விளக்கம் தரும் பிங்கலம், திவாகரம், சூடாமணி முதலிய நிகண்டுகளில் ஒன்றேனும் வள்ளுவன் என்பது குடிப்பெயர் என்று குறித்தல் என்பதை உணர்ந்தாராகக் காணப்படவில்லை. எனவே இன்னோர் முடிபு ஒவ்வாததே என்க. துடிசைகிழார் சிதம்பரனார் அவர்கள் சொல்லுமாறு:

கி.மு 50 முதல் கி.மு 30 வரை ஆட்சிபுரிந்த கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதியின் உள்மந்திரத் தலைவ ராய் விளங்கிப் பல போர்களில் வாகை சூடியவர் திருவள் ளுவர் என்பது திருவள்ளுவ மாலையில்

''அறம் அறிந்தேம் ஆன்ற பொருள் அறிந்தேம் இன்பின்
திறன் அறிந்தேம் வீடு தெளிந்தேம் — மறன் எறிந்த
வாளார் நெடுமாறன் வள்ளுவனார் தம்வாயால்
கேளா தனஎல்லாம் கேட்டு''

எனவரும் கொடிஞாழன் மணிப்பூதனாரின் பாடலால் பெறப் படும். வள்ளுவரின் இயற்பெயர் வாளார் நெடுமாறன் வள் ளுவனார் என்பது 'மறன் எறிந்த' என்னும் தொடர் திரு வள்ளுவரின் வீரச் சிறப்பை விளக்கி நிற்கின்றது.

இங்ஙனம் கூறும் துடிசைகிழார் தாம் கொண்ட ''வாளார் நெடுமாறன் வள்ளுவனார்'' என்னும் பாடத்தை யாண்டுப் பெற்றனரோ யாம் அறிகிலம். அவரும் விளக்கினார். இல்லை. தமிழ நாட்டின் கண் வழங்கி வரும் பாடம் 'வாளார் நெடுமாற வள்ளுவனார்'' என்பதேயாம். அவர் கொண்டதே உண்மைப் பாடம் எனின் ''வளநாட'', ''இலங் கிலைவேன் மாற'', ''தாதவிழ்தார் மாற'' என வரும் ஏனைய விளிப்பெயர்களை யாங்ஙனம் கொள்ளுதல் வேண்டுமோ? திருவள்ளுவரை வீரராகக் காணும் வேணயிவான் அவர் இங்ஙனம் பாடங் கொண்டனர் போலும்! ஆயின் துறவற வியலால் திருவள்ளுவர் மெய்யறிவு வாய்ந்த துறவியாகவும் காண இயலுமே! அதற்கு என் செய்வது! திருவள்ளுவமாலை யின் மற்றொரு பாடலில் ''மலைக்குத்து மால்யானை வள் ளுவர்'' என்று வருகிறன்றது இதில் வரும் ''மலைக்குத்து மால்யானை'' என்பதனை விளியாகக் கொள்ளாது வள்ளு வருக்கு அடைமொழியாக்கி யுரைப்பினும் இவர் கருத்து ஒருவாறு முற்றுப்பெற்றிருக்குமே! ஆனால் அவர் கூறும்

இயற்பெயரை 'வாளார் நெடுமாறன் வள்ளுவனார்'' என் பதை இப்பாடலிற் பெற முடியாது. முன்னர் யாம் காட்டிய கல் வெட்டுப் பாடல்களை யேனும் இவர் துணை பற்றி இருக்கலாம் இல்லாத பாட வேற்றுமை கொண்ட அவர் கூற்று நில்லாது என்க.

துடிசைகிழார் என்ற இப்பெரியார் இங்ஙனம் இல்லாத பாடத்தைத் தாமே ஆக்கி வைத்துக்கொண்டு தம் கற்பனையே வரலாற்று முடிபாகக் கூறும் வழக்கமுடையவர். இவ்வுண் மையைத் திருமந்திரத்தின் 101 ஆம் பாடலாக வரும்

''வந்த மடம் ஏழும் மன்னும்சன் மார்க்கத்தின்
முந்தி யுதிக்கின்ற மூலன் மடவரை
தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரம்
சுந்தர ஆகமச் சொல்மொழிந் தானே

என்பதன் ஈற்றடியைச் ''சுந்தரன் ஆகமச் சொல் மொழிந் தானே'' என்று மாற்றிக் கொண்டு திருமூலர் முன் நிலையில் பாண்டிய நாட்டில் பிறந்தார் என்றும் அவரது இயற்பெயர் சுந்தரன் எனவும் அவர் அகத்தியர் பால் கல்விகற்று நந்தி பெருமான் பால் ஞான நூல்களைக் கற்று நாதர் என்னும் சிறப்புப் பெயர் பெற்றார் என்றும் கி.மு. 6000 இல் அவர் கயிலையிலிருந்து பதஞ்சலி, புலிக்கால் முனிவர் ஆகியவ ருடன் தில்லை சேர்ந்து திருநடங்கண்டு பின்னர் வடகயிலை சென்று தவம் இருந்தாரென்றும் கி.மு. 3100 இல் அகத்தி யரைக் காண வேண்டி இரண்டாம் முறை தென் திசை போந்த போதே மூலனுடம்பில் புகுந்து 3000 ஆண்டு திருவா வடுதுறையில் சிவயோகத்திருந்து திருமந்திரம் அருளச் செய்து கி.மு 100இல் வீடுபேறு பெற்றாரென்றும் கூறுத லால் உணர்க. அன்றியும் திருமந்திரப் பாடல்களும் முன் னோர் கண்ட முறைப்படி இல்லாமல் பல இடங்களில் வேறுபட்ட வைப்பு முறையில் உள்ளன.

சேடகிரி சாத்திரியார் என்பார் ''தமிழ்க்கவி சரிதம்'' என்ற தம் நூலில் சமணர்தம் குரவராகிய ஏலாச்சாரியாரே திருக்குறள் ஆசிரியர் என்று கூறுகின்றார். சமணரில் கற்று வல்லாரை வள்ளுவன் என்று கூறல் மரபாயிருக்கலாம் என்று ஒரு கற்பனையையும் கூறுகின்றார் சமணர் பாரத நாட்டினர். எனவே அவர் தொடர்பாய கருத்துக்களைக் கூறுவதற்கு முன்பு சமணச் சான்றோர் பால் கேட்டுத் தெளிதல் வேண்டும். அங்ஙனம் தெளியாது தம் சிந்தை சென்றவாறெல்லாம் கூறுதல் ஆராய்ச்சியாகாது. கற்று வல்லாரை வள்ளுவர் என்று கூறுதல் சமணர் மரபாயின் சமணரில் வள்ளுவர் பலர் இருத்தல் வேண்டுமே! இன்றெனின் திருவள்ளுவருக்குப் பின்னர் சமணரில் கற்றுவல்லார் பிறக்கவில்லை என்று அன்றோ முடியும்! இஃதே சாத்திரியாரின் ஆராய்ச்சியின் விளைவு என்க. வள்ளுவர் என்பது தூய தமிழ்ச் சொல். சமணர் வடவர். அவர் பால் வள்ளுவர் என்னும் வண்டமிழ்ப் பெயர் ஆட்சியில் இருத்தல் கூடாத ஒன்றே ஆகும். இத்தகைய அவலங்களையும் ஆராய்ச்சி என்று கொண்டு எழுதும் அருவருப்பான நிலை தமிழ் நாட்டினின்றும் என்று மறையுமோ? ''குந்த குந்தாச்சாரியார், ஏலாச்சாரியார் முதலிய பெயர்களால் திருவள்ளுவரை ஜைநர்கள் போற்றிவரல் கண்கூடு. பகிராச்மன், அந்தாத்மன் பற்றித் திருக்குறளாசிரியர் ப்ராக்ருத பாஷையில் செய்.துள்ள ரயணசாரம் 120, 121ஆம் ஸ்லோகங்களில் கூறுகின்றார்'' என்பர் தமிழ்த் தென்றல் எனப்படும் திரு.வி.க அவர்கள். இப்பெரியோர் ஒருவரே சமயம் என்பதன் பொருளை நன்கு தெளிந்தவர். எனவே சமயத்துக்கு ஏற்றபடி பேசியும் எழுதியும் பாராட்டை ஈட்டி வந்தார்.

தொ.மு. பாசுகரன் (சித்திர ஆலய திருநெல்வேலி) என்பார் திருவள்ளுவ மாலையில் உக்கிரப் பெருவழுதியின் பெயரால் வழங்கும் பாடற்கண் நான்முகனே திருவள்ளுவராய்

வந்தான் என்று வரும் கருத்தை விளக்கக் கற்பனைக் கதை ஒன்றைக் கூறுகின்றார். ஊழிக்கால்ம் அணுகுவதை உணர்ந்த நான்முகன் ஒரு சுரைக் குடுக்கையில் புகுந்து கொண்டனர். ஊழிவெள்ளம் மேலோங்கி நின்றது. அந்த வெள்ளத்தில சுரைக் குடுக்கை மிதந்து கொண்டிருந்தது. அதைக் கண்ட பரமசிவனார் சுரைக்குடுக்கையினால் ஒளிந்து கொண்டிருப்பவன் யாவன் என்று வினவினார். இனி, எதிர்காலத்தில் நிகழவுள்ளதையும் அறிந்து கொண்ட தாமரைக் கிழவன் ''வள்ளுவன்'' என்று விடையிறுத்தான் இது கொண்டே'' நான் மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன், தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த-நூன முறை'' எனவும், ''மெய்யாய வேதப் பொருள் விளங்கப்பொய்யாது, தந்தான் உலகிற்கு தான் வள்ளுவனாகி, அந் தாமரை மேல் அயன்'' எனவும் திருவள்ளுவ மாலை கூறு கின்றது. இஃது அவர் கூறியவாறும் நீதி நூற்கொத்துப் பதிப்பாசிரியரும் இக்கதையைக் கூறுகின்றார்.

இவை நிற்க. வில்சன்துரை என்பார் திருவள்ளுவரின் இயற்பெயர் திரிபுராந்தகன் என்பது எனவும் சிவபெருமானே சங்கப்புலவர்களின் தருக்கை அழிக்கத் திருவள்ளுவராய் வந்தான் எனவும் கூறுவர். இத்தகைய புனைந்துரைகள் பெரும் பொல்லாங்கையே விளைத்து விட்டன.

இவ்வாறாய புனைகதைகள் பிறந்ததற்குக் காரணம் யாது? தமிழர் நுண்மான் நுழைபுலம் வாய்ந்தவரல்லர்; வட நூலின் துணையின்றித் தனித்தமிழ் முதல் நூலாக எதுவும் தோன்றல் இயலாது என்னும் கோணல் மனமே காரணமாகும் சிவஞான சித்தியார் அருளிய அருணந்தி சிவனார் தேசிகர் மாபினர் எனவும் அவரைச் சைவப் பார்ப்பனராக்கிக் கதை கட்டிவிட்டனர் எனவும் ஒரு செய்தி வழங்குகின்றது. உமாபதி சிவனார் மறைஞான சம்பந்தரின் மாணாக்கராயினமை கருதி அவரினத்தார் அவருக்குப் பலப்பல இன்னல்களை விளைத-

தனர். ஆயின் வேளாண்குடிப் பெருமகனாராய மெய்கண்ட தேவநாயனாரைத் தொட்டே குரவராய்க் கொண்ட அருணந்திசிவனாருக்கு அத்தகைய இன்னல்கள் ஏதும் விளைந்ததாகச் செய்தியில்லை. அஃதில்லாமை அவர் சிவமறையவர் அல்லரோ என்றே எண்ணத் தோன்றுகின்றது. உரையாசிரியர் பரிமேலழகர் வரலாற்றினும் இங்ஙனம் மாறுபாடு விளைந்துள்ளது. என்பது பெரியோர் துணிபு அதனை ''திருக்குறள் உரையாசிரியன் மார்'' அதிகாரத்துள் காட்டுவாம்.

திருவள்ளுவர் என்னும் பெயருக்கு விளக்கம் தருதலில் நேரும் இடர்ப்பாடுகளை எளிதாகக் கடந்திட எண்ணிய சிலர் வள்ளுவர் என்பது வண்மையுடையவர் எனும் பொருளது என்று கூறலை மேற்கொண்டனர். வண்மையுடையவரை வள்ளல் எனவும் வள்ளியோர் எனவும் வண்மையோர் எனவும் கூறலை வழக்காரும் அன்றி வளளுவர் என்று கூறுதல் எவ்வழக்கினுமின்று புலவர் புராணம் என்னும் நூல் ''வளமையோன் எனல் ஓராரே'' என்று கூறுதல் உண்மை ஓராத் தன்மையேயாகும். இந்நூல் சிந்தைக்கின்னாதாய்ச் செவிக்கின்னாதாய் நாவுக்கின்னாதாய் செய்திகளையும் நாணமின்றிக் கூறிச்செல்லும் பண்பினதாகும்.

திருவள்ளுவர் திருமயிலையில் பிறந்தார் என்பர். அவர் மதுரையில் பிறந்தார் என்பாரும் உளர் இன்னோர். ''செந்நாப் போதார் புனற்கூடற் கச்சு'' என்று திருவள்ளுவமாலையில் வரும் தொடரைப் பற்றிக் கொண்டு மதுரை என்கின்றனர். திருவள்ளுவமாலை ஆராய்ச்சியில் சான்றாக எடுக்கும் வன்மையுடைத்தென்று கூறுதற்கு இல்லை. திருவள்ளுவமாலை தோன்றிய காலம் தெரிந்திலதாயினும் சங்ககாலத்துக்குப் பிற்பட்ட இடைக்காலத்தில் தோன்றிய தென்பதே வாய்மையாகும். மயிலையில் வள்ளுவர் பிறந்தார் என்பதே மரபு. மயிலையில் திருவள்ளுவர் திருக்கோயில் ஒன்றும் உள்ளது. நாயனார், மயிலையில் பிறந்து மதுரையில்

வாழ்ந்தவர் என்பாரும் உளர். அவர் எங்குப் பிறந்தவராயி-னும் என்னை? தமிழ்நாட்டிற்கு அழியாப் புகழை ஈட்டித் தந்த தமிழ்மகனார் வள்ளுவர் என்று போற்றுதற்கொரு தடையும் உண்டோ?

துடிசைகிழார் காட்டும் சான்றும் கூறும் முடிபும் வன்மை-யற்றவையே. ஆயினும் அவர் கூறுமாறு 'திருவள்ளுவர்' என்பது இயற்பெயர் என்று கொள்ளுதலே சிறப்புடைதது. திருவள்ளுவர் குடிப்பெயரே என்று கொண்டால் அவர்தம் இயற்பெயர் தெரிந்திலது என்றே கொள்ள வேண்டும். திருக்குறளைப் போற்றிய புலவர்பலர் இருந்தனர். திருக்-குறளைத் தம் நூலில் ஆட்சி செய்த புலவர் பலர் இருந்தனர். திருக்குறளால் தோட்கப்படாத செவியுடைய புலவர் எஞ்-ஞான்றும் இருந்திலர் என்றே சொல்லிவிடலாம். இவ-ரனைவரும் அவர்தம் இயற்பெயர் தெரிந்திலாமையின் குடிப்பெயராலேயே வழுத்தினர் எனல் வேண்டும். இது தக்கதோ? அன்றுஎன்க. எனவே திருவள்ளுவர் என்பது இயற்பெயரே என்று கொள்ளுதலே நேரிது என்க. மேலும் ''சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும் இயற்பெயர்க்-கிளவி முற்படக் கிளவார்'' எனவரூஉம் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு (சொல் கிளவி. 41)

''உம்மையால் தவம், கல்வி, குடி, உறுப்பு முதலாயினவற்றான் ஆகிய பெயரும் கொள்ளப்படும். அவை முனிவன் அகத்தியன், தெய்வப்புலவன் திருவள்ளுவன், சேரமான் சேரலாதன், குருடன் கொற்றன் எனவரும்.

என்று சேனாவரையர் உரை கூறுதலால் திருவள்ளுவர் என்பது இயற்பெயர் என்பதே அவர் கருத்து என்று விளங்கும். நச்சினார்க்கினியரும், திருவாரூர் வைத்திய நாத தேசிகரும் இக்கருத்தினரேயாவர்.

திருவள்ளுவ மாலையில் முப்பத் தெட்டுப் பாடல்கள் வள்ளுவர் எனவும் எட்டுப் பாடல்கள் திருவள்ளுவர் எனவும் கூறுகின்றன. செந்நாப்போதார், மாதானுபங்கி, முதற்பாவலர், பெருநாவலர், தேவர் முதலிய சிறப்புப் பெயர்கள் ஒவ்வொரு பாடலிலேயே வந்துள்ளன. இந்நூல் திருக்குறள் அரங்கேற்றப்பட்டபொழுது பாடப்பட்டதென்பர். இக்கூற்று ஆராய்ச்சியில் எதிர் நிற்பதன்று. எனினும் இடைக்காலத்துத் தோன்றிய நூல் என்று கூறுதல் ஒவ்வும். கல்லாடத்தில்

''வள்ளுவன் தனக்கு வளர்கவிப் புலவர் முன்
முதற்கவி பாடிய முக்கட் பெருமான்''

என்றுவரும் அடிகள் திருவள்ளுவ மாலை கல்லாடத்திற்கு முன் தோன்றிய நூலென்பதை உணர்த்தும். முதற்கவி பாடிய முக்கட் பெருமான்'' என்று இந்நூல் கூறுவதால் திருவள்ளுவ மாலையில் இஞ்ஞான்று அசரீரி, நாமகள் என்னும் பெயர்களில் காணப்படும் பாடல்கள் கல்லாடத்துக்குப்பின் பாடிச்சேர்க்கப்பட்டன வாதல் வேண்டும். கல்லாடனார். இறையனாரை முக்கட் பெருமான் எனவும் உருத்திர சன்மரை முருகன் எனவும் கருதுவர். கல்லாடத்தில் வரும் செய்திகள் நம்பற்கியலாப புனைகதைகளாயுள்ளன. அவை பெரும்பான்மையும் மதுரைத் திருவிளையாடல்களாம். எனவே கல்லாட நூல் செய்த ஆசிரியர் பெரும்பற்றப்புலியூர் நம்பியின் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் தோன்ற காலத்துக்குச் சற்று முன்னோ பின்னோ வாழ்ந்தவராவர். இவர் பெயரிலும் திருவள்ளுவ மாலையில் ஒரு பாடல் உளது. அப்பாடல் கருத்தும் கல்லாடம் கூறுகின்ற "சமயக் கணக்கர் மதிவழி கூற துலகியல் கூறிப் பொருளிது என்ற வள்ளுவன்'' என்பதேயாம். கல்லாடத்தின் நடையும், அதிலுறு வடசொல்லாட்சியும், இயற்கையை மீறிய நிகழ்ச்சிகளும் அந்நூல் மிகப் பிற்பட்ட காலத்ததாதலைக் காட்டுகின்றன. எனவே திருவள்ளுவ மாலையில் கல்லாடர் பெயரில் வழங்கும்

பாடல் கல்லாடர் காலத்துக்குப் பின் பாடிச் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். கல்லாடரே பாடினார் என்று கொண்டாலும் பதினான்காம் நூற்றாண்டுக்குப்பிறகே அந்நூல் முழுவடிவம் பெற்றிருத்தல் கூடும் என்க. சங்ககாலத்துப் புலவன்மார் ஒரே காலத்தில் வாழ்ந்தவராகார். பல்வேறு காலத்திருந்தவராவர் அவரெல்லாரும் திருவள்ளுவ மாலையில் வரும் பாடல்களைப் பாடினர் எனல் ஏற்புடைத்தன்று. எனவே பிற்காலப் புலவர் ஒருவரோ சிலரோ சங்கப் புலவர் பெயரில் பாடல்களை இயற்றித் திருவள்ளுவ மாலை எனப்பெயரிட்டிருத்தல் வேண்டும்.

சங்க நூல்களில் நாஞ்சில் வள்ளுவன் என்பவன் புகழப்படுகின்றான். இவன் நாஞ்சில் பொருநல என்றும் சிறப்பிக்கப்படுகின்றான். ''ஓடாப் பூட்கை யுரவோர் மருக'' என்று இவன் புகழப்படுவதால் இவன் மறக்குடியில் தோன்றிய பெருவீரன் எனல் புலப்படும். இவன் பெயரும் வள்ளுவன் என்றே இருத்தல் கருதற்பாலது. ஆகலின் வள்ளுவன் என்ற பெயர் இயற்பெயராகச் சங்க காலத்து வழங்கப்பட்டது என்பது அறியப்படுகின்றது. இதனால் திருவள்ளுவர் என்பது இயற்பெயரே என்று தெளிக.

திருவள்ளுவர் என்பதைச் சிறப்புப் பெயராகக் கொண்டு தமது அறிவாற்றலை எல்லாம் திரட்டி வள்ளுவருக்குச் சிறப்புச் செய்ய முன்வந்தனர் சிலர். திருவள்ளுவ மாலைக்கு முதன்முதல் உரைகண்ட சரவணப் பெருமாளையர் என்பவர்

''வள்ளுவர் என்பது வண்மையுடையவர் என்பதை விளக்கி நின்றது. ஆதலின் அது வேதத்தில் இலைமறை காய்போல் பல இடங்களில் மறைந்து வெளிப்படாது இருந்த மெய்ப் பொருள்ள எல்லாம் தொகுத்து உலகத்தார்க்குக் கொடுத்தருள் செய்தவர் என்னும் காரணம் பற்றி வந்த பெயர்''

என்று விளக்கம் தந்தார். திராவிடப் பிரகாசிகை ஆசிரியரான யாழ்ப்பாணம், வடகோவை சபாபதி நாவலர் என்பாரும் இக்கருத்தையே உரைத்தார். 'திருக்குறள் விளக்கம்' எழுதிய கி. குப்புசாமி முதலியார் என்பவர் திருவள்ளுவர் என்ற சொல்லைத் திரு எனவும் வள்ளுவர் எனவும் பிரித்துத் திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை எனவும் வள்ளுவர் என்பது வள்ளல் தன்மையுடையவர் எனவும் பொருள் கண்டார். இத்தகு விளக்கங்கள் கூறுவாரின் கற்பனைத் திறத்தைக் காட்டி நிற்பனவே அன்றி உண்மையைக் காண உதவுவன அல்ல. வேதம் தமிழ்ப்படுத்த வந்தவர் என்பது வடமொழி ஆதிக்கம் செலுத்திய பிற்காலத்துச் சோழர் காலத்து எழுந்த கற்பனையாதல் வேண்டும். வேதம் வேள்விக்கண் வேண்டும் உயிர்க்கொலை, புலைப்புசிப்பு, கள்ளுண்டல் என்பவற்றைத் திருக்குறள் கடிந்து கூறும்.

இதுகாறும் உணர்த்தியவற்றால் திருவள்ளுவர் என்பது சிறப்புப் பெயரோ குடிப்பெயரோ ஆகாது இயற்பெயரே ஆகும் என்பது நனி விளங்கும்.

ஆ) தேவர்:

ஆசிரியர் தெய்வத் தன்மையுடையராகலின் தேவர் எனப் பட்டார் என்பர் சிலர். அறம், பொருள், இன்பம் என்னும் உறுதிப் பொருள்கள் மூன்றையும் தமிழுலகம் தெளிந்துய்யு-மாறு அருள் வினோதத்தில் கூறினமையானே தேவர் எனப் பட்டார் என்பர் சிலர். வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும் ஆகலின் ஆசிரியர் பெருமான் இல்லறத்திருந்து அங்ஙனம் வாழ்ந்த பெற்றி நோக்கித் தேவர் எனப்பட்டார் என்பர் சிலர். தேவர் என்பது திருவள்ளுவ மாலையில் பயின்று வருகின்றது. திருவள்ளுவ மாலை என்பது திருக்குறள் அரங்கேற்றம் நிகழ்ந்த பொழுது எழுந்தது என்பர். எனவே திருக்குறளை மதுரைச் சங்கப்புலவன்மார் கேட்கும் முன்பே திருவள்ளுவர்

தேவர் என்று வழங்கப்பட்டாராதல் வேண்டும். இஃது ஏற்புடைத்தாகாது. எனவே திருவள்ளுவமாலை இடைக்கால நூலே ஆதல் வேண்டும்.

தேவரையும் அறிஞரையும் புலவர் என்ற சொல் குறிக்கும். விபுதர் என்னும் வடசொல்லும் அங்ஙனமே தேவரையும் அறிஞரையும் குறிக்கும். நான்மணிக்கடிகை ''தேவர் அனையர் புலவர்'' என்று கூறும். எனவே திருவள்ளுவர் 'தேவர்' எனவும் 'தேவிற் சிறந்த திருவள்ளுவர்' என்றும் புகழப்பட்டார்.

i) ''அவனே புலவன் அவனே அறிஞன்
அவனே தமிழை அறிந்தோன் — சிவன் அறிய
வள்ளுவ தேவன் வசனத்தை மெய்யாக
உள்ளுவ தேவன் உளன்''

ii) ''ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின் — போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்.

என வரும் பாடல்கள் வள்ளுவர் பெருமானின் வாலறிவை உணர்த்துவன. நச்சினார்க்கினியர் சீவகசிந்தாமணிக்கு எழுதிய உரைக்கண் ''ஒன்னார் அழுதகண் ணீரும் அனைத்து ''என்றார் தேவரும்'' (1891) என்றும், 'பகல் வெல்லும் கூகையைக் காக்கை', 'காலாழ் களரின் நரியடும்' என்றும் தேவரும் கூறினார் (1927 - 1928) என்றும் கூறுதல் தேவர் என்னும் வழக்கின் தொன்மையைக் காட்டும். ஔவையாரும் நல்வழியில் ''தேவர் குறளும்'' என்று கூறுதல் காண்க.

இ) முதற்பாவலர்

மக்கள் உலகில் வாழ்வாங்கு வாழ்தற்கு வழிகாட்டும் நெறியை எந்த ஒரு நூலும் தன்னுள் முழுமையாகக்

கொண்டில்லை. எனவே மக்கள் வேதம் முதலிய பல நூல்களையும் கற்று வாழ்வாங்கு வாழும் நெறியைச் சிறிது சிறிதாக அறிதல் வேண்டும். இந்நிலையில் திருக்குறள் ஒன்றே அந்நெறியை முழுமையாகத் தன்னுள் கொண்டெழுந்த முதல் நூல் ஆகும். இம்முதல் நூலைத் தந்தருளிய ஆசிரியர் முதற்பாவலர் என்று ஏத்தப்பட்டார். இக்கருத்தைத் திருவள்ளுவ மாலையில் நல்லந்துவனார் பெயரில் வழங்கப்பெறும்.

''சாற்றிய பல்கலையும் தப்பா அருமறையும்
போற்றி உரைத்த பொருள் எல்லாம் — தோற்றவே
முப்பால் மொழிந்த முதற்பா வலர் ஒப்பார்
எப்பா வலரினும் இல்''

என்னும் பாடல் கூறுகின்றது. கீரந்தையார் பெயரில் வழங்கும்

''தப்பா முதற்பாவால் தாம் மாண்ட பாடலினால்
முப்பாலின் நாற்பால் மொழிந்தவர் — எப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள்ளு வர்.''

என்னும் பாடலும் கண்ணுக. பாக்கள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன. அவற்றுள் முன்னர் நிற்பது வெண்பா. வெண்பாவும் குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, மூவடிமுக்கால், பஃறொடை வெண்பா, சவலை வெண்பா எனப் பலவகைத்து. அவற்றுள் முதற்கண் நிற்பது குறள் வெண்பா, இங்ஙனமாய முதற் பா என்னும் குறள் வெண்பாவால் நூல் செய்தமையின் திருவள்ளுவர் முதற்பாவலர் எனப்பட்டார். இப்படி ஒரு காரணம் கற்பிக்கப் படுகின்றது.

புலவன் மாரில் சிலர் ஒரு காலத்தில் போற்றப் பட்டுப் பின்னர் மறக்கப்படுவர். பொருள் வேண்டிப் பிறரைப் புகழ்பவரும், நாட்டு விடுதலை வேண்டிப் பாடினோரும் இதில்

அடங்குவர். ஒரு சாரார் போற்ற மற்றொரு சாரார் தூற்ற வாழ்ந்த சமயப் புலவன் மாரும் அன்னரே. திருவள்ளுவர் இவரையெல்லாம் கடந்த மேனிலையில் திகழ்பவர். எக்காலத்தும், எச்சமயத்தவராலும், எந்நாட்டினராலும், எம்மொழியினராலும் போற்றப் படுபவர். உலகில் உள்ள மக்கள் அனைவருக்கும் ஏற்புடைய நெறிகளைத் தன்பால் கொண்டு விளங்கும் திருக்குறளை அருளியவர் இங்ஙனம் எம்மொழிப் புலவர்க்கும் தலைமைப் புலவராய்ப் பொலியும் பெற்றி நோக்கித் திருவள்ளுவர் முதற்பாவலர் என்று வழங்கப் படுகின்றார் எனல் ஒவ்வும்.

ஈ) தெய்வப் புலவர்

இப்பெயருக்குப் பல காரணங்கள் கற்பிக்கப்படுகின்றன. தெய்வ அருளால் பெற்ற புலமையினராகலின் இப்பெயர் வழங்கப்பட்டது என்பாரும் பிரமனே திருவள்ளுவராக வந்தமையின் வந்த பெயர் என்பாரும் தெய்வத்தைச் சிறப்பிக்கப் படுதல் போல வள்ளுவர் சிறப்பிக்கப்படுதலின் வந்த பெயர் என்பாரும், அசரீரி நாமகள் முதலிய தெய்வங்கள் போற்றிய புலமையுடையாதல் பற்றி வந்த பெயர் என்பாரும் உளர். ஆனால் நச்சினார்க்கினியர், சேனாவரையர், திருவாரூர் வைத்தியநாத நாவலர் முதலியோர் வள்ளுவரின் கல்வி மாட்சி குறித்த பெயர் என்பர். இஃதே ஏற்புடைத்து.

புல்லில் பனிநீர் படிந்திருக்கும். அது தினையளவே இருக்கும். ஆயினும் பனையளவுள்ள பெரிய பொருள்களையும் தன்னுள் அடக்கிக் காட்டும். திருக்குறளும் வடிவில் மிகச் சிறியதே ஆனால் பொருள் வளத்தில் பொருவில்லாதது. இக்கருத்தைத திருவள்ளுவமாலையில் கபிலர் பெயரால்

''தினையளவு போதாச் சிறுபுல்நீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால் — மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.

எனவரும் பாடல் கூறுகின்றது. இங்ஙனமே கடுகைத்-துளைத்தேழ் கடலைப் புகட்டிக், குறுகத் தரித்த குறள் என்னும் பாட்லும் கூறுகிறது. 'கடுகை' என்பதை நீக்கி 'அணுவை' என்று கூறித் தொடங்கும் பாடலும் உண்டு. இவற்றால் திருவள்ளுவரின் கல்விநலம் விளங்குகிறது. எனவே தெய்வப் புலவர் என்பது திருவள்ளுவரின் கல்விச் சிறப்பை விளக்கும் பெயர் என்று தெளிக.

ஏனைய பிறரும் புலவர். திருவள்ளுவரும் புலவர்.
இங்ஙனம் கூற நாக் கூசாதா? இதனை
''புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
சிலவர் புலவரெனச் செப்பல் — நிலவு
பிறங்கொளி மாலைக்கும் பெயர் மாலை மற்றுக்
கறங்கிருள் மாலைக்கும் பெயர்''

என்று ஒரு பாடல் கூறுகின்றது. தமிழாசிரியர் செங்குன்றூர் கிழார் பாடியதாக் திருவள்ளுவமாலையில் உள்ளது இது. முழுநிலவு ஒளிவீசும் காலத்தையும் மாலை என்று சொல்லு கிறோம். நிறைந்த இருள் கவிந்துள்ள காலத்தையும் மாலை என்றே சொல்லுகிறோம். அது போலத் திருவள்ளுவரைப் புலவர் என்று கூறிவிட்டு மற்றவரையும் புலவர் என்று கூறுதலாகும் என்பது பாடலின் பொருளாகும்.

''அறமுரைத் தானும் புலவன்முப் பாலின்
திறமுரைத் தானும் புலவன் — குறுமுனி
தானும் புலவன் தரணி பொறுக்குமோ
யானும் புலவன் எனின்''

எனவரும் பொய்யாமொழிப் புலவர் பாடலையும் நினைவு கூர்க. அறமுரைத்தான். சிவபிரான். தலைச்சங்கப் புலவருள் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும் ஒருவராகக் கூறப்படல் காண்க. சிலர் வியாத முனிவரைக் கூறிக் குற்றப் படுவர். ''ஆல்நிழற்கீழ் அறம் சொன்ன அழகனே'' என்று

தேவாரமும் "அன்றாலின் கீழங் கறமுரைத்தான் காணேடி" என்று திருவாசகமும் கூறுதலை யறிக. தெய்வப் புலவர் என்பது திருவருளால் பெற்ற கல்விநலம் வாய்த்தவராய்ப் புலமையில் ஒப்பாரும் மிக்காரும் இன்றித் திகழ்ந்தவர் என் பதை உணர்த்தும்.

**உ) நான்முகனார் :**

ஆராய்ச்சியுணர்வு அணுவுமின்றிப் பிரமனே திருவள்ளுவராய் வந்தான் என்னும் கருத்தால் எழுந்த பெயர். இக்கருத்தைத் திருவள்ளுவ மாலையில் உக்கிரப் பெருவழுதியின் பெயராலும் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் பெயராலும் அமைந்த இருபாடல்கள் கூறுகின்றன. எனினும் இப்பெயர் நூல் வழக்கிலில்லாமை நலமே விளைக்கும். திருக்குறள் வடவர் அறிவில் பிறந்ததே தமிழ் மொழியில் அத்துணைச் சிறப்புடைய நூல் தோன்றுதல் கூடாததே என்னும் மனப்பான்மையில் தோன்றியதே இப்பெயர் என்க.

**ஊ) மாதானுபங்கி :**

''உப்பக்கம் நோக்கி உபகேசி தோள் மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப — இப்பக்கம்
மாதானு பங்கி மறுவில்புலச் செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு''

என்று நல்கூர் வேள்வியார் பெயரில் திருவள்ளுவ மாலையில் வரும் பாடலே இப்பெயரைக் கூறுகின்றது. பகவற்கீதை கூறிய கண்ணன் வடமதுரைக்கும் திருக்குறள் அருளிய திருவள்ளுவர் தமிழ் மதுரைக்கும் அச்சாணி அன்னார் என்று இப்பாடல் இயம்புகிறது. பகவற்கீதை வருணாச்சிரம ஒழுக்கத்தை வற்புறுத்தும். அதைமீறின் நரகும் துன்பமும் வரும் என்னும் திருக்குறள் ''பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்'' என்று கூறும். இங்ஙனம் சாதியை அடிப்படையாகக் கொண்ட பகவற்கீதையையும் நீதியை அடிப்படையாகக் கொண்ட

திருக்குறளையும் இணைத்துக் குழப்பிய நல்வினையாளன் யாரோ அறிகிலம். இத்தகைய பாடலைத் துணைகொண்டு வள்ளுவனார் ஊர் மதுரை என்பது போலி முடிவேயாம்.

மாதானுபங்கி என்பது வடமொழி. இதற்குத் தாயைப் போன்ற ஒழுக்கினன் என்பர் ஒரு சிலர். ஒழுக்கினன் என்பதை உணர்த்தும் சொல் இன்மையால் இது பொருளன்று என்று மறுப்பர் சிலர். தாயை நிகர்த்த அன்பினர் என்றும் செருக்கு அடங்கியவர் என்றும் பொருள் உரைப்பர் சிலர். மு. இராகவையங்கார் என்பார் இப்பெயர் திருவள்ளுவரின் மனைவியைக் குறிக்கும் எனவும் மேற்பாடலில் வருவதனை மாதானுபங்கியின் மணாளராய செந்நாப் போதார் எனப் பொருள்படும் எனவும் விந்தையான பொருள் கூறுவார். மாதானுபங்கி என்னும் பெயர் வழக்கை ஐயங்கார் யாண்டுக் கண்டனரோ அறிகிலம். நகைச் சுவைக்கு ஏதுவாய இத்தகு மொழிகளை ஆராய்ச்சி முடிவாக ஐயங்கார் கூறுவதும் அவர் முடிபே முடிபு என்று சுன்னாகம் குமாரசாமிப் புலவர் கொண்டாடுவதும் கலியின் கூத்தேயாகும். மேற்பாடல் திருக்குறள் ஒப்புயர்வற்ற தனித்தமிழ் நூல் என்னும் பெருமையைக் குறைக்க எழுந்ததேயாகும்.

எ) செந்நாப் போதார் :

செந்நா : செப்பம் உடையநா. ''சொற்கோட்டம் இல்லது செப்பம்'' என்பது திருக்குறள். எனவே சொற்குற்றம் படாதநா என்க. போதார் : (நா ஆகிய) மலரை உடையவர். ஏனைய மலர்கள் தரும் தேன் உடம்புக்கு உறுதி தரும். திருவள்ளுவரின் நாமலரிலிருந்து வரும் தேன் உயிருக்கு உறுதி தரும்.

''என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்க் — குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர் போல்
மன்புலவன் வள்ளுவன் வாய்ச் சொல்''

என்று வரும் திருவள்ளுவ மாலைப் பாடலையும் கருதுக. இஃது இறையனார் பெயர் கொண்டு இலங்குகின்றது.

ஏ) பெருநாவலர் :

அறநூல் ஆக்கினார் சிலர். பொருள் நூல் புகன்றார் சிலர். இன்ப நூல் இசைத்தார் சிலர். இவரெல்லாம் தாம் எடுத்துக் கொண்ட பொருளை முற்றுற மொழிய மாட்டாது கழிந்தனர். இவர் கூறினவும் எக்காலத்தும் நின்று நிலவு-வனவாக அமைந்தில. அவை பழையன கழிதலின் பாற்படு வனவாகவே அமைந்தன.

திருவள்ளுவர் முப்பாலில் (அறம், பொருள், இன்பம்) நாற்பால் (அறம், பொருள், இன்பம் வீடு) மொழிந்தவர். உலகிற்கு அறிவுறுப்பான் எடுத்துக் கொண்ட பொருளை எக்காலத்தும் அமையுமாறு அருளினவர். எனவே பெரு நாவலர் ஆயினார். கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் திறம் சான்ற நாவலர் மிகச் சிலரே. அவருள் தலைமையுடையவர் திருவள்ளுவர். எனவே பெரு நாவலர் என்று போற்றப்படுவாராயினார் என்க.

ஐ) பொய்யில் புலவர் :

பொருள்களின் உண்மையை உள்ளவாறு உணரும் உணர்ச்சியும், அவ்வுண்மையில் நின்றொழுகும் நடையும், அதனால் தான் பெற்ற இன்பம் இத்தரையுலகும் பெறுக என்னும் அருளுணர்ச்சியான் பொருள்களின் உண்மையை உள்ளபடி உலகிற்கு உரைக்கும் பேராற்றலும் உடையராக-லின் திருவள்ளுவர் பொய்யடிமையில்லாத புலவராவர்.

அறம் உரைப்போர் தூய நெஞ்சினராதல் வேண்டும். அவரே நிறைமொழிமாந்தர் ஆவர். அவரிடமிருந்து வெளிப்-படுவன மந்திரங்கள். கவிஞர் என்பார் சிலருக்குக் கள்ளும் கஞ்சாவும் உள்ளே சென்றால்தான் கற்பனை மலருமாம்.

இத்தன்மையர் அறம் கூறுதல் குரங்கு சிவனிரவு நோன்பு மேற்கொண்ட கதையையே கடுக்கும். உணர்வாலும், நடையாலும், உயையாலும் பொய்யாத திருவள்ளுவர் அருளிய திருக்குறள் வான்பொய்த்தாலும் தான் பொய்யாத மந்திரமாகும். இது நோக்கியே திருவள்ளுவர் பொய்யில் புலவர் என்று புகழப்படுவாராயினார்.

ஒருவர் எத்துணைச் சிறந்த நெறியில் பயில்பவராயினும் பிறரை அண்டிப் பிழைப்பவராயின் பொய் உயர்வு நவிற்சி என்னும் உருவத்திலேனும் அவர்பால் விளங்கும். இத்திறமில்லாத தூய தவநெறியினரே பொய்யில் புலவராதற்குத் தக்கார். இத்தகைய தவநெறியாளர் திருவள்ளுவர் ஆகலின் மணிமேகலை அவரைப் ''பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்'' என்று வழுத்திய தென்றறிக. திருத்தொண்டத் தொகை கூறும் பொய்யடிமையில்லாத புலவர் திருவள்ளுவரே எனச் சிலர் கூறும் கருத்துக்குத்தக்க சான்று இல்லை என்றே கூறவேண்டும்.

ஒ) நாயனார் :

நாயனார் என்பது தலைமை பற்றி வந்த பெயர். கடலெனப் பரந்துள்ள நூல்களை ஓதி மெய்ப் பொருள் தெளிதல் எல்லார்க்கும் கூடுவதொன்றன்று. அங்ஙனம் தெளிந்து, தெளிந்த மெய்ப் பொருளை உலகர் உணர்ந்து உய்தி கூடும் பொருட்டுத் திருக்குறள் அருளிச் செய்தார் ஆசிரியர். இஃது அருள் தலைமையாகும்.

நாயனார் என்பதை நாய் அனார் என்று பிரித்துக் கொண்டு சிவனார் திருமுன்பு நாய் போலக் காத்துக் கிடப்பவர் என்று சொல்லாய்வாளர் ஒருவர் அவலப் பொருள் கண்டார். சிவனாரும் நாயனார் எனப்படுதலை அவர் கண்டிலர் போலும்! நாயனார் என்பது நடாத்துபவர் என்னும் பொருளது. இல்லறம் துறவறம் இரண்டையும் நடத்திக்

காட்டினமையால் நாயனார் எனப்பட்டார் எனலும் சாலாது. என்னை? உயிர்கள் வினைக்கீடாகக் சிவபிரானால் நடத்தப் படுகின்றனவாகலின். எனவே உயிரினத்தைச் சேர்ந்த எவரும் நடத்திக் காட்ட வந்தவர் ஆகார் என்பதை உளங்கொளல் வேண்டும்.

திருவள்ளுவரைப் புலவர் என்று கூறிய பின்னர் நம்மனோரையும் புலவர் என்று கூறிக் கொள்ள உள்ளம் நாணும் அன்றோ! எனவே ''என் ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு'' எனும் மொழியைக் கொண்டு நன்னூல்களையே ஓதிச் சிறிது புலமையேனும் உடையோமாவோமாக. திருவள்ளுவருக்கு உரிய இப்பத்துப் பெயர்களில் பெரும்பாலன பிற்காலச் சான்றோர் வழங்கியனவேயாகும். சில சங்க நாளிலும் வழங்கப்பட்டுள. அவைகட்கு எழுந்த விளக்கங்கள் அண்மைக் காலப் புலவன்மார் கற்பனையில் விளைந்தனவேயாகும்.

வா. மார்க்க சகாய செட்டியார் என்பார் 1924 இல் வெளியிட்ட திருக்குறள் மூலம், திருவள்ளுவ மாலையும், சொற்குறிப்பு அகராதியும் என்னும் நூல் திருவள்ளுவர் பெருமானின் திருவுருவத்தை உணர்த்தும் பாடல் ஒன்று உள்ளது. அதனை ஈண்டுத் தருவாம்.

திருமுக மிசையார் மயிர்முடி அழகும் தீர்க்கபுண் டரநுதல் அழகும்
திரள்மணி புயந்தை வருசெவி அழகும் திகழ்நெடுந் தாடியின் அழகும்
அருமுடி செபமா லிகைசின்முத் திரைசேர் அபயம்நேர் வலக்கையின் அழகும்
அமிழ்துறழ் தமிழ்மா மறைமுறை வரதம் அமைதரும் இடக்கையின் அழகும்
கருமுடி யோகப் பட்டையின் அழகும் கடிகொள்சீர்க் கோவண அழகும்

கழல்களில் திகிர் வளைவரை அழகும் கமலநல் லாதளத்
தழகும்
கருமுடி முகில்தோய் மயிலையின் இடைமா தவர்கள்கண்
டிறைஞ்சவீற் றிருக்கும்
கமைபுகழ்த் திருவள் ளுவர்எனும் நாம சற்குரு சரணமே
சரணமே

திருவள்ளுவர் மாசித்திங்கள் உத்திர நாளில் வீடுபெற்றார் என்ப. இதனை

''மாசியுத்திரத் தினத்தில் வள்ளுவனார் மாநிலம் விட
டாசில்பர முத்தி அடைந்தாரால் — காசினியில்
கொல்லா விரதம் குறிக்கொண்டார் எல்லாரும்
நல்லார்வம் செய்ம்மின் நயந்து.''

இங்ஙனம் கூறுதற்குச் சான்று ஏதும் இல்லை. திருவள்ளுவர் பற்றிக் கூறப்படும் செய்திகளின் ஒன்றையேனும் உண்மை என்று கொள்ளக் கூடவில்லை. அவை அறிவுக்கும் பொருந்துவன வாயும் இல்லை. உலகம் முழுவதும் போற்றும் ஒள்ளியரை—தமிழன்னை பயந்த தலைமகனாரைப் பற்றிய ஓர் உண்மை வரலாற்றையேனும் கூற இயலாத நிலையில் தமிழர் இருத்தல் பெரிதும் இழிவுபயப் பதேயாகும். திருவள்ளுவர் திருக்குறளைத் தமிழில் அருளினார் என்றேனும் சொல்ல முடிகின்றதே. தமிழர் தம் மறவிநிலைக்கு இதுவே கிடைக்கக் கூடாத பேறுபோலும் என்றெண்ணி அமைவாமாக.

## 3. திருக்குறள்

1. பண்டைத் தமிழ் நூல்களை இடைக்காலத்து ஆசிரியன்மார் மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்று இரு பெரும் பிரிவயக்கி வைத்தனர். அதற்கு இலக்கணமும் கூறினார். மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்னும் வழக்கு தொல்காப்பிய உரையாசிரியரின்மார் காலத்துக்கு முற்பட்டதாதல் தொல்காப்பிய

உரைகளால் அறிகின்றோம். கணக்கு என்றால் என்பது நூல் பொருள். இப்பிரிவு நூற்பொருளின் பெருமை சிறுமை கருதிச் செய்யப்பட்டன்றி, நூல்களில் பயிலும் செய்யுள் அடிகளின் பெருமை சிறுமை கருதிச் செய்யப்பட்டது. இனி,

''நாலடி நான்மணி, நால்நாற்ப தைந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியோ டேலாதி என்பவே
கைந்நிலையும் ஆம் கீழ்க் கணக்கு''

என்னும் பாடல் கீழ்க்கணக்கு நூல்களின் விவரம் தெருட்டுதல் காண்க. இதைப் யாடிய ஆசிரியர் பெயர் தெரிந்திலது. இப் பாடல் பல பாடவேறுபாடுகளும் அவற்றால் எழுந்த பல கருத்து வேறுபாடுகளும் கொண்டது. கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டு என்பதும் அவற்றுள் திருக்குறளும் ஒன்று என்பதும் பேராசிரியர் நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியன்மார் காலத்து வழங்கி வந்த செய்தியாகும்.

திருக்குறள் தமிழ் நூல்கள் எல்லாவற்றையும் முந்தும் தலைமையுடையது. கீழ்க்கணக்கிற்கும் மேற்கணக்கிற்கும் கூறப்பட்ட இலக்கண வரம்பையும் கடந்து நிற்பது. இத்துணைமாட்சிமைப்பட்ட திருக்குறளைக் கீழ்க்கணக்கில் வைத்துக் கூறல் தவறு என்பார் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்களும் பிறரும். கீழ்க்கணக்கு நூல்களுக்குக் காலத்தால் முற்பட்டது திருக்குறள் மற்றும் அளவானும் பெரிதே. மாட்சியான் மேற்கணக்கில் எண்ணும் செயலே கீழ்மைத்து. வைத்து எண்ணினும் முற்படக் கூறியிருத்தல் வேண்டும். அங்ஙனமின்றி மூப்பால் எனவகையுளிப் படுத்திக் கூறியிருந்தல் அப்பாடல் ஆக்கினோரின் அழுக்காற்றுச் சிந்தையையே காட்டும். இன்னோர் இக்காலத்தும் உளர். துடிசை கிழார் 'முப்பால்கடுகம்' என்று கூட்டி மூவகைப் பொருள்களைக் கூறும் திரிகடுகம் என்று பொருள் காண்பர். நாலடி

நால் மணி, நால் நாற்பது, ஐந்திணை என்று ஏனைய நூல்-கள் எண்ணிட்டுக் கூறப்பட்டன; எனவே திரிகடுகமும் அவ்-வாறே எண்கொடுத்துக் கூறப்பட்டது எனவே பொருந்துவ-தாகும் என்பர் அவர் இக்கருத்து ஏற்புடைத்தே என்க

பண்டித வித்துவான். சங்குப்புலவர் என்பார் மேற்பாட-லில் வரும் 'முப்பால்' என்பதை 'நாற்பால்' என்றும் திருத்-துக. 'நாற்பால்' என்னும் பாடத்தையாண்டுப் பெற்றீர் என்பார்க்கு 'முப்பால்' என்னும் பாடத்தை நீர்யாண்டுப் பெற்றீர் என்றவினாவையே விடையளிக்க என்பார். திருக்-குறளைக் கீழ்க்கணக்கில் சேர்த்த செயலினும் இவர் கூற்று உயர்வுடைத்து அன்று.

2. கி. பி. 1849 இல் வெங்கட சுப்ப பாரதியார் என்-பவர் பிரபந்த தீபிகை என்பதொரு நூலை இயற்றினார். அந்நூல் திருக்குறளைக் கூறாது திருவள்ளுவ மாலையைக் கூட்டிப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் விவரத்தைக் கூறுகின்றது. திருவள்ளுவ மாலைக்கு முப்பால் என்பது பெயரன்று. அப்பாடல் வறுமாறு :

''ஈரொன் பதின்கீழ்க் கணக்கினுட் பகுவகை இயல்பிநா லடி
நானூறும்
இன்னாமை நாற்பதும் நான்மணிக் கடிகைசதம் இனிய
நாற் பான்காரதே
ஆருகள வழிநாற்ப தைந்திணையும் ஐம்பதும் ஐம்பதுடன்
இருபானுமாம்
அலகில் ஆசாரக் கோவைசதம் திரிகடுகம் ஐயிருப தாகு-
மென்பர்
சீருறும் பழமொழிகள் நானூறு நூறதாம் சிறுபஞ்ச மூல—
நூறு
சேர்முது மொழிக்காஞ்சி ஏலாதி எண்பதாம் சிறுகைந்-
நிலை அறுபதாகும்

வாரிதிணை மாலைநூற் றைம்பதாம் திணைமொழி வழுத்-
தைம்ப தாம்வள்ளுவ
மாலையீ ரொனிபதாய்ச் சாற்றுபிர பந்தம் வழுத்துவர்-
கள் புலவோர்களே''

கீழ்க்கணக்கு நூல்களுக்கு இவ்வகைப் பாடல் உள்ளது-பத்துப் பாட்டு, எட்டுத் தொகை முதலியமேற் கணக்கு நூல்-களுக்குத் தனித்தனிப்பாடல்கள் உள. முத்தொள்ளாயிரம் எந்தப் பாடலிலும் சொல்லப் படாமை விந்தையே! எல்லாக் கணக்கையும் கடந்து நிற்கும் திருக்குறளைக் கீழ்க்கணக்கில் வைத்துக் கூறும் புன்மை என்று தொடக்க முற்றதோ தெரிந்-திலது தொல்காப்பியம் இலக்கணம் திருக்குறள் இலக்கியம் இவ்விரு நூல்களையும் தொழுது செல்வன் ஏனைய நூல்கள் திருக்குறள் மேற்கணக்கிலும் சேராது; கீழ்கணக்கிலும் சேராது. தலைமை பூண்டுவிளங்கும் திருக்குறளைத் தமிழ் மறை என்று போற்றலே தமிழர் தம் கடன்மையாம்.

3. திருவள்ளுவரைப் போலவே திருக்குறளும் பல பெயர்களைக் கொண்டது. அவற்றைக் காண்பாம் :-

**அ) திருக்குறள் :-**

வள்ளுவர் பெருமானும் அவர் அருளிச் செய்த நூலும் ''திரு'' என்னும் அடைகூட்டப் பட்டுத் திருவள்ளுவர் திருக்-குறள் என்று வழங்கப்படுகின்றனர். திரு என்பது மேம்பாடு, அந்த மேம்பாடு மாந்தர்க்கு வையத்து வாழ்வாங்கு வாழும் நெறியை உணர்த்தும் பெருமையாகும். மாந்தர் எப்படியும் வாழும்படி என்னும் பிழைபடுகருத்தை விலக்கி அறநெறியில் நின்றே வாழும் முறையையில் உய்ப்பதாம் மேம்பாட்டைக் கொண்டது. திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம் என்பர் பேராசிரியர். தன்னை அண்டியவர் கருத்-தைப் பிணிக்கும் அணிநலம் வாய்ந்தது திருக்குறள் நூல் குறள்வெண்பாவால் அமைக்கப்பட்டிருந்தலால் மேம்பாடு

என்னும் பொருளுடைய ''திரு'' என்னும் அடைகூட்டப் பட்டுத் திருக்குறள் என்னும் கூறப்படுவதாயது. சில நூல்கள் சுவைப்பார்த்தற்கு உரியன. சில விழுங்கத்தக்கன மற்றும் சில மென்று தின்று செரித்துக் கொள்ள வேண்டுவன என்றார். பேகன் (BACON) திருக்குறள் ஈற்றில் கூறியபடி கசடறக் கற்க வேண்டிய உண்மை நூல் ஆகும் வடமொழி நூல்களில் அறம் எனக் கூறப்படுவனவற்றுள் சில மக்கட் பண்பிற்கு ஒவ்வாதனவாய் உள. அன்ன தன்மையானவை அறம் அன்று என மறுக்கப்படும் நடுவுநிலைமை திருக்-குறளில் காணப்படும்.

திருமாலும் குறள் (வாமனர்) ஆனார். திருவள்ளுவர் நூலும் குறள் (வெண்பா) ஆயது. குறளாகி வந்த திரு மால் வஞ்சனை மேற்கொண்டு மாவலி பால் மூன்றடி மண் பெற்று அவனையே அழிக்கலானார். திருக்குறளும் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலை பெற்று மாந்தரை வாழ்விக்கின்றது. வானத்தையும் வையத்தையும் தம் குற ளுருவில் அளக்கக் கூடாதவராய்த் திருமால் நீண்ட (விக் கிரமனின்) வடிவமும் அதற்கு ஏற்ற இரண்டு திருவடிகளும் வேண்டிப் பெற்றார். ஆனால் திருக்குறளோ எம் மாற்ற மும் வேண்டாது ஒன்றே முக்கால் அடியிலேயே எல்லா உலகங்களையும் அளந்து விட்டது. இக்கருத்தைப் பின்வரும் பாடலில் காண்க.

''மாயோன் வடிவம் போல வேள்வியின்
முன் ஒரு குறள்உரு ஆகிப் பின்னது
மூவடி முறைமையில் செல்லாது தாம்தம்
ஈரடி இயக்கம் நிரம்பா அளவையின்
உலகம் மூன்றும் அளந்தன
புலவன் வள்ளுவன் குறள்வெண் பாவே

இதனை ஒப்பவே திருவள்ளுவ மாலையில் பரணர் பெயரால் ஒருபாடல் உளது. அது வருமாறு:

''மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
ஞாலம் முழுதும் நயந்தலந்தான் - வாலறிவின்
வள்ளுவரும் தம்குறள் வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாம்அளந்தார் ஓர்ந்து''

குறள் வெண்பா இரண்டு அடிகள் கொண்டது. முதலடி நாற்சீரும் இரண்டாமடி முச்சீரும் பெற்று நடை தருவது. எனவே முதலடியினும் இரண்டாமடி சீர் குறைந்தது. எனவே இதை ஓரடி முக்கால் எனவும் கூறுவர். சிவபெருமான் அம்மையப்பர் திருக்கோலம் கொண்டான். அம்மை வடிவம் பாதி அப்பன் வடிவம் பாதி. அம்மை இடப்பக்கம். அவ்வடிவமும் திருவடியும் சிறியன. அப்பன் வலப்பக்கம் அவ்வடிவமும் திருவடியும் பெரியன. இந்நிலை கண்ட சிவப்பிரகாச முனிவருக்குத் திருக்குறள் நினைவுற்றது. அப்பன் திருவடி போல் திருக்குறளில் முதலடி பெரியதாகவும் அம்மை திருவடிபோல் திருக்குறளின் இரண்டாமடி சிறியதாகவும் உள்ளமையை உணர்ந்தார். அதைப் பாடலாக்கின்றார். ''என் அடிகள் வெண்குறள் நேர் அடியிரண்டும் என் தலையில் இருத்தும் இறை'' என்பர் அவர் திருமொழி. இதில் அம்முனிவர் திருவள்ளுவரை என் தலைவர் (என் அடிகள்) என்று போற்றலைக் கண்ணுறுக. என் தலைவராகிய திருவள்ளுவர் அருளிய திருக்குறளின் அடிகளைப் போன்று ஒன்று பெரியதும் மற்றொன்று சிறியதுமான தனது இரண்டு திருவடிகளையும் என் தலையில் வைக்கும் சிவபிரான்'' என்பது அவர் மொழியின் பொருளாகும்.

ஆ) முப்பால்

அறம், பொருள், இன்பம் ஆகிய முப்பால்களையும் விளக்கி நிற்கின்றமையின் இப்பெயர் போந்தது. இம்மூன்றும் உணர்ந்தார் வீட்டுப்பாலும் உணர்ந்து பேரின்பம் எய்துவர் என்று கீழ்வரும் பாடல் கூறுகின்றது.

முப்பாலும் உண்டோம் முலைப்பால் இனிநுகரோம்
அப்பாலுக் கப்பாலும் ஆயினோம் — எப்பொருளும்
உள்ள படியுணர்ந்தோம் ஓதிக் குறைதீர்ந்தோம்
வள்ளுவனார் வைப்பெமக்கு வாய்தது.''

முலைப்பால் இனிநுகரோம். இனி எமக்குப் பிறவியில்லை என்பது கருத்து.

## இ) தெய்வ நூல்

உலகம் மாறிக் கொண்டே நிகழ்வது. அப்படி அஃது எத்தனை முறை திரிந்தாலும் இறைவன் என்றும் ஒரு படித்தாய் விளங்குவான். அவன் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகவும் 'பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனாகவும் இருப்பான். அவனை ஒப்பவே திருக்குறளும் எக்காலத்தும் மாற்றம் தேவைப்படாது முக்காலத்துக்கும் ஏற்புடைக் கருத்துக்களைக் கொண்டு நிலவுகின்றது இத்தகைமையுடைய நூலைக் சிற்றறிவினராய் மாந்தர் செய்தல் அரிது. எனவே திருக்குறள் தெய்வத்திருவருளால் தோன்றியது. அங்ஙனம் தோன்றிய அது தன்னை ஓதுவார்க்குத் தெய்வநிலையைக் கூட்டுவிப்பதாகும். மற்றும் அதனை அருளிய ஆசிரியரும் தெய்வப்புலவரும் ஆவர். எனவே திருக்குறள் ''தெய்வநூல்'' என்று ஏத்தப்படுகின்றது

## ஈ) பொய்யாமொழி

திருவள்ளுவர் பொய்யில் புலவர். அவர் அருளிய நூல் பொய்யாமொழி என்க. திருவள்ளுவர் நிறை மொழி மாந்தராவர். எனவே அவர் மொழி பொய்யாது கருதிய பயனைப் பயந்தே விடுமாகலின் பொய்யாமொழி எனப் பட்டது என்க.

வடமொழியில் மாந்தர்க்கு ஒழுக்கத்தைக் கற்பிக்கும் மிருதிகள் பலவுள. அவையாவும் விரும்புவாரின்றிப் பொய்த்து

நிற்பன. அன்றியும் அவற்றை மறுத்தும் அறிஞன்மார் மொழிந்தும், ஒழுகியும் வருகின்றனர். ''வள்ளுவர் செய் திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோர்கள், உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக் கொரு நீதி'' எனவரும் மனோன் மணியமும் எண்ணுக. திருக்குறள் என்றும் பொய்யாத மொழியாய்ப் பல நாட்டினரும், பல மொழியினரும், பல மதத் தினரும் பரவ விளங்குகின்றது. எனவே ''பொய்யாமொழி'' என்னும் பெயர் கொண்டது.

உ) வாயுறை வாழ்த்து

வாய் உறை : சொல் ஆகிய மருந்து. வாயுறை வாழ்த் துக்குத் தொல்காப்பியர் ''வாயுறை வாழ்த்தே வயங்க நாடின் வேம்பும் கடுவும் போல வெஞ்சொல், தாங்குத லின்றி வழி நனி பயக்கும் என்றோம் படைக் கிளவியின் வாயு றுத்தற்றே'' என்று இலக்கணம் அருளிச் செய்தார். வேம் பும் கடுவும் வாய்க்கு இன்னாதன ஆயினும் உடம்புக்கு உறுதி பயப்பன. அது போலச் செவிக்கு இன்னதவாய்த் தோற்றினும் மேற்கொண்டு ஒழுகின் இன்பம் பயப்பது செவி யறிவுறூஉ ஆகும். தேன் இனிக்கும். உடம்புக்கு உறுதி தரும். பாலும் அங்ஙனமே. தேனும் பாலும் போலக் கூறு தல் வாயுறை வாழ்த்தாகும்.

இன்பமும் துன்பமும் என்னும் இவையிரண்டும்
மன்பதைக் கெல்லாம் மனமகிழ — அன்பொழியா
துள்ளி உணர உரைத்தாரே ஓதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.''

என்று மதுரை அறுவை வணிகன் இளவேட்டனார் பெய ரில் காணப்படும் திருவள்ளுவ மாலைப் பாடலும் இக் கருத்தை விளக்குதல் ஓர்க. எனவே ''வாயுறை வாழ்த்து'' என்று வழுத்தப்படுகின்றது.

ஊ) பொதுமறை

ஒரு மட்கலத்தை ஒருவரே பயன்படுத்தல் வேண்டும். பலரும் பயன்படுத்துதல் நோயை விளைக்கும். அன்றியும் எளிதின் உடைந்தழியும். பொற்கலமோ எல்லாரும் பயன் படுத்தலாம். உடைந்தாலும் சீர்படுத்திக் கொள்ளல் கூடும். பயன்படுத்துவார் உடம்பு நலமும் வளமும் பெறும். வட மறையைப் பார்ப்பனர் அல்லாதார் ஓதினால் வடமறை பாழ் படும், என்று கூறுவர். திருக்குறளை ஓதுவார் பெருகப் பெருக அது பேரொளி வீசிப் பார்முழுதும் புகழ விளங்கும். இவ்வுண்மையைத் திருவள்ளுவ மாலையில் கோதமனார் பெயர் கொண்டு திகழும்.

''ஆற்றல் அழியுமென் றந்தணர்கள் நான்மறையைப்
போற்றியுணர்த் தேட்டின் புறத்தெழுதார் — ஏட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினும் ஆற்றல்சோர் வின்று''.

எனும் பாடல் கூறுதல் காண்க. எனவே திருக்குறள் ''பொதுமறை'' எனப்பட்டது.

எ) தமிழ் மறை

மறை = மறைந்துள்ள பொருளை விளக்குவது. இறை உயிர்தளை என்னும் முப்பொருளே மறைந்துள்ள முப் பொருள்கள். அவற்றைத் தமிழால் விளங்குதலின் ''தமிழ் மறை'' ஆயிற்று.

ஏ) உத்தரவேதம்

வடமறையின் பிற்பகுதி உபநிடதம். உபநிடதம் அறிவுக் கருவூலமாகும். திருக்குறள் வாலறிவின் மலர்ந்தமையால் உத்தரவேதம் எனப்பட்டது. திருக்குறள் வழிநூலே என்னும் கொள்கை சிலர்பால் உண்டு. அன்னோர் பிரமன் செய்த தண்டநூல் திரிவருக்கம்; அதன் வழி நூல் திருக்குறள் என்று

கதைப்பர். வேறுசிலர் வியாழ வெள்ளிகளின் நூல்களையும் சாணக்கியன் நூலையும் திருக்குறளுக்கு முதல் நூல் என்று நிறுவ முழு மூச்சுடன் பணியாற்றுவர். இவர் கூறும் நூல்கள் அனைத்தும் நாடுவாருமின்றிப் பேணுவாருமின்றித் தென்புல வேந்தனைக் காண ஆர்வத்தோடுள்ளன. இன்னோரினும் பேராசை பிடித்த ஒருவர் ''முப்பாற்குப் — பாரதம்சீ ராம கதை மனுப் பண்டைமறை நேர்வன மற்றில்லை நிகர்'' என்று பாடிவைத்தார். இப்பாடலில் வரும் 'மற்று' என்னும் சொல்லை அசையாக வைத்துப் பொருள்கண்டு இவர் போன்றாரை நாணச் செய்வோமாக.

ஐ) *திருவள்ளுவப் பயன்*

பொருள் வெளிப்படை.

ஒ) *திருவள்ளுவர்*

நூல்கள், ஆக்கியோன், ஆக்குவித்தோன், அளவை, இடுகுறி, சிறப்பு முதலிய பல விகற்பத்தான் பெயர் பெறும். தொல்காப்பியம், கல்லாடம் முதலிய ஆக்கியோனால் பெயர் பெற்றன. ஆனால் திருக்குறள் ஆசிரியர் பெயரையே கொண்டு நிலவும் சிறப்புடையது. இலக்கண நூல்கள் கருத்தா ஆகுபெயரைத் திருவள்ளுவர் படித்தான் என்று எடுத்துக் காட்டி விளக்குா்.

ஓ) *அறம்*

உலக வாழ்வில் தலைமையுடையது அறம். அறம் கலவாத இன்பமும் பொருளும் அழிவை விளக்கும். அறமே வாழ்வு; வாழ்வே அறம் என்க. ''அன்பொரீஇத் தற்செற் றறம்நோக்கா தீட்டிய, ஒண்பொருள் கொள்வார் பிறர்'' என்றும் ''அறத்தான் வருவதே இன்பம்'' என்றும் திருவள்ளுவர் பெருமான் பொருளும் இன்பமும் அறத்து வழிப் படலை உணர்த்தியுள்ளார். எனவே திருக்குறள் ''அறம்'' எனப்பட்டது. படலை

''ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளவே
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில் என்று
அறம்பா டிற்றே ஆயிழை கணவ'' (புறநானூறு 34)

எனவரும் பாடலால் உணர்க. இப்பாடற் கண் ''பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும்'' என்று பொருள் சிறவாப் பாடமே இப்போதுள்ள அச்சுப் படிகளில் உள்ளது. 'குரவர்த் தப்பிய' என்னும் பாட வேறுபாடு உள்ளது பற்றி எக்குறிப்-பும் காணப்படவில்லை. 'குரவர்த் தப்பிய கொடுமையோர்க் கும்' என்னும் பாடமே பொருள் நலமும் ஓசை நலமும் உடையதென்பது நடுநிலையாளர்க்குப் புலனாகும். இஃதே உண்மைப் பாடம் என்பது ''எந்நன்றி கொன்றார்க்கும்'' எனத் தொடங்கும் திருக்குறள் உரைக்கண், பரிமேலழகர் ''பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலையறுத் தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், குர்வர்த்தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல்'' என்று கூறுதலால் அறிதல் கூடும். திருக்குறள் உரையிலும் பார்ப்பார்த் தபுதலும் என்னும் பாடம் புகுத்த முயற்சி மேற்கொள்ளப் பட்டதாயினும் அது வெற்றி பெற வில்லை என்பது இஞ்ஞான்று நிலவும் திருக்குறள் பதிப்புக்களைக் கண்டாலே விளங்கும். புறநானூற்று ஓலைச் சுவடிகளின் எண்ணிக்கை சுருங்கியும் திருக்குறள் ஓலைச்சுவடிகளின் எண்ணிக்கை பெருகியும், இருத்தலே அம் முயற்சி முற்றுப் பெருமைக்குக் காரணமாதல் வேண்டும். திருக்குறள் உரைவளம் வெளி யிட்ட ஆசிரியர் இக்குறளுக்கு வரைந்த அடிக்குறிப்பில் ''ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும், மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும், பார்ப்பார்த் தப்பிய கொடுமை

யோர்க்கும்'' என்பது புறநானூறு 34-ம் பாடல், ''குரவர்த் தப்பிய கொடுமையோர்க்கும்'' என்பது முன்னைய பாடம் போலும் என்று நெகிழ்ந்துரைத்தலும் ஈண்டு எண்ணுக. தமிழராவார் இனியேனும் உண்மைப் பாடம் ஈதென உணர்ந்து வழங்குவாராக.

ஔ) முதுமொழி

முதுமை = பேரறிவு தொன்மை எனவும் படும். தொன்மையும் பேரறிவு விளைக்கும் தன்மையும் கொண்டு பிறங்குவதாகலின் 'முதுமொழி' எனப்பட்டது.

அ) பொருளுரை

மக்கள் எய்துதற்குரிய உறுதிப் பொருள்கள் அறம், பொருள், வீடு, இன்பம் என்னும் நான்கு ஆகும். அவற்றை விளக்கியருளலால் 'பொருளுரை' ஆயிற்று. ''பொய்யில் புலவன் பொருளுரை தேராய்'' என்பது மணிமேகலை.

4. நம் நாடும் மொழியும் அயலவர் ஆட்சியால் மாட்சியிழந்து வாட்டமுற்றன. தமிழ்நாடு நாயக்கர், மராத்தியர் முதலிய தமிழறியா மன்னர் கைப்பட்டுப் பொலிவிழந்தது. தமிழ்நாட்டின் பல பிரிவுகளை ஆண்ட அன்னோர் தமிழிலோ தமிழர் வாழ்விலோ ஊக்கம் கொள்ளாமல் இன்பநுகர்ச்சியிலேயே காலம் கழித்தனர். அக்காலை அரசர் பேராளர் (VICEROY) கல்கத்தாவில் தங்கியிருந்தார். அவர் திருக்குறள் மொழி பெயர்ப்பைப் படித்துச் சுவைத்தவர். தமிழில் அதைக்கேட்டு இன்புற ஆர்வம் கொண்டிருந்தார். அவரைக் காணத் தஞ்சை மன்னர் சரபோசி என்பார் சென்றார்.

அரசர் பேராளர் சரபோசியைத் திருக்குறள் நூல் பற்றி வினவத் தொடங்கினார். சரபோசி தமிழ் நாட்டின் ஒரு சிறு பகுதிக்கு மன்னரேயன்றித் தமிழ் மொழியின் எப்பகுதியையும் கண்டுமிராதவர். எனவே சரபோசி மறுமொழி கூற இயலாமல் தத்தளித்தார். பின்னர்த் தமிழில்

திருக்குறளைப் போலப் பல நூல்கள் உளவாகலின் திருக்குறளைப் பற்றி விவரமாகக் கூற முடியவில்லை என்றும் தஞ்சையை அடைந்ததும் திருக்குறள் பற்றிய செய்தியை அறிவிப்பதாகவும் புனைந்துரைத்தார். பின்னர்த் தஞ்சை எய்திய சரபோசி தமிழ் நூல்களைத் தொகுக்கத் தலைப் பட்டார். அதுவே தஞ்சை சரசுவதி மகால் என்று இந்நாள் விளங்குகின்றது. இங்ஙனம் திருக்குறள் ஏனைய நூல்கள் அழிந்து படாமல் பேணிய பெருமையையும் கொண்டுள்ளது.

5. திருக்குறள் பழந்தமிழ் நூல்களில் ஆளப்பட்டு உள்ளது. ''நீரின் றமையா துலகு'' என்னும் குறளை ''நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்'' என்று குடபுலவியனாரும் ''நீரின் றமையா வுலகம் போல'' என்று கபிலரும் ஆண்டுள்ளனர். ''விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று'' என்னும் குறட் கருத்தை ''இந்திரர் அமிழ்தம் இயைவ தாயினும், இனிதெனத் தமியர் உண்டலும் இலரே'' என்று கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி கூறுதல் காண்க. ''அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான், கேடும் நினைக்கப் படும்'' என்ற குறளை விரித்து ''மிகப்பே ரெவ்வம் உறினும் எனைத்தும், உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம், நல்லறி வுடையோர் நல்குரவுள்ளுதும்'' என்று கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் கூறுதல் காண்க. 'உற்றுழி உதவியும்' என்னும் புறப்பாடலும் 'புதல்வ னீன்ற' எனும் நற்றிணைப் பாடலில் வரும் ''முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சு முண்பர் நனிநாகரிகர்'' என்பதும் திருக்குறளின் கருத்துக்களேயாம். ஆலத்தூர்கிழார், உலோச்சனார் முதலினோரும் திருக்குறட் கருத்தை ஆண்டுள்ளனர். இதனால் திருக்குறள் கடைச் சங்க நாளில் பெற்றிருந்த மாட்சி நனி விளங்கும். எனவே தமிழ் நூல் களில் முதன்மை வாய்ந்தனவும் முந்தினவும் தொல்காப்பியமும் திருக்குறளுமே என்று தெளிக.

இங்ஙனம் அறிவுக் கருவூலமாய் அமைந்துள்ள திருக் குறளை நாத்திகநூல் என்று அறியாமையுடையோர் சிலர் நாற்பதாண்டுகட்கு முன்பு வரை கருதியிருந்தனர். இஃது தமிழர் அயலவர் சொல்வழி நின்று எத்துணை இருளில் மூழ்கியுள்ளனர் என்பதனையே காட்டும். தமிழர் என்று துயிலுணர்வரோ! தமிழகத்தே அறிவாம் ஞாயிறு என்று தோன்றுமோ!

தமிழர் தம் அறியாமையைப் போக்க இச்சிறு நூல் தொண்டாற்றுவதாகுக. இதனினும் யாம் வேண்டும் கைம்மாறு பிறிதில்லை என்க.

## 4. முப்பாலும் நாற்பாலும்

1. திருக்குறள் அறம், பொருள், இன்பம் என்று முப் பாலாக முறைப்படுத்தப்பட்டு இருப்பினும் அது வீட்டுப் பாலையும் விளக்கி நிற்பதேயாம் என்க. இதனை முன்னரும் கூறினாம். ''அறம் பொருள் இன்பம் வீடென்னுமந் நான்கின், திறம் தெரிந்து செப்பியதே'' எனவும், ''முப்பாலின் நாற்-பால் மொழிந்தவர்'' எனவும் திருவள்ளுவமாலை கூறுதல் தேர்க. அறம் இவ்வுலக வாழ்க்கைக்கே உரியதன்று. வீட்டுலக நெறியாகிய துறவும் அறத்தொடு பட்டதே. அத் தன்மை துறவற இயலில் கூறப்பட்ட குறள்களான் அறிக. இவ்வுலக வாழ்வை இல்லறம் எனலும் அவ்வுலக வாழ்வைத் துறவறம் எனலும் உன்னுக. இக்கருத்தைச் சாந்தலிங்க அடிகளார் வைராக்கியதீபம் என்னும் தம் நூற்கண் பின்வரு-மாறு கூறுகின்றார் :-

''ஈதலே அறமும் அனித்தமாம் அனைத்தும் இகழ்ந்துகை
விடுதலே வீடும்
ஆதலால் தானக் குரியதில் வாழ்க்கை யதனையே அறம்
எனக் கூறிக்

கோதிலா வீட்டின் இலக்கணமும் இருத்தல் குறித்துமெய்
யுணர்வையும் துறவூ
டோதினார் வேதம் தலைத்தமிழ் உருவத் தொளித்தெமக்
களித்தவள் ளுரே''.

வடநூல்களை ஒப்பத் திருக்குறள் வீட்டை விரித்துக் கூறிற்றில்லை என்பர். பரிமேலழகர் வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து ஆகலின் துறவறமாகிய காரண வகையால் கூறப்படுவதல்லது இலக்கண வகையால் கூறப்படாது எனலைத் தேர்க. அற்றாகலினன்றே வீட்டின் நிலைமையை இருந்தபடி இருந்து காட்டிச் சொல்லாமல் சொன்னான் தென்முகப்பரமன். இத்திறம் ஓராது அதனை உணர்த்துவேம் எனப்புக்கச் சிற்றறிவினராய மாந்தர் செய்த வடநூல்கள் பல வேறுபாடுகளைக் கொண்டிருத்தலால், அவற்றைப் பற்றும் மாந்தரும் பல்சமயத்தவராய் முரணி நிற்கின்றனர்.

திராவிடப் பிரகாசிகை என்னும் நூலும் திருக்குறள் வீடு கூறும் எனவும் அகத்தியர், தொல்காப்பியர், திருவள்ளுவர் முதலியோர் தமிழால் வீடு கூறார் என்று நச்சினார்க்கினியர் கூறுதல் நவைபடுவதாம் எனவும் கூறிற்று

2. திருக்குறள் விரிவுரை என்னும் தம்நூற்கண், திரு வி.க. என்பார் அறம், பொருள், இன்ப வாழ்வின் பயனே வீடு எனவும் வீடு என்று ஒன்று தனித்து இல்லை என்பதே பழந்தமிழாசிரியன்மார் கொள்கை எனவும் அறம், பொருள், இன்பங்களில் வீடு விரவி நிற்கின்றது எனவும் கூறியுள்ளார். இவர் கூற்று உண்மையாமேல் அக்கொள்கை இறையுண்மையை மறுப்பாரினும் இழிந்ததே என்க. எனவே இவர் கூற்று ''சீ!சீ! இந்தப் பழம் புளிக்கும்'' என்ற நரியின் கதையையே நினைவூட்டுகின்றது. இங்ஙனம் இவரே கனவு கண்டு உரைக்கின்றார் என்பதே உண்மை. என்னை? இறையனார் களவியல் உரைக்கண் ''களவு, கொலை, காமம்,

இணைவிழைச்சு என்பன அன்றோ சமயத்தாரானும் உலகத்தாரானும் கடியப்பட்டன'' எனவும் ''இணைவிழைச்சினுள்ளே மிக்கதோர் ஒழுக்கம் காட்டினான் ......... அது கேட்டு இனியானும் தவம் செய்து இதனைப் பெறுவல் என்று அதன் மாட்டு வேட்கையால் தவம் செய்யும். செய்யா நின்றானைப் ''பாவீ, இதன் பரத்ததோ வீடுபேற்றின்பம் என்று வீடுபேற்று இன்பத்தை விரித்து உரைக்கும் ......... கேட்டு, அதனை விட்டு வீடுபேற்றின் கண்ணே அவாவி நின்று தவமும் ஞானமும் புரிந்து வீடுபெறுவானாம் என்பது'' எனவும் வருதலான்.

எனவே திருக்குறள் விரிவுரையாசிரியர் அவர் சிந்தை சென்றவாறெல்லாம் கூறினாரே அன்றி அவர் கூற்றுக்கு எட்டுணைச் சான்றும் இன்றெனை அறிக. இங்ஙனம் அவர் பண்டைத் தமிழாசிரியன்மாரையே அன்றித் திருவள்ளுவரையே முரணுதல் உண்டு என்பதும் தெளிக. இது காறும் கூறியவற்றால் திருக்குறள் முப்பாலாக அமைந்து இருப்பினும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பாலையும் விளக்கி நிற்பதே என்பது புலனாம்.

## 5. திருக்குறள் உரையாசிரியன்மார்

I. மழைக் காலத்தில் காளான் முளைக்கும். அதை நாய்க் குடை என்பர். அது தோன்றிய வேகத்திலேயே அழிந்து விடும். சிறுவர் அதனை எடுத்துச் சிறிது நேரம் அழகு பார்ப்பர். பின் வீசி எறிவர். அஃது எங்கோ ஒரு மூலையில் கிடந்து ஒழிவுறும். பெரியோர் அதனை ஏறெடுத்தும் பாரார். திருக்குறளுக்கு நாய்க்குடை போன்ற பல உரைகள் இருபதாம் நூற்றாண்டில் எழுந்தன. ஒருவர் தமிழ்ப்பற்று மிக்கவர். தமிழறிவும் சிறிது வாய்த்தவர். அவரைச் சூழ்ந்து கொண்டு ஒரு கூட்டம் வயிறு வளர்க்கும். இக்கூட்டர் சூட்டும் புகழ் மாலையால் அவர் உள்ளத்தில் பெருமை

பொங்கி வழியும். அவர் மனமும் கையும் பரபரக்கும். காட்சிக்கு எளிதாய்க் கடுஞ்சொல் இலதாய திருக்குறள் அவர் கண்ணில் படும். உடனே அவர் திருக்குறள் உரைப்பணியைத் தொடங்குவர். அவர் அரசியல் சார்புடையவராயின் அச்சமே வேண்டாம். அச்சிட்ட படிகளில் பெரும் பகுதி நூல் வெளி-யீட்டு விழாவிலேயே விற்பனையாய் விடும். பட்டமும் புகழும் அவரை அடையும். அவர் உரை கேட்பாரற்று நூல்நிலையங்களின் ஒரு மூலையில் மோனத் தவம் புரியும்.

ஒருவர் நல்ல புலமை பெற்றிருப்பார். அவர் ஒரு கட்சித் தொண்டராயும் இருப்பார். அக்கட்சியின் கொள்கைகளுக்கு அவர் புலமை ஊழியம் புரியும் திருக்குறளுக்கு உரை எழுது-வார். திருக்குறளில் திருவள்ளுவர் உள்ளத்தைக் காண முயலாமல் தம் கட்சித் தலைவரின் உள்ளத்தைக் காணப் பேருழைப்பு கொள்வார். திருக்குறளில் வரும் சொற்களைத் தம்மனம் சென்றவாறெல்லாம் அலைத்துத் தம் கொள்கை-யைக்கு உரைவடிவம் தருவார்.

டாக்டர். பெ.கு. வரதராசன் என்னும் தமிழறிஞர் எம் நண்பராவர். அவர் பகுத்தறிவு உரையாசிரியரைக் காண நேர்ந்தது இருவருக்கும் கருத்து வேறுபாடு தோன்றியது. அக்காலை அவ்வாசிரியர் எம் நண்பரை நோக்கிப் பிறர் கருத்தையும் மதித்தல் வேண்டும் என்று அறிவுரை வழங்கி-னாராம். அவரோ திருவள்ளுவர் கருத்தைப் புறம்போக்கித் தம் கருத்தை உரையாக்கியவர். அவர் பாசறையிலேயே இருந்த மற்றோர் உரையாசிரியர்,

''பகுந்தறிவாளராகிய புலவர் குழந்தை கொட்டையை எடுத்துவிட்டுச் சுளையை எளிதாக விழுங்குபவர் போல, கடவுள் என்ற கருத்தை மட்டும் மெல்ல நீக்கிவிட்டு, திருவள்ளுவரின் குறட்பாவுக்கு மிக எளிய வெள்ளை உரை-யையே செய்துள்ளார். உண்மை அறிவைப் பெறுவதே

கல்வியின் பயன் ஆகும் என்பது அவர் கருத்துரை. இறை வாழ்த்து அதிகாரத்துக்கும் இக்கருத்துடைய குறட்பாவுக்கும் என்ன தொடர்பு என்பதை அவர் விளக்கவில்லை'' (இரண்டாம் குறளுரை) எனவும், ''கிட்டத்தட்ட நேர்மையுரை கண்டுணர்ந்தும் ''கடவுள் கல்வியின் இலக்கு என்று கூறத் துணியாத நம் காலப் போலிப் பகுத்தறிவு, போலி ஆத்திகம் ஆகியவற்றின் பிடியில் பட்டு, கண்டு எடுத்த வைரத்தை எறிந்து விட்டுக் கண்ணாடித் துண்டுகளைப் பொறுக்கி எடுத்து அடுக்கிறார் கவிஞர்''.

என்று அவர் உரையில் சிறப்பின்மையைக் கூறுதல் அறிக. இங்ஙனம் கூறும் இவரும் இடர்ப்படாமல் உரை செய்தார் இல்லை என்பதும் குறித்தற்பாலது. இத்தகைய உரைகள் திருவள்ளுவரை மறைக்கும் திரைகள் ஆகும். தாம் கூறுவன-வற்றுக்குத் திருக்குறளை ஒரு நாள் மேற்கோள் காட்டும் வழக்கம் கொண்ட ஆசிரியர் ஒருவர் இருந்தார். அவர் ஒரு நாள் நெடுந்தொலைவுப் பயணத்தை மேற்கொண்டார். நடுப்பகல் நண்ணியது. ஆசிரியருக்குப் பசி எடுத்தது. அவர் நிழலும் குளமும் உள்ள ஓரிடத்தில் அமர்ந்து தாம் கொணர்ந்த கட்டுச் சோற்று முட்டையை அவிழ்த்தார். அக்காலை அவர் வெறுக்கும் ஒருவர் பசியால் சோர்ந்து ஆண்டடைந்தார். ஆசிரியர் வந்தவரைக் கண்டு கொள்ளவே இல்லை. தாமே உண்ணத் தொடங்கினார். அக்காலை வந்தவர்

''விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று

என்று கூறினார். அதுகேட்ட ஆசிரியர் ஒரு முள்ளில் சோற்றுப் பருக்கையைக் குத்தி ஓர் இலையில் வைத்து வந்தவர்முன் அவ்விலையை வைத்து

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்

என்று உரைத்தார்.

இவ்வாசிரியருக்கும் திருக்குறளில் தம் கருத்தை வலிந்து நுழைக்கும் உரையாசிரியன்மார்க்கும் வேறுபாடும் உளது கொல்?

II 2. திருக்குறளுக்கு உரைகண்ட பண்டையாசிரியன்மார் அவர் பெயரை

''தருமர் மணக்குடவர் தாமத்தர் தச்சா
பரிமே லழகர் பருதி — திருமராயர்
மல்லர் பரிப்பெருமாள் காலிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை கண்டார் இவர்''

என்னும் பாடல் கூறுகின்றது இவர் தம்முள், பரிமேலழகர், மணக்குடவர், பருதி பரிப்பெருமாள், காலிங்கர் என்னும் ஐவர் உரைகளே நமக்கு கிடைத்து உள்ளன உரைகள் யாவற்றினும் பரிமேலழகர் உரையே அறிஞன் மாரால் பாராட்டப்பட்டு வருகின்றது. இன்னும் எத்தனைப் புத்து ரைகள் எழுந்தாலும் பரிமேலழகர் உரையை வீறி நில்லாது தாழ்ந்தே கிடக்கும் போலும்!

இனி உரையாசிரியன்மார் பற்றிய செய்திகள் சில தருவாம்.

*1. பரிமேலழகர்*

இவரைப் பரிமேலழகியார், பரிமேலழகரையர் எனவும் கூறும். இவர் திருக்குறள், பரிபாடல், திருமுருகாற்றுப் படை ஆகிய மூன்று நூல்களுக்கும் உரை செய்தார் என்பர். பரிமேலழகரின் உரைச் சிறப்பை உமாபதி சிவனார் பெயரில் வழங்கப்படும் கீழ்வரும் பாடல் உணர்த்துகிறது.

''வள்ளுவர்சீர் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை — ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாம் தரம்

இப்பாடலில் தெய்வத் திருநூல்களோடு பரிமேலழகர்

உரையும் வைத்து எண்ணப்பட்டமை அறிக. இச்சிறப்பு திருக்குறள் உரைக்கு மட்டுமே என்பது தெளிக. பரிமேல- ழகர் தம் கல்வித் திறனும், திருவள்ளுவர் உள்ளத்தை உய்த் துணரும் திறனும், திருக்குறளுக்கு உரைகண்ட பதின்மரில் இறுதியில் வந்தவராகலின் ஏனை ஒன்பதின்மர் உரையையும் உணரும் வாய்ப்பும் இவர் உரையை ஏனையர் உரையினும் மேலாம் தரமாக்கின. இவர் தம் உரையின் விழுப்பத்தை நிறுவுதற்குப் பாண்டியன் முன் வெண்கலப்பரி இவர்ந்து காட்டினர் என்றும் அதனால் இவரைப் பரிமேலழகர் என் றனர் எனவும் ஒரு புனைகதை உள்ளது. இத்தகு கதைகள் ஆசிரியரைப் பெருமைப்படுத்தாமல் இழிவு படுத்திவிடும். திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவருள் திருச்சி யைச் சேர்ந்த இராவ்சாகிப். கோ.வன்மீகநாத பிள்ளை என் பாரும் ஒருவர். பரிமேலழகர் உரையின் விழுப்பத்தை இப்பெரியார் கூறுதலைக் கீழே காண்க.

"The twentieth century, however, saw a renaissances not so much of Tamil Literature as of interest in Tamil Literature and this has produced a spate of commen taries, by people, none of which can compare with PARIMELAZAGAR in learning or intuitive perception of the mind of TIRUVALLUVAR. These commentaries, however sew a valuable purpose. They act as foil to brilliance of Parimelazagar's commentary."

இதனால் பரிமேலழகர் உரைக்குக் கண்ணேறு படாம- லிருக்க ஏனைய உரைகள் துணை செய்கின்றன என்பது விளங்கும்.

அற்றேல் அஃதங்ஙனமாக பரிமேலழகர் உரையில் யாண்டும் குற்றமே இலையோ எனின் ஒரு சில இடங்களில் குற்றம் தங்கியிருத்தல் கூடுவதே என்னை? அரியகற்றார்

சற்றார் கண்ணும் தெரியுங்கால். இன்மை அரிதே வெளிறு என்பது பொய்யா மொழி ஆகலான் ஆயின் பரிமேலழகர் பிழை செய்து விட்டார் என்று கூக்குரலிட்டுப் புத்துரை காணப்புகுந்தாரில் ஒருவரேனும் திருவள்ளுவரின் உள்ளத்-காணமுயலாது ஒவ்வொரு குறளிலும் தம்உள்ளத்தையன்றோ காணமுற்படுகின்றனர் இதைவிடத் திருவள்ளுவருக்கு இழைத்தலாகும் பெருந்தீங்கும் வேறு ஒன்று உளது கொல்?

''வள்ளல் சிலைப்பெரு மாள்நச்சர் சாத்தர் வழுதிமுதல்
தள்ளுவ னார்க்குத் தலையான பேரையும் தன் உரையை
விள்ளுவ னார்க்கும் திருக்காஞ்சி வாழ்பரி மேலழகன்
வள்ளுவ னார்க்கு வழிகாட்டி னான்தொண்டை மண்–
டலமே.

எனவரும் தொண்டை மண்டல சதகச் செய்யுள் பரி–மேலழகரைக் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவர் என்று கூறுகின்–றது. ஆனால் இச்சதகம் செவிவழிச் செய்திகளைப் பற்றிக் கொண்டு நடத்தலின் வன்மையுடைச் சான்று ஆகாது பரிபாடல் சிறப்புப்பாயிரம் பரிமேலழகரைக் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவர் என்று கூறாமையும் எண்ணுக. அச்சிறப்பிப்பாயிரம் ''கண்ணுதற்கு கடவுள்'' எனத்தொடங்கும். அது ''நீணிலம் கடந்தோன் தாள்தொழுமரவின் பரிமேலழகன்'' என்பதால் இவர் வைணவர் என்கின்றனர். இதுகொண்டு இவர் காஞ்சிபுரம் உலகளந்த பெருமாள் கோயில் பூசகர் எனவும் சிலர் கூறுகின்றனர். இம்முடிபுக்கு இன்னோரே சான்றாவர். பிறசான்று இன்று. என்னை?'' நீணிலங் கடந்தோன் தாள்-தொழுமரபு திருமால் கோயில் பூசகர் என்பர் ஒவ்வாதாகலின்· அத்தொடர் திருமால் வழிபாட்டினர் எனலையே விளக்கும். திருக்குறள் உரைச் சிறப்பாயிரப்பாடலாமாறு :

''விரைத்தார் அலங்கல் திருவள் ளுவர்முன்னம் வெண்-
குறட்பா

நிரைத்தார் மிகுபொருள் நான்கும் விளங்க நெறிப்புலவர்
உரைத்தார் புலரும் அதற்குரை தன்னை உலகறியக்
கருத்தான் வகுத்தமைத் தான்கலை தேர்ஒக்கை காவலனே''

இப்பாடல் பரிமேலழகரை ஒக்கைக் காவலன் என்று கூறுகின்றது. ஒக்கை என்னும் ஊர் சோழ நாட்டிலும் உள்ளது. பாண்டிய நாட்டிலும் மதுரை மாவட்டத்தில் ஒக்கூர் என்று ஓர் உள்ளது. பரிமேலழகர் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர் என்பதை

''முன்னுரைத்த தேவர் குறள்
இன்னதிது என்னுரைக்க எய்தினான் — முன்னூல்
புரிமே லழகியகோப் போற்றுதமிழ்க் கடல்
பரிமே லழகியனென் பான்''

எனவரும் பாடல் வலியுறுத்துகின்றது. எனவே மதுரையைச் சேர்ந்தவர் என்பதே உறுதிப்படுத்துகின்றது. இத்தகைய முரண்பாடுகளோடு பரிமேலழகர் சைவராயிருந்தும் பிற்றைநாளினர் சூழ்ச்சியாலே வைணவர் என்று கூறப்படுகின்றார் என்று ஒரு செய்தியும் நிலவுகின்றது. சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள் வீர சோழியப் பதிப்புரையில்

''இலக்கண இலக்கிய கலைக்கியான கருத்தாக்களை யன்றிச் சைவநாயன்மாரை ஒப்பச் சமயாதீதமான தொண்டர்கள் ஆழ்வாராதியரை ஈண்டுக் குறித்திலேம். வஞ்சகச் சூதினால் வடவேங்கடத்தைக் கைப்பற்றியது போலவும் விக்கினேசுவரைத் திருநாமம் சாத்தித் தும்பிக்கையாழ்வார் என்று கொண்டது போலவும் தமிழ் நூலுடையார் தம்சமயத்தில் யாரும் இல்லாத குறையை நிவிர்த்திக்க முயன்று வல்லடி வழக்காக வைஷ்ணவர்கள், சாதியில் ஒச்சனும் சமயாசாரத்தில் பிடாரி பூசகனும் ஆகிய கம்பருக்கு ஆழ்வார் நாமம் சாத்தியும் அடிப்பட்ட சிவாசாரிய குலத்துப் பிறந்துப்

சாம் பரியந்தம் சிவார்ச்சனையே செய்த பரிமேலழகர்
அரிமேலழகுறாஉம் அன்பமைம் அந்தணன் பரிமேலழகன் என
வாய்ப்பகட்டுப் பேசியும் யாது பயன்? உரை உலைமுடியால்
மறைக்க வா?''

என்று கூறுதல் காண்க.

பரிமேலழகர் தம் உரையில் ஒரு சில இடங்களில் நாலாயிரப் பிரபந்தச் செய்யுட்களைக் காட்டியுள்ளார் என்பது வாய்மையே ஆயினும் இவர் உரையில் சிவதத்துவ உணர்ச்சியே மேலோங்கி நிற்றலை நல்லறிஞன்மார் அறிவர்.

உயிர்களுக்குத் தோற்றம் கூறும் பாஞ்சராத்திரம் என்னும் வைணவ ஆகமம். இராமானுசர் தாம் இயற்றிய பிரமசூத்திரப் பாடியத்திலே ''(ஜீவனுக்கு) உத்பத்திஸம்பவியாமையாலே (ஜீவோத்பத்தி சொல்கிற பாஞ்சராத்ரம் பிரமாணமாக மாட்டாது'') என்று சொற்பொருளும்' ''பாஞ்சராத்ரத்திலும் சில வேதவிருத்தார்த் தங்கள் பிரதிபாதிக்கப்படுகின்றன. அவையாவன : (வாஸுதேவாத் ஸங்கர்ஷணோநாம ஜீவோஜாயத) என்று ஸங்கர்ஷணன் என்கிற ஜீவன் உண்டாகிறான் என்று சொல்லிற்று. இது (நஜாயதேம்ரியதே) என்று ஜீவனுக்கு உத்பத்தி விநாசங்கள் இல்லை எனும் வேதத்தோடு விரோதிக்கின்றது. மேலும் நாலு வேதங்களிலும் பரம புருஷார்த்தம் இன்னதென்று அகப்படாமல் பின்பு இப்பாஞ்சராத்ரத்தைக் கற்றான் என்று வேதத்தை அநாதரித்துச் சொல்லிற்று. ஆகையால் இவ்வாகமமும் அப்ரமாணம் என்று பூர்வபக்ஷம்'' என்று விளக்கமும் கூறியிருத்தலைக் கருதுக.

(மாடபூசி ராமாநுஜாசார்யர் மொழிபெயர்ப்பு)

பரிமேலழகர் அதைமுரணி ''உயிர்கள் நித்தம் ஆதலின் மன்னுயிர் என்றார்'' (குறள் 244) எனவும், ''அநாதியாகத் துன்பம் எய்தி வருகின்ற உயிர்ஞானம் பிறந்து வீடுபெறும்'' (குறள் 266) எனவும் ''அநாதியான அவிச்சை'' (குறள் 360)

எனவும் கூறிப் பதி, பசு, பாசம் முதற்பொருள்கள் என்று சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள் உண்மையை உடன் படுகின்றார். ''எண்குணத்தான்'' என்பதற்குத் தன் வயத் தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பொருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை என்பவற்றைக் கூறி இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது என்று விளக்குகின்றார் இவற்றால் இவர் சிவாகமங்களில் நல்ல பயிற்சியுடையராதல் வேண்டும். மேலும் பரிமேலழகர் என்ற பெயர் கூடற்பெருமானுக்கு உரியது. கூடலைச் சார்ந்தவராகக் கூறப்படும் இவரும் இப்பெயர் கொண்டுள்ளது கருத்தற்பாலது. இவர் காலம் கி.பி பதின் மூன்றாம் நூற்றாண்டு என்பர். இவர் திருக்குறட் கருத்துக் களை வடநூற் கருத்துக்களோடு இணைத்துப் பேசும் இயல்பு உடையவர். இவர் தம் உரை பரிமேலழகியர் விருத்தி எனவும் இலக்கண உரை எனவும் வழங்கப்படுகிறது.

2. மணக்குடவர்

இவர் மணக்குடியர் எனவும் மணக்குடையார் எனவும் கூறப்படுகின்றார். இவர் மணக்குடி என்னும் ஊரினர் என்று சிலர் கருதுகின்றனர். இவர் உரையும் பரிப்பெரு மாள் உரையும் பெரிதும் ஒத்து நடப்பன. பரிப்பெருமாளுக்கு மணக்குடவர் முற்பட்டவர்.

3. பரிப்பெருமாள்

இவர் பாண்டி மண்டிலத்துச் சேது நாட்டைச் சேர்ந்த தென்செழுவை என்னும் ஊரினர். இது ''தென் செழுவை தெய்வப் பரிப்பெருமாள்'' என்னும் பாடற் பகுதியால் அறியக் கிடக்கின்றது. இவர் காலம் 11 ஆம நூற்றாண்டுக்குப் பிற்பட்டது என்க.

4. பரிதியார்

இவர் பருதியார் எனவும் படுவர். திருப்பருதி நியமம் இவர் ஊராதல் கூடும் என்று துடிசைகிழார் கூறுவர். இவ் ஊர் ஒரத்தநாடு செல்லும் மண் சாலையில் உளூருக்குப் பக்கத்தில் உள்ளது இவர் சிறந்த சிவநெறிச் செம்மல் என்பது இவர் உரையால் புலனாகின்றது.

5. காலிங்கர்

இவர் காலிங்கர் எனவும் படுவர். உரை சமணச் சார்பாக உள்ளது.

## 6. குறள் வைப்பு முறை

1. உயிர்கள் ஆணவ மலத்தால் பிணிக்கப் பட்டுத் தம்மையும் தலைவனையும் அறியாது துன்புறுகின்றன. அவை தம்மை அறிந்து தலைவனைக் கூடி இன்புற வேண்டும். இது கருதியே பேரருளாளனாகிய இறைவன் உயிருக்கு உடப்பையும் உலகையும் உதவியுள்ளான். அங்ஙனம் உயிர்கள் எய்தும் உடம்புகளுள் மக்கள் யாக்கையே மாண்புடையது. என்னை? உயிர்கள் மலக்கட்டை அறுத்து வீடு பெறுதற்கு அப்பிறவியே உரியதாகலின். உயிர்கட்குப் பிறவிகூட இணைவிழைச்சு உதவுகின்றது. இணை விழைச்சின்கண் இன்பம் இன்றெனில் எவரும் அதனை விரும்பார். உயிர்கள் உடம்புகளைப் பெறுதற்கு இயலாது. எனவே உயிர்களை மயல்படுத்தும் இன்பத்தை இணைவிழைச்சு கொண்டுள்ளது. அங்ஙனம் ஆணும் பெண்ணுமாக வாழ்தற்குப் பொருள் வேண்டும். எந்நிலையினும் மக்கள் பிற உயிர்கட்குத் துன்பு விளைக்காமல் வாழ்தல் வேண்டும். எனவே பொருளும் இன்பமும் அறநெறியில் எய்தப் பெறுதல் வேண்டும். அறத்தையும், அது பொருளீட்டலிலும் இன்பம் துய்த்தலிலும் மாந்தரை நெறிப்படுத்துவது கல்வி எனவே கல்வியின் பயன் கட்டறுத்து வீடு பெறுதல் என்பது முடிந்தது.

கல்வியில் உணர்த்தப்படும் உறுதிப் பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு ஆகும். இவற்றை வடநூலார் தர்மார்த்த காமமோட்சம் என்பர். இது கொண்டு திருவள்ளுவர் வடநூல் மதப் பற்றித் திருக்குறளை ஆக்கினார் என்பாரும் உளர். வடநூலார் அறம், பொருள்,

இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நெறியில் நூல் செய்யாது பிரமசரியம், கிருகத்தம், வானப் பிரத்தம், சன்னியாசம் என்னும் வாழ்க்கை நெறி பற்றியே நூல் செய்வர். எனவே வடநூல் மதம் வேறு; திருக்குறள் மதம் என்று உணர்க.

2. திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் மூன்று பிரிவுகளை உடையது. இம்மை, மறுமை இரண்டுக்கும் துணையாவது அறம். இம்மை செய்தது மறுமைக்கு ஆம் என்று அறத்தை விலை கூறாது செய்யும் நல்வினை வீடுபேற்றுக்கு வித்து ஆகும். அறம் பொருளிலும் இன்பத்திலும் விரவி நிற்பது. இதனைச் ''சிறப்புடை மரபில் பொருளும் இன்பமும், அறத்து வழிப் படூஉம் தோற்றம் போல'' என்று புறநானூறு புகலும். இத்தலைமை பற்றி அறத்துப்பால் முதலில் வைக்கப்பட்டது. திருக்குறளில் வீடு துறவற இயலில் கூறப்படுகின்றது. இல்வாழ்க்கையும் துறவு வாழ்க்கையும் அறத்தைப் பற்றியே இயல்வன அறத்தைப் பற்றி இயலாத இல்லறமும் துறவறமும் மீளா அளற்றில் உய்க்கும் என்பது அறிக. இல்வாழ்க்கை இவ்வுலக வாழ்வுக்கும் துறவு வாழ்க்கை வீட்டுலக வாழ்வுக்கும் உரிமையாதல் பற்றியும் அறத்தின் நெறிப்படுதல் பற்றியும் அவை இரண்டும் அறத்துப் பாலில் வைக்கப்பட்டன. ஊழ் இறைவனது ஆணை பற்றிப் பொருளிலும் இன்பத்திலும் பொருந்துதலால் அஃது அறத்துப் பாலின் ஈற்றில் வைக்கப்பட்டது.

வீடுபேற்று நிலை இந்நீர்த்து என்று சொல்லில் அடங்காது; எனவே அதனை நீக்கி அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றுமே தமிழிற் கூறப்படும் என்பர். அஃது ஒவ்வாது ஒவ்வு மெனில் காமமும் நுகர்வார்க்கே புலனாவதன்றி இத்தன்மைத்து என்று பிறர்க்கு உணர்த்தலாவதன்று. ஆகாணமயை ''மகட்டுத் தாய்தன் மணாளனோடாடிய, சுகத்தைச் சொல் என்றால் சொல்லுமா றெங்ஙனே'' என்று

திருமூல நாயனாரும் உணர்த்தல் காண்க. எனவே காமமும் தமிழிற் கூறப்படாது எனல் வேண்டும். காமம் தமிழிற் கூறப்படலால் வீடும் கூறப்படும் என்க. எனவே வீடு துற வற இயலில் சொல்லப்பட்டது. ஆகவே அறத்துப் பால் இல்லறம், துறவறம் என வகுக்கப்பட்டதூஉம் ஆம். இது காறும் கூறியவற்றால் இம்மையறம் இல்லறத்தும் வீடு பேற்று அறம் துறவறத்தும் கூறப்பட்டன என்பது தெளியப்படும்.

வீடுபேற்று நிலை சிந்தையும் மொழியும் சொல்லா நீர்த்து எனவேதான் தென்முகப் பரமனும் அதனைக் கை காட்டால் உணர்த்தினான். இதனால் நூல்களால் வீடு துறவறமாகிய காரணவகையில் கூறப்படும் என்று அறிக. இத்திறம் தெளியாது அதனை உணர்த்துவேம் எனப்புக்க சிற்றுணர்வினராய மாந்தர் வடமொழிக்கண் பல்விகற்பங்களையுடைய கொள்கைகளைக் கூறி அவ்வவ்விகற்பங்களைப் பேணி ஒழுகும் பலமதங்களையும் படைத்துவிட்டனர்.

3 திருக்குறள் 133 அதிகாரங்களையும் 1330 குறட்பாக்களையும் உடையது. திருவள்ளுவமாலை 'ஆயிரத்து முந்நூற்று முப்பதருங்குறளும் பாயிரத்தினோடு பகர்ந்ததற்பின்' என்று உணர்த்தல் காண்க. ஒவ்வோரதிகாரமும் பத்துக் குறட்பாக்களைக் கொண்டது. இது சிவப்பிரகாச முனிவர் உள்ளத்தில் ஓர் அழகிய கற்பனையைத் தோற்றுவித்தது.

பிறப்பும் இறப்பும் துன்பம் தருவ. பிறப்பிறப்பு ஒழிந்தால் ஒழிவில்லாத வீடுபேற்று இன்பம் எய்தும். அதற்கு பிறவா இறவா முழுமுதல்வனை அடைதல் வேண்டும். மக்கள் இவ்வுண்மையை மனங்கொண்டாரில்லை. செத்துப் பிறக்கின்ற தெய்வங்களைப் பேணிப் பேதுறுகின்றனர். இது கண்ட திருமால் மாந்தர்க்கு உண்மையை எப்படி உணர்த்தலாம் என்று சிந்தித்தார். திருக்குறள் அவர் கண்ணில்

பட்டது. அதில் திருவள்ளுவர் ஒவ்வொரு பொருளையும் பத்துமுறை கூறியிருத்தலைக் கண்டார். ஓர் உண்மையை மக்களுக்கு உணர்த்த வேண்டுமானால் பத்துமுறை சொன்னால்தான் பயன் உண்டாகும் என்று அறிந்து கொண்டார். எனவே சிவபிரானுக்குத்தான் பிறப்பும் இறப்பும் இல்லை. பிறவா நெறி வேண்டுவோர் அவனைப் பற்றுங்கள். எனக்குப் பிறப்பும் இறப்பும் உண்டு என்னைப் பற்றினால் பயனில்லை என்று காட்டுவார் போலப் பத்துமுறை பிறந்தும் இறந்தும் காட்டினாராம். முனிவர் இக்கருத்தைக் கூறுதலைக் காண்மின் :

''வற்புறுத்த ஓர்பொருளை வள்ளுவனார் பத்துமுறை
சொற்பொருத்தி ஓதும் துணிவேபோல் — தற்பதத்தால்
ஓதும் பிரமமொரு தான்என்ப தொன்றனைமால்
காதுபவம் பத்தெடுத்துக் காட்டினோன்''

(தற்பதத்தால் ஓதும் பிரமம் ஒருதான் என்பது : வேதங்கள் ''*தத்*'' (அது) என்ற சொல்லால் கூறும் பிரமப் பொருள் சிவனே என்பது)

அறத்துப்பால் பாயிரம், இல்லறம், துறவறம், ஊழ் என்னும் நான்கு பிரிவுகளும் முப்பத்தெட்டு அதிகாரங்களும் முந்நூற்றெண்பது குறட்பாக்களும் கொண்டது. இவற்றுள் பாயிரம் கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்னும் நான்கு அதிகாரங்களும், நாற்பது குறட்பாக்களும் உடையது. இத்தன்மை ''வீடொன்று பாயிரம் நான்கு'' எனவரும் திருவள்ளுவ மாலையாலும் உணரலாகும்.

இஃதிங்ஙனமாகவும், நாட்டுத் தொண்டர் ஒருவர் பாயிரம் திருவள்ளுவர் செய்தது அன்று என்று கூறி அதனை இடைக்காலப் பாயிரம் என்றே பதிப்பித்துள்ளார். தம் செய்கைக்குத்தக்க காரணம் கூறித் தம் கருத்தை நிறுவி-

னாரில்லை. இவர் செயல் திருவள்ளுவமாலைப் பாடல் ஆசிரியன்மாரையும், பாயிரம் நான்கு அதிகாரத்தையும் ஒன்று கொண்டு உரைவிரித்த ஆசிரியன்மாரையும் இகழ்வதே-யாகும். பாயிரத்துள் வரும் குறட் கருத்துக்களைச் சங்கப்புலவன்மாரும், தெய்வப்புலமைச் சேக்கிழாரும் பிறரும் ஆண்டுள்-ளனர். பாயிரத்துள் வரும் அழகிய குறட்பாக்களை ஆக்கும் ஆற்றல் ஒருவருக்குளதாயின் அவர் திருவள்ளுவரே யாவ-ரன்றிச் சிறிதும் தாழ்ந்தவராகார். இவற்றையெல்லாம் நோக்-காது சிந்தை சென்றவாறெல்லாம் முடிபு கூறுவது செந்நெறி-யாகாது என்க.

4. எல்லாப் பொருளுக்கும் முதல்வன் இறைவன். உலகெலாம் ஆகி, வேறு ஆகி, உடனாகி ஒளிவண்ணனாய் விளங்குபவன் அவன். அலகிலா உயிர்கள் கன்மத்து ஆணையின் அமர்ந்து செல்ல இயக்குபவன் அவன். இருளால் பிணிப்புண்ட உயிர்கள் இருள்நீங்கி இன்பம் பெற உயிர்களின் இருவினைக்குத்தக்க உடம்புகளும், அவ்வுடம்புகள் உரிய நாள்காறும் நின்று நிலவுவதற்கு வேண்டும் உணவும், நீரும், பிறபொருள்களும் படைத்தருளியவன் அவன். உயிர்கள் தம்மையும் தலைவனையும் அறிந்து வீடுபேறு எய்தற்கு உரிய நெறியுரைக்கும் முதல்நூல் அருளியவனும் அவனே.

நாம் வேண்டிக் கொள்ளாமலே ஒரு கைம்மாறும் வேண்-டாது இத்தனை நன்மைகளையும் செய்து வரும் இறைவன் உண்மையை மாந்தர் தெளிந்து அவன் நற்றாள் தொழுது அவன் நமக்கு உடம்பு கொடுத்தருளிய குறிக்கோளை எய்தும் நெறியில் ஒழுகுதல் வேண்டும். இதனை உணர்த்தவே, திருவள்ளுவர் 'கடவுள் வாழ்த்து' என்னும் அதிகாரத்தை முதற்கண் வைத்தார். இதனால் ஒருவரின் தலையாய கடமை முழுமுதல்வனை வழுத்தலே என்பதும் உணர்த்தி-யருளினார். ஏனை நூல்களில் வரும் கடவுள் வாழ்த்து அந்நூல்களின் நலம் கருதி நடப்பன. திருக்குறளில் வரும்

கடவுள் வாழ்த்து மாந்தர் கடவுளை வழுத்த வேண்டும் கட்டாயத்தை உணர்த்துவது. இறைவனைத் தொழுதலைக் கூறுமிடத்து நற்றாள், மாணடி என்று இறைவனின் திரு-வடியை விதந்தோதி அவனை வணங்கும் உயிர்களைத் 'தலை'' என்னும் சொல்லால் உணர்த்தியமையான் மக்கள் இறைவனால் ஆளப்படும் அடிமைத் திறம் உடையவர் என்று உய்த்துணர வைத்தார். ''என்று நீ அன்று நான் உன் னடிமை அல்லவோ'' என்னும் தாயுமானவ அடிகளாரின் மொழியையும் கருதுக.

5. உலகில் உயிர்கள் தழைக்க, அறம், பொருள், இன்பங்கள் தலைதடுமாறாமல் நடைதர மழை வேண்டும். மழையின்றேன் உழவினார் கைம்மடங்கும். உழவினார் கைம் மடங்கின் விழைவதும் விட்டேம் என்பார்க்கும் நிலையில்லை. நெடுங்கடலும் தன் நீர்மை குன்றும். ''மண்ணின் மிசை வான்பொய்த்து நதிகள் தப்பி, மன்னுயிர்கள் கண்சாம்பி உணவு மாறி, விண்ணவர்க்கும் சிறப்பில் வரும் பூசையாற்றா மிக்கபெரும் பசி உலகில் விரவும். அங்ஙனம் விரவாமை வேண்டி இறைவனது அருட்சத்தியின் தொழிற்பாடாய் உள்ளது மழை எனவே பாயிரத்துள் வான் சிறப்பு இரண்-டாவதாக வைக்கப்பட்டது.

6. அறத்தின் மாண்பையும், பொருள் இன்பங்களின் நீர்மையையும் மக்கட்கு உணர்த்தவல்லார் நீத்தோராவர். எல்லா உயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவாராதல் பற்றியும் மக்கள் அறிவு சிறிது சிறிதாகப் பெருகி நீத்தோர் நிலையுறுதலே குறிக்கோளாதல் பற்றியும் நீத்தார் பெருமை-யை மூன்றாவதாக வைத்தார். அறனெனப் பட்டதே இல் வாழ்க்கை ஆயினும் அதனைப் பாயிரத்துள் வையாது நீத்-தாரை வைத்தது மக்கள் யாவரும் இல்லந் துறந்து நீத்தார் நிலைஎய்தியே பிறவியை அறுத்தல் கூடும் என்னும் உண்-மையை உணர்த்துவான் வேண்டியே என்க மன்னே, மகார்,

பொருள் என்பவை தன்னைப் பற்றித் தொடரா என்பது அங்கையின் நெல்லியெனத் தெரிந்திருந்தும் துறவில் உண்டாம் முட்டுப்பாட்டுக்கு அஞ்சித் துறத்தலை விரும்பாது இகழ்வாரும் உளர். இவர் அகத்துறவே பெரிதென்று பேசுவர். அத்துறவு புறத்துறவின்றிக் கைகூடல் அரிதென உணர்ந்தும் தம் நெஞ்சறியப் பொய்புகலும் பெரியோராகவே உள்ளார். இன்னோரில் துறவுக் கோலம் புனைந்தோரும் உளர். மனையகத்திருந்து கொண்டு அடிகளார் எனவும் சாமிகள் எனவும் பட்டங்கள் இணைத்துக் கொண்டு வாழ் தரும் பான்மை கையில் கொலைவாளைத் தாங்கிக் கொண்டே கொல்லா நோன்பினர் என்று ஒருவர் கூறிக் கோடலை மானும். கொல்லா நோன்பினர் கையில் கொலைவாள் எற்றுக்கு? இன்னோரில் சிலர் திருவருட்பாவைப் புகழ்ந்தும் பேசுவர். அதன் ஆசிரியர் பிறரால் வற்புறுத்தப்பட்டும் மனை வாழ்க்கையை மேற்கொள்ளாது துறவு மேற்கொண்டதன், உண்மையை இன்னோர் உணர்கிலர். அவரினும் தாம் மேம்பட்டவர் என்று இன்னோர் கருதுகின்றனரோ? யாமறி கிலம். பிறவிக்கு மாண்பு தருவதும் ஒழுகுதற்கு அரியதா- யினும் பெருமையுடையதும் துறவே என்பதை உணர்த்தவே நீத்தார் பெருமையைப் பாயிரத்துள் விதந்தோதினார். திருவள்ளுவர் கருத்து இதுவே என்பது ''துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார் கொல் மற்றையவர்கள் தவம்'' என்று அவர் நகையாடலாலும் பெறுதும். ''தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்'' என வருதலையும் கருதுக.

7. திருக்குறள் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பால்களாக அமைந்திருப்பினும் ஏனைய இரண்டு பால்களிலும் விரவி நடக்கும் தலைமையுடையது அறமே. எனவே திருக்குறள் உணர்த்துவது அறமே. இது கருதியே திருக்குறள் ''அறம்'' என்னும் பெயராலும் வழங்கப்படு-

கிறது. ஆதலின் அறன் வலியுறுத்தலைப் பாயிர இறுதியில் வைத்தார்

உரையாசிரியன்மார் தாம் வாழ்ந்த காலச் சூழ்நிலையில் பிணிபட்டுத் திருக்குறள் மனுதருமம் முதலிய வடநூல்களைப் பின்பற்றி நடப்பது என்று பிழைபடக் கருதினர். வடவரில் ஒருத்தி பலரை மருவிவாழ்வாள். உத்தாலகரின் மகன் சுவேதகேது என்பான் தன் தாயின் கையைப் பற்றிக் கொண்டு கிழப்பார்ப்பனன் ஒருவன் தன்னிடம் தன் தாய் மூலம் அவ-னுக்கு ஒருமகன் உண்டானதும் அவளை அனுப்பிவிடு-கிறேன் எனறு கூறியதைக் கேட்டுச் சினமும் நாணமும் கொண்டு தன்கணவனை விட்டு அயலானைப் புணரும் பெண்ணுக்குக் கருவையழித்த தீவினை சூழும் என்று விதித்-தனன் என்று கதை பாரதம் சப்பவபருவம் 128 ஆம் அத்தி-யாயத்துவருதல் காண்க. இதன் பின்னரும் வியாசர் தம் தம்பிமனைவிகளைக் கூடிமக்களைப் பெற்றதும் பாண்டுவின் மனைவிகள் பிறருக்கு குழந்தைகளைப் பெற்றதும் நிகழ்ந்-துள்ளன. இதனை எல்லாம ஓராது கூறும் உரையாசிரியன் மார் கூற்று ஏற்புடைத்தாகாது. மனோன்மணியம் சுந்தரம் பிள்ளையவர்களும் ''வள்ளுவர் செய் திருக்குறளை மறுவற நன் குணர்ந்தோர்கள் உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி'' என்று கூறும் உண்மை உளத்தில் பதிக்கற் பாலது.

ஆதலின் திருக்குறள் உணர்த்தும் நீதிவேறு. அது பொதுமையறம், மனுமுதலினோர் நூல்கள் கூறும் நீதிவேறு, இரண்டும் ஒன்றுபடா என்க.

> ''ஒன்றே பொருள்எனின் வேறென்ப வேறென்னின்
> அன்றென்ப ஆறு சமயத்தார் — நன்றென்ன
> எப்பா வலரும் இயைபவே வள்ளுவனார்
> முப்பால் மொழிந்த மொழி''

எனவரும் திருவள்ளுவ மாலை(கல்லாடனார்)ப் பாடலைக் காண்க. கடவுள் இல்லை என்னும் உலகாயதர் காட்சியே மெய், பெண்ணின்பமே பேரின்பம் என்பர் நம்தெய்வப் புலவர் ''தாழ்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல் தாமரைக் கண்ணான் உலகு'' என்று கூறுதல் உலகாயதர் கூற்றை ஒத்ததாயினும், நூலின் தொடக்கத்தே கடவுள் வாழ்த்தை வைத்ததும் வானோர்க்கு உயர்ந்த உலகம், அளறு, இந்திரன், மால் முதலினோரைக் கூறுதலும் உலகாயதரை முரணுதலேயாகும்.

8. கடவுள் இல்லை என்று இந்நாள் கூறுவோர் புராணக் கதைகளைச் சுட்டிக் கடவுளரைப் பழிக்கும் செயல் ஒன்றே கொண்டும். தம்நடையும் ஒரு மதமே எனக்கொண்டு அதற்குரிய ஒழுகலாற்றைக் கூறும் நூலைப் பெருமையால் வீண்படுவாராயுள்ளர். இன்னோர் அரசியல், இனவியல், கல்வித்துறை முதலிய எல்லாவற்றினும் நுழைந்து மக்களைக் குழப்புகின்றனர். இன்னோர் தமக்கென இலக்கிய நூல் இல்லாக் குறையைப் போக்கத் திருக்குறளைப் புகழ்ந்து அது தமக்கு அரண் செய்யும் நூல் என்பதொரு மயக்கவுணர்வை மக்களிடை உண்டாக்க முயல்வர். சங்கநூல்கள் தம்மையே நம்பி இருப்பன போலப் பரிந்து வருவர். இன்னோர்க்கும் உண்மை நெறியே ஓதும் திருக்குறளுக்கும் எவ்விதத் தொடர்பும் இன்று என்பதே உண்மையாகும்.

புத்தர் பிறந்தவுடன் மலர்மிசை நடந்தார் என்னும் கதையைப் பற்றிக் கொண்டு பௌத்தர் திருக்குறளைத் தம் நூல் என்பர். அதற்கு 'மலர் மிசை ஏகினான்' என்று திருக்குறள் கூறுவதைச் சான்று காட்டுவர். 'அறவாழி அந்தணன்' என்று திருக்குறள் கூறுவது தருமசக்கரப் பிரவர்த்தனாசாரியன் என்னும் புத்தர் பெயரே என்பர். ஆனால் அறவாழி அந்தணன் என்பது அறக்கடல் ஆகிய அந்தணன் என்றே

பொருள் தரும். அது தருமசக்கரத்தைப் பலவகையாக உலகில் உருளச்செய்த நீத்தோன் என்னும் பொருளைப் பயவாது. தரும் எனில் இரண்டாம் அடியில் வரும் 'பிறவாழி நீந்தலரிது' என்பதற்குப் பிற சக்கரங்களாகிய பொருள் இன்பங்களை நீந்துதலரிது என்று பொருள் கொள்ள வேண்டிவரும். சக்கரங்களை நீந்துதல் என்பது இயையாத கூற்று ஆகும். பிறவிச்சக்கரம் என்று பொருள் கோடற்கும் நீந்துதல் என்ற சொல் இயையாததே. மேலும் இன்னோர் பூதங்கள் நான்கு என்பர். திருக்குறள் 'பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்' என்று இவரை முரணும். இன்னோர் உயிர் என்றொரு தனிப் பொருள் இன்று என்பர். திருக்குறள் 'மன்னுயிர்' எனவும் ''மன்னும் உயிர்'' எனவும் கூறி இவரை நகும். கொலை தீவினை தரும். பிறர் கொன்றதைத் தின்னல் பாவமன்று என்பர் இவர். குறளோ ''தின்றபொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும், விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்'' என்று இவரை மறுக்கும்.

சமணர் இருவினையும் தாமாகவே உடையானிடம் சேர்ந்து பயனூட்டும். அதனை உய்க்க ஒருவன் வேண்டுவதில்லை என்பர். திருக்குறள் வகுத்தான் வகுத்த வகையல்லால்கோடி, தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது'' என்று அவரை முரணும்.

9. திருக்குறள் அடியளந்தான் என்று திருமாலைக் குறிப்பிட்டாலும், தாமரைக் கண்ணான் உலகு என்று அது கூறுவதன் பொருள் திருமால் உலகு என்றே நாம் கொண்டாலும் அவை திருமால் மேல் எழுந்த பேரன்பின் விளைவால் கூறியதன்று. திருமாலைப் போலவே செய்யவள், இந்திரன், தவ்வை, வானோர், காமன், கூற்று முதலினோரும் கூறப்பட்டு உள்ளனர் என்க. இங்ஙனம் பலதெய்வங்களைத் திருவள்ளுவர் பல இடங்களிலும் குறிப்பிட்டிருந்-

தாலும் பழந்தமிழர் கடவுளாய் வயங்கும் சிவபெருமானையும் முருகனையும் குறியாது சென்றமை கருதற்பாலது. முழு-முதற்பொருளைப் பிறதேவரைப் போல வழங்குதல் குற்றப்-படும் என்பது திருவள்ளுவர் திருவுள்ளமாதல் இதனால் தெளியப்படும். திரு. ஜெ. எம். நல்லசாமி பிள்ளையவர்கள் திருக்குறள் 'மெய்யுணர்தல்' அதிகாரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தகாலை அம்மொழி பெயர்ப்பின்கண் டாக்டர் ஜி. யு. போப் அவர்கள் கூறுவதாக

"And the Rev. Dr. Pope in his short paper on Ethics of Kural holds that Tiruvalluvar bases his ethics on the graud truth of Tripadartha, pathi, pasu, and pasa; In fact his creed is not a Godless creed like that of Jains or Buddhists. In this respect, there is disparity between the Naladi and this work" (Studies in saiva Siddhanta by Thiru. J. M. Nallaswamy pillai page 147)

என்று உரைத்தலும் உணர்தற்பாலது. பொருள் ; "டாக்டர். ஜி. யு. போப் என்னும் கிறித்தவ மதகுரவர் திருக்குறள் கூறும் அறம் என்னும் சிறு விரிவுரையில் திருவள்ளுவர் தாம் கூறும் அறநெறியைப் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மை என்னும் அடிப்படையில் நிறுவுகின்றார். மேலும் அவர் சமண பௌத்தரைப் போன்று கடவுள் இல்லை என்னும் கொள்கையர் அல்லர். இவ்வகையில் திருக்குறள் நாலடியாரை வேறுபடுக்கின்றது" எனவாம். இக்கருத்தை நிலைசெய் வதே போன்று ஒளவைப் பெருமாட்டியும்

"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்"— கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என் றுணர்".

என்னும் பாடற்கண் திருக்குறள் சைவநூலே என்று அறிவுறுத்தியருளல் காண்க.

## 7. கடவுள் வாழ்த்து

1. இது பாயிரத்துள் வரும் முதல் அதிகாரம். இது கடவுள் உண்மை, கடவுள் இலக்கணம், கடவுளை வழிபட வேண்டும் காரணம், வழிபடுவார் பெறும் பெருமை. வழிபடாதார் அடையும் சிறுமை ஆகியவற்றை அறுவுறுத்தி நிற்கின்றது.

உண்மை இவ்வாறு இருப்பவும், திருக்குறள் பின்னாளைய மரபினைப் பற்றியே நடை தருகின்றது என்று பிழைபடக் கொண்டு நூல் இனிது முடியும் பொருட்டுத் திருவள்ளுவர் கடவுளை வாழ்த்துகின்றார் என்று உரையாசிரியன்மார் சொற்றனர். உரையாசிரியன்மார் காலத்தே நூல் யாத்தோர் தம் நூல் இனிது முடியும் பொருட்டும் அது நின்று நிலவுதல் பொருட்டுமே கடவுளை வாழ்த்தினர். அந்நடையையே கருத்தில் கொண்ட உரையாசிரியன்மார் பிழைபட உரை செய்தனர். உரைப்பாயிரம் கூற வந்த பரிமேலழகர் திருக்குறள் வடநூல்களைத் தழுவி நிற்பது என்னும் கருத்துப்பட மொழித்தார். பரிப்பெருமாளின் உரைப்பாயிரம் பொதுமையில் நடைதரும் பரிமேலழகர் அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் என்று விளக்குகின்றார். ஆயினும் மனு முதலிய நூல்கள் நேரிய முறையில் நடைதருவ அல்ல. அவை ஒரு குலத்துக்கு ஒரு நீதி கூறுவது என்று மனோன்மணியம் சுந்தரம் பிள்ளை கூறுவதையும் முன்பே காட்டினாம்.

மனுமிருதி எட்டாம் அத்தியாயத்து 317இல் பார்ப்பனன் ஞானியாயிருப்பினும் மூடனாயிருப்பினும் அவனே மேலான தெய்வம் எனவும் 379இல் தலையை மழித்துவிடலே பார்ப்பானுக்குக்கொலையொறுப்பாகும். ஏனையரைக்கொல்லுதலே ஒறுப்பாம் எனவும் இன்னும் இவை போன்ற பல ஓர முடிபுகளைக் கொண்டதாயுள்ளதே. இவற்றையே திருவள்ளுவரும் விதிக்கின்றார் என்பது அறியாமையாகும். இதனைப் பரி

மேலழகரும் உணர்ந்தவரே. உணர்ந்ததனால் அன்றோ "ஈன்றாள் பசி காண்பான்" என்னும் குறளினை விளக்கும் காலத்து "இறந்த மூப்பினராய இருமுது குரவரும் கற்புடை மனைவியும் குழவியும் பசியான் வருந்தும் எல்லைக்கண் தீயன பலவும் செய்தாயினும் புறந்தருக" என்னும் அற நூற்பொது விதி பொருள் நூல் வழி ஒழுகுதலும் அரசர் தொழிற்குரியராதலும் நன்கு மதிக்கற்பாடும் உடைய அமைச்சர்க்கு எய்தாமை பற்றி இவ்வாறு கூறினார் என்றோர் அமைதி காண வேண்டும் கட்டாயத்துக்கு உட்பட்டார். நன்கு நோக்குவார் இக்குறள் அமைச்சர்க்குரியதாகாமையும் மாந்தர் அனைவர்க்கும் உரியதாம் உண்மையும் உணர்வர்.

2. பரிமேலழகர் சிறந்த உரையாசிரியரேனும் அரியகற்று ஆசற்றார் கண்ணும் வெளிறு உண்டு என்பதானும் அவர் கால மாந்தர் நடையானும் சூழ்நிலையானும் ஒரோவிடத்துப் பிழைபடப் பொருள் கண்டார். மேலும் ஓர் எடுத்துக்காட்டுத் தருவாம்.

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை"

என வரும் குறளுக்குப் பரிமேலழகர் சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடை அறத்தின் பயனைக் காட்சியளவானே உணர்க எனும் கருத்தையே மொழிந்தார். ஏனைய தொல்லுரையாசிரியன்மாரும் இங்ஙனமே உரைத்தனர். ஆயினும் இவ்வுரை அறிஞன்மார் ஏற்கக் கூடியதாய் இல்லை. இராவ் சாகிப் கோ. வன்மீகநாத பிள்ளையவர்கள்.

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடையை — மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பொறுத்தார் திரிகுவர்மற்
றுந்தும் சிவிகையினை யூர்ந்து

என்று சிவப்பிரகாச முனிவரும் பரிமேலழகர் உரையை மறுத்தலை எடுத்துக் காட்டுவர். சிவிகை யூர்வானாயினும் சிவிகை

காவுவானாயினும் மற்றெவராயினும் இல்லறத்துக்கு உரிய அன்புடைமை. விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந் நன்றியறிதல், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, அழுக் காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல் லாமை, தீவினையச்சம், ஒப்புரவறிதல், ஈகை ஆகிய அறத் தாற்றில் நின்றொழுக விலக்கல்லர். ஊர்வானுக்கு வேறு அறம் சிவிகைப் பொறுப்பானுக்கு வேறு அறம் என்பதில்லை. இஃதே திருக்குறளின் பொருள் என்பர் அப்பெரியார்.

எம் நண்பரும் சிவன் கழலில் செறிந்த அன்புடைய வரும் ஆகிய டாக்டர் மு. குப்புசாமி B.E., M.S. (U.S.A.,) Ph.D (LOS ALTOS) D.phil(WU)M.AM.SC.Ag.E,F.I.S.E., F.I.E. (IND), F.W.A., F.T.S. (Former Technical Adviser, United Nations and Chief Engineer to Govt of India) அவர்கள்

''அறன் வலியுறுத்துவான் புகுந்த வள்ளுவர் கேவலம் சிவிகையூர்வது மட்டுந்தானா அறத்தின் வழிப்படூஉம் தோற் றம் என்பர்? இதனின் மேலாய பயன் இன்றோ? சிவிகை பொறுத்தலும் ஊர்தலும் அவரவர் செய்த அறத்தின் பயன் என்று கொண்டு அவ்விருவரையும் புறக்கணியன்மின்! அவ்விருவருக்கும் அறிவுரை வழங்கிச் சிவிகையூர்வானை விளித்துக் கருணை மேற்படுக. தூக்குவானை வருத்தம் செய்யற்க என்று பணித்தலும் சிவிகை பொறுப்பானுக்கு உதவி செய்து உயர்நிலைக்கு உய்த்தலும் செயற்பாலதாய அறன் என்று வலியுறுத்துகின்றாரோ வள்ளுவர் என்று எண்ணத் தோன்றுகிறது''

என்று கூறுகின்றார். இவ்விளக்கம் சிறப்பொடு இலங் குகின்றது. அறத்தாறு இது என வேண்டா என்று வள்ளு வர் பெருமான் எதிர் மறையிற் கூறியுள்ளார். எனவே உடன் பாட்டு முகத்தான் அறத்தாறு இது அன்று எனல் வேண்டி டிற்று. சிவிகை காவுவான் வாழ்க்கை நடாத்தச் சிவிகை-

யூர்ந்து கூலி கொடுத்து இரும்பூதுறலினும் அஃது அறத் தாறு அன்று எனல் தெளிந்து அவனை வேறு தொழிலில் உய்த்து நலமுறச் செய்தலே அறமாகும் அன்றோ!

3. திருக்குறளில் வரும் கடவுள் வாழ்த்தைப் பரிமேலழகர் "அஃதாவது கவிதான் வழிபடுங் கடவுளையாதல் எடுத்துக் கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்து தல்" என்று கூறும் விளக்கம் ஏற்புடைத் தாகாமையை முன்னர்க் கூறினாம். அவர் மேலும் தொடர்ந்து "அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக் கடவுளை என அறிக. என்னை? சத்துவம் முதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப் பொருட்கு அவற்றான் மூவராய முதற்கடவுளோடு இயை-புண்டாகலான் அம் மூன்று பொருளையும் கூறலுற்றார்க்கு அம் மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலின், இவ்-வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறினார் என உணர்க" என்றார். இஃது ஒவ்வாது. தேவர் அருளிய பத்துக் குறள்களிலும் எத்தெய்வத்தையும் பரவினார் அல்லர். ஏனைய அதிகாரங்களில் தாம் எடுத்துக் கொண்ட பொரு-ளை மக்கட்கு அறிவுறுத்தியவாறே இவ்வதிகாரத்தும் கட வுளை வாழ்த்தும் நெறி, பயன் முதலியவற்றை அறிவுறுத்தி யருள்கின்றார் என்க.

4. கடவுள் என்பது தூய தமிழ்ச்சொல். இதனை வடசொல் ஆக்கவிழைவோர் கடம் + உள் என்று ஒவ்வாத சொற்பிரிவு செய்து பரம் என்னும் வடசொல்லோடு குன்றம் என்னும் தமிழ்ச்சொல் கூடிப் பரங்குன்றம் என்றாயவாறு கடம் என்-னும் வடசொல்லோடு உள் என்னும் தமிழ்ச்சொல் கூடிக் கடவுள் என்றாயது என்று கூறிக் கடத்தின் உள்ளே இருக்-கும் உள்ளம் எனப்பொருள் கூறுவர். வேறுசிலர் யாவற்றை யும் கடந்து நிற்பது ஆகலின் கடவுள் என்று கூறுவர். வேறு சிலர் இது எனச்சுட்டி அறியலுறுவார் அறிவு முதலிய

வற்றைக் கடந்து நிற்பது ஆகலின் கடவுள் என்பார். இன்னோர் கொண்ட பொருட்கேற்பச் சொற்புணர்ச்சி இலக்கணம் இவரே தான் காட்டல் வேண்டும். மேலும் இவை சிறப்புடைப் பொருளும் அல்ல. கடவு + உள் = கடவுள் கடவு வினைத்தொகை. எல்லா உள்ளக் குகைதோறும் இருந்து விழைவு, செயல், அறிவு என்பவற்றை இயக்கிச் செலுத்தும் உள்ளமாய் உள்ளதால் முழு முதற்பொருள் கடவுள் எனப்பட்டது என்க. கடவுள் என்னும் சொல் குகப்பிரமம், அந்தரியாமி, கரும சுதந்திரகருத்தா என்னும் வடசொற்களுக்கு நேராயும் அரு, உரு என்பவற்றிற்குப் பொதுவாயும் உள்ளது. பாம்பன் குமரகுருதாசப் பெருமானார்

"செலுத்துதல் என்னும் சொல்லே கடவுதல் எனச்செந் நூல்கள்
பலத்துடன் உரைக்கு மாற்றால் பசுக்களின் உளத்தே நின்று
செலுத்துள மாம்கு கற்குக் கடவுளென் திருப்பேர் ஒன்றெத்
தலத்தகும் இறும்பூ தெய்தத் தமிழினில் எய்த்த தாமே"

என்று அருளிச் செய்தலை ஓர்க. செலுத்துதல் என்னும் சொல்லே கடவுதல் என்று தமிழ் நூல்கள் கூறும் உறுதியால் பசுக்கள் ஆகிய உயிர்களின் உள்ளங்களில் தங்கி அவற்றைத் தொழிற்படுமாறு இயக்கும் குகப்பிரமனுக்குக் கடவுள் என்னும் ஒரு திருப்பெயர் எல்லா உலகத்தவரும் இறும்பூது எய்துமாறு தமிழ்மொழியில் அமைந்தது என்பது மேற்பாடலின் பொருளாகும்.

கடவுள் என்னும் சொல் இங்ஙனம் பொருள்தரலான் முழுமுதல்வனின் இவ்விலக்கணமும் மாந்தர்க்கு உணர்த்துவான் கருதி முதல் அதிகாரத்துக்குத் திருவள்ளுவர் கடவுள் வாழ்த்து எனப் பெயரிட்டனர். இதனை ஓராமே கடவுள் என்னும் சொல் பத்துக் குறட்பாக்களில் ஒன்றிலேனும் பயிலாமையான் திருவள்ளுவர் கடவுள் வாழ்த்து என்று பெய-

ரிட்டார் அல்லர்; அஃது ஆதிபகவன் அல்லது உலகமுதல் என்று இருத்தல் வேண்டும் என்றார் ஓர் அறிஞர். மற்றொருவர் கடவுளை வழிபடல் என்று இருத்தல் வேண்டும் என்றார். நாத்திக உரையாளரில் ஒருவர் 'இறைநலம்' என்று மாற்றினார். மற்றொருவர் இறைவாழ்த்து ஆக்கினார். இவரெல்லாம் தம்மைத் திருவள்ளுவருக்கு இணையானவராகவோ மேற்பட்டவராகவோ தம்மைக் கருதினர் போலும்! இன்னோர் படைச்செருக்கு உறுப்பு நலனழிதல், புணர்ச்சி விதும்பல், ஆள்வினையுடைமை முதலிய அதிகாரங்களுக்கும் வேறு பெயர்கள் கற்பிப்பராக. இறைமாட்சி என்ற அதிகாரத்தும் குறட்பாவில் இறை என்ற சொல் அரசனைச் சுட்டிவாராமை காண்க.

இதுகாறும் திருக்குறளின் முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்து என்பதும் அது கடவுளை வாழ்த்தும் இன்றியமையாமையை உலகிற்கு உணர்த்த எழுந்தது என்பதும் விளக்கப்பட்டன.

## 8. ஆதிபகவன்

1. திருக்குறளின் முதல் அதிகாரம் ஆகிய கடவுள் வாழ்த்தின் முதற் குறட்பா தமிழின் முதல் எழுத்து ஆகிய அகரத்தைக் கொண்டு தொடங்குகின்றது. அவ்வெழுத்தைக் கொண்டே கடவுளின் முழுமுதன்மையை விளக்குகின்றது. அக்குறட்பா வருமாறு :-

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

தமக்கு முன்பு திருக்குறளுக்கு எழுந்த பல உரைகளையும் கற்று ஆய்ந்தவரும் திருவள்ளுவர் திருவுள்ளத்தை உய்த்துணர்வதில் முன்னிற்பவருமான பரிமேலழகர் இக்குறளுக்கு வகுத்துள்ள உரையைக் காண்பாமாக. அது வருமாறு :-

''எழுத்துக்கள் எல்லாம் அகரமாகிய முதலையுடையன. (அதுபோல) உலகம் ஆதிபகவன் ஆகிய முதலையுடைத்து என்றவாறு.

''இது தலைமை பற்றி வந்த எடுத்துக்காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தான் அன்றி நாதமாத்திரை யாகிய இயல்பால் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கையுணர்வான் அன்றி இயற்கையுணர்வான் முற்றும் உணர்தலானும் கொள்க. தமிழ் எழுத்திற்கே அன்றி வட எழுத்திற்கும் முதல் ஆதல் நோக்கி ''எழுத்தெல்லாம்'' என்றார். ஆதிபகவன் என்னும் இருபெயரொட்டுப் பண்புத் தொகை வடநூல் முடிபு. உலகு என்றது ஈண்டு உயிர்கள் மேல் நின்றது. காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின் 'ஆதிபகவன் முதற்றே உலகு'' என உலகின் மேல் வைத்துக் கூறினார். கூறி-னாரேனும் உலகிற்கு முதல் ஆதிபகவன் என்பது கருத்தாகக் கொள்க. ஏகாரம் தேற்றத்தின் கண் வந்தது இப்பாட்டான் முதற்கடவுளது உண்மை கூறப்பட்டது''.

பரிமேலழகர் விரித்த இவ்வுரையே கடவுள் வாழ்த்து தேவர் மூவர்க்கும் பொதுப்படக் கூறியதன்று என்பதும் முழு முதல்வனை விளக்குவதே என்பதும் விளக்கி நிற்கும். ஏனைய குறளில் வரும் இலக்கணமும் இவ்வாறே மூவருக்கும் பொருந்துவன ஆகா. பரிமேலழகர் உரைக்கண் வந்துள்ள ''ஆதிபகவன் முதற்றே உலகு'' என்பது ''ஆதிபகவன் முதற்றே'' என்று சில ஏடுகளில் குறைந்து காணப்படுகிறது. எனினும் யாம் காட்டியதே சிறப்புடைப் பாடம் என்பது தெளிக.

2. பரிமேலழகர் இக்குறளைத் தலைமை பற்றி வந்த எடுத்துக்காட்டுவமை என்றார். எடுத்துக்காட்டுவமையாவது (அதுபோல என்னும்) உவமவுருபு பெறாது வருவது. பரி-

மேலழகர் உரைக்கண் 'அதுபோல' என்னும் சொல் நக– வளைவுக்குள் இருத்தல் காண்க. எனினும் சேனாவரையர் "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி-பகவன் முதற்றே உலகு", "அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல் தேறியார்க் குண்ட தவறு" என்ற வழி, முறையானே, அதுபோல எனவும், நீத்தார்க்கே தவறு எனவும் வருவன எஞ்சிய பொருள் உணர்த்தலான் இசையெச்சம் ஆயின". (தொல். சொல். 440) என்றார். அதுபோல என்பது இசையெச்சம் ஆகாது என்க. இனி, பேராசிரியர் "அகர முதல எழுத்தெல்-லாம்" என்ற வழி இரண்டு பொருள் வேறுவேறு கூறியதன்றி அகர முதல எழுத்தெல்லாம் அதுபோல என்றானும் ஆதி-பகவன் முதற்று உலகம் அதுபோல என்றானும் ஒன்றாகத் துணியுமாற்றான் உவமையும் பொருளும் கூறாமையின் வேறுபட வந்த உவமம் ஆயிற்று. (தொல் பொருள் 307) என்றார். பேராசிரியர் கூற்றையே ஒப்பி நச்சினார்க்கினி-யரும் "சேனாவரையர் இசையெச்சம் என்ற 'அகர முதல' என்பதன்கண் அதுபோல என விரிந்த உவமச் சொல் துணியுமாறு விரியாது, இரண்டற்கும் பொதுவாய் வேறுபட வந்த உவமத்தின் பாற்படுதல் அல்லது இசையால் பிறவாமை யானும் பொருந்தாமையுணர்க. "(தொல். சொல். 440) எனக் காண்க. அணி நூலார் வேறுபட வந்த உவமையை விரித்து விரியுவமை, உண்மையுவமை, மறுபொருள் உவமை, மோகவுவமை, வேற்றுப் பொருள் வைப்பணி, விலக்கு உவமை, தடையுவமை, உம்மையுவமை, இசையுவமை, கருத்து உவமை" என விரிப்பர்.

3. "தமிழ் எழுத்துக்கே அன்றி வடஎழுத்திற்கும் முத–லாதல் நோக்கி 'எழுத்தெல்லாம்' என்றார்" என்பது பரி-மேலழகர் விளக்கம். அகரம் ஒலியளவில் பிறக்கும். எனவே அதன் பிறப்பு இயற்கையாகும். மற்ற எழுத்துக்கள் பல், நா, இதழ், மூக்கு, அண்ணம் முதலியவற்றின் உதவியால்

விகாரப்பட்டுப் பிறக்கும். இந்த நுட்பத்தை நன்கு ஓர்ந்த தமிழறிஞன்மார் அகரத்திற்கு முதன்மை தந்து அதை முதல் எழுத்தாக வைத்தனர் தம் பெயரைப் பரிதிமாற் கலைஞர் என்னும் தூய தமிழ்ப் பெயராக ஆக்கிக் கொண்ட வி.கோ. சூரிய நாராயண சாத்திரியார் தாம் இயற்றிய ''தமிழ் வரலாறு'' என்னும் நூற்கண்

''தாங்கள் செல்லும் இடங்களுக்குத் தக்கபடி புதிய புதிய லிபிகள் ஏற்படுத்திக் கொள்ளும் இயல்புடைய ஆரியர் தமிழ் நாட்டிற்கு ஏற்றபடி தமிழிலிபியை ஒட்டிக் கிரந்தம் என்னும் பெயரில் புதுவதோரிலிபி வகுத்தனர்''

என்று கூறியுள்ளார். மறைமலையடிகளும்

''வடநூலார் தமிழின் நெடுங்கணக்கைப் பார்த்து உயிரெழுத்து, மெய்யெழுத்துக்களை அடைவுபடுத்திக் கொண்ட அளவில் அமையாது தமிழினும் தமக்கு உயிரெழுத்துக்கள் மிகுதியாய் உண்டென்று காட்டுதற்குப் புகுந்து பொருந்தாப் பேரவாவால் உயிரெழுத்துக்கள் அல்லாத ரு, ரூ, லு, அம்• அ, அ:என்னும் உயிரெழுத்துக்களையும் அவற்றோடு கலந்து இழுக்கினார்''

என்று கூறுதல் காண்க.

சில கீர்வாண எழுத்துக்களும், சில கீர்வாண மொழிகளும் தமிழில் வந்து கூடும். அவ்வாறு கீர்வாணத்தில் தமிழ் எழுத்துக்களும், தமிழ் மொழிகளும் சென்று கூடுவது இன்று எனின் இதற்கு விடை கூறுதும். அகரத்தின் முன்னர் இகரமும் யகர மெய்யும் தம்முள் ஒத்துப் பொருந்தினால் ஐ என்னும் எழுத்து உண்டாம் எனவும், அகரத்தின் முன்னர் உகரமும் வகரமெய்யும் தம்முள் ஒத்துப் பொருந்தினால் ஔ என்னும் எழுத்து உண்டாம் எனவும் வடநூலார் கூட்டெழுத்தின் இலக்கணம் கூறுதலானும், மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் என்னும் உத்தியான் அகரக் கூறும் இகரக்கூறும்

தம்முள் ஒத்து எகரமும் ஒலிக்கும். அகரக் கூறும் உகரக் கூறும் தம்முள் ஒத்து ஒகரம் ஒலிக்கும் எனவும் கொள்க என நன்னூல் விருத்தியுரையில் காண்டலானும் எ, ஒ, என்னும் ஒலிகள் கீர்வாணத்தன அன்று ஆகலானும் இவ்விரண்டி-னுள் ஒ என்பது அகர உகரங்கள் ஆகிய பிரணவத்தின் கூறு ஆகின்றமையானும். இந்த விளக்கத்தால் பிரணவ-மானது தமிழ் ஆகின்றமையானும், கீர்வாண வேதமானது தமிழையே மூலமாகக் கொண்டதென யாம் நிறுவப் பின்னி-டேம். என்னை, ஓ என்னும் நெடில் கீர்வாணம் ஆதலால் அதுவே அங்கு அமையும் எனின், அற்றேல் அகர உகர மகரங்களால் ஆகிய பிரணவம் ஆகிய ஓம் என்றது பொய்யாம். ''அகாரம் ப்ரஹ்மாணம் நாபௌ வுகாரம் விஷ்ணும் ஹ்ருதயே மகாரம் ருத்ரம் ப்ருமத்யே ஓங்காரம் ஸர்வேச்-வரம் த்வாத சாந்தே'' எனப் போந்த உபநிடதத்துக்கும் முரணாம். இதனால் ஒகரம் தமிழாதல் நிறுவப்பட்டது. ஓ என நீண்டதும் இந்த ஒகாரமேயாகும். ஒ என்னும் தமிழ் எழுத்தினது நெடிலை விட்டு ஓ என்னும் வட எழுத்தையே ஆண்டு அமைக்கமுடியாது. முடியும் எனின் பிரணவத்துக்குக் குற்றம் உண்டாகாமல் நிறுவுவாராக.

என்னை, அ—இ என்பவும் அ—உ என்பவும் வட எழுத்துக்கள் ஆகையால் அவற்றின் கூட்டெழுத்துக்களாகிய எ—ஒ என்பவும் வட எழுத்துக்களேயாம். அதனால் அவை தமிழில் உள்ள எ—ஒ எழுத்துக்களன்றாம் எனின் கீர்வாணம் தமிழ் ஒலியாகத் திரிதலால் பரத்தையாம். பரத்தையா-காமையை விரும்பின் அ-இ—உ என்பவைகளைப் போல எ—ஒ என்பவைகளையும் அம்மொழியின் நெடுங்கணக்கில் காட்டி நாட்டவேண்டும். அங்ஙனம் இன்மையின் அது பரத்தைமைப் பெற்றியது என்பது உண்மை. இக்குற்றத்தை மாற்ற யாம் இங்கே ஒரு தீர்வு கூறுகின்றாம். என்னெனின் எ—ஒ என்பன தமிழின் சிறப்பெழுத்துக்கள் ஆகலானும்

எகரத்தில் அகரமும் இகரமும் ஒகரத்தில் அகரமும் உகரமும் நிலைபேறு ஆகலானும் எ ஒ என்னும் தமிழ் எழுத்துக்களைப் போலவே அவற்றினுள் இயைந்த அ, இ, உ என்பனவும் தமிழ் எழுத்துக்களேயாகும். என்று கூறுவதேயாம். இதனால் அ, இ, உ, எ, ஒ என்னும் குறில்களும் இவற்றின் நெடில்-களும் தனித்தமிழேயாகி. இதினின்றும் கீர்வாணம் பிறந்து செழித்தது என்று கூறுவதிலும் குற்றம் உண்டாகாது. சிவனுடைய பகுதியே தேவியானாற் போலத் தமிழினுடைய பகுதியே கீர்வாணம் ஆயினமை அறிக. இவ்வுண்மையால் வடமொழி தென்மொழிகளை முறையே தாய்மொழி, தந்தை மொழி என்று கூறுவதும் சிறக்கும். வடமொழியைத் தாய் மொழி என்று யாவரும் கோடலானும் அங்ஙனம் கோடல் தந்தைமொழி இல்வழி அமையாமையானும் அது மேலே விளக்கியவாற்றால் தமிழே எனச் சிறந்தமையானும், கீர்வாணத்தைத் தாய் மொழி என்று புகழ்வதும் கீர்வாணம் தமிழின் உதவியை வேண்டாது என விதப்பதும் கீர்வாணம் தமிழுக்கு உதவிநிற்கும் என வியப்பதும் அவலம் ஆயின. வடமொழி தமிழுக்கு உதவல் கணவன் மாட்டமைந்த அவனது துணைவியின் உதவியையே மானும். அவன் துணை வியோடும் இருப்பினும் அவளை நீங்கியிருப்பினும் குறை கூறப்படான் அவ்வாறே வடமொழியின் உதவி இல்வழியும் உள்வழியும் தமிழுக்குத் தாழ்வும் உயர்வும் உண்டாகா காதலன் பிரிவையடைந்த காதலிக்கு ஓர் நலனும் சிறவாமை போலத் தமிழின் பிரிவை எய்தின் வடமொழியும் அதிலுள்ள வேதமும் பயனிலவாக முடியும்,

அற்றேல் மறையாகமங்களைச் சிவபெருமான் தமிழிற்-கூறாமல் கீர்வாணத்தில் கூறியது என்னை எனின் இது மயக்கவினா என்க. மேலிடத்தில் மறைமூலமாகிய ஓங்கா-ரத்தைத் தமிழ் என்று காட்டினாம். தொடக்கமே தமிழில் தானே அங்கை நெல்லிக்கனி எனக் காண்டலால் இஃது அறியாது கடாவுவாரை மயக்கவினா உடையர் என்றாம்

மறையானது அனந்தாவை வேதா: என்னும் மொழியை நோக்கின் பலவாயுளது என்பது முடியும். பல என்பது கீர்வாணம்-தமிழ் என்னும் இருபகுதியில் அடங்கிவிரியும். வட மறைகளைப் போலத் தமிழ் மறைகளும் சிவனுடைய திருமொழிகளே. வடமறையானது பின்னர்த் திருமால் வாயிலாகவும். பிரமன் வாயிலாகவும் வியாதன் வாயிலாகவும் வெளிப்பட்டு அன்னோரை ஆக்கியோர்கள் எனக்கொண்டபடியே தமிழ் மறையானது நால்வர் சமயகுரவரை ஆக்கியோராகக்கொண்டு விளங்கியது. இதனால் தமிழ்மறை சிவனால் செய்யப்பட்டதின்று எனக் குறை கூறியது தீர்ந்து விட்டது. திருமறைக்காட்டில் மறைகள் சிவபூசனை செய்து மூடிப்போன கதவை அப்பரடிகளாரது தேவாரம் திறந்ததும் அதனை மீண்டும் பிள்ளையாரது தேவாரம் மூடியதுமாகிய உண்மையே தமிழ்மறை வடமறைக்கு வேறு அல்லாததை விளக்கியது. மறைகள் யாம் அடைத்த கதவை யாமே ஈண்டு அடைந்து திறக்கக் கடவேம் என்றபடி மீண்டும் ஆண்டு எய்தி முன்செய்த குறிப்பாடு கெடாவழித் தாமே திறந்தன என்பதே அமையும். இதனால் வேதமே மூடியது வேதமே திறந்தது என வேதத்தின் ஆற்றல் தோன்றக் கூறுவர் மேலோர். முன் மூடியது வடமறையும் பின் திறந்தது தென் மறையும் எனல் அமைவுடைத்து. வேதமானது கதவைப் பிணித்துக் குறியிட்டுப் போனதெல்லாம் தமிழாலாகிய தன் நிறைவைப் பின்னர் விளக்கற் பொருட்டே என மேலோர் கருதா நிற்பர். அன்றியும் தமிழ்மறையே மூடியது அதுவே திறந்தது எனவும் கொள்ள நிற்பர். தமிழ்மறை வழிபட்ட காரணம் பற்றியே மறைக்காடாம் பெயர் தோன்றிற்று எனவும் விதவா நிற்பர். இவ்வமைதிகளை நோக்கின் ஏன் மறைகளைச் சிவபெருமான் தமிழில் சொல்லை என்று எழும் கடாக்கள் இறை பெற்று ஒழியும். இன்னும் எம்பெருமக்கள் நால்வர் குரவர் திருமொழிகளின் பெரும்பகுதி மறைந்தன என்றாற்போலத் தமிழ்ச் சங்கத்தைக் கடல்கொண்டு போனவழி அளவிறந்த தமிழ் நூல்கள் மறைந்தன எனலும் உண்மையாகலான் தமிழில்

வேத சிவாகமங்கள் செய்யப்படவில்லை என்று வழக்கிடல் வீண் ஆயிற்று. ''செப்புத்திரிந்த திருஞான சம்பந்தர் செய்த தமிழப்பத்துள பதினாறாயிரம் தமிழ் அப்பர் தமிழ் ஒப்பற்ற நாற்பஃ தொன்பதினாயிரம் ஊரர் தமிழ், முப்பத்தேழாயிர மென்றே முனிவர் மொழிந்தனரே'' என்ற மேலோர் மொழிப் படி திருஞானசம்பந்தப் பெருமான் பதினாறாயிரம் பதிகமும் அப்பரடிகளார் நாற்பத்தொன்பதினாயிரம் பதிகமும் சுந்தர மூர்த்திப்பெருமான் முப்பத்தேழாயிரம் பதிகமும் அருளிச் செய்தார்களாக மேலோர் கணிப்பர். இப்போது உள்ள மூவர் பதிகங்களின் மொத்தம் 797 ஆம். ஆகையால் எஞ்சியவை மறைந்தமை கொண்டு அன்னோரால் அவை ஓதப்பட்டன அன்று என யாவர் கூறுவர்? அவைகள் மறைந்திடப் பெருமான் திருவுள்ளம் இசைந்தவாறே சங்கங்களில் மருவி யிருந்த தொன்னூல்களும் மறைந்திட அவர் திருவுள்ளம் இசைந்தனர். வடமறைகளிலும் முழுதும் கிட்டவில்லை. பல உபநிடதங்கள் மறைந்திருத்தலும் அப்படியே. மூல ஆகமங்கள் மறைந்து கிடத்தலும் யாவருக்கும் ஒப்பு. ஆகையால் அவற்றோடு தானே சேர்ந்து அளவிறந்த தமிழ் நூல்கள் மறைந்து போயினமையால் தமிழ் பழமை பெற்றது அன்று எனவும் அதில் சிறப்புடை நூல்கள் கூறப்படவில்லை எனவும் மயங்குவது அறியாமையேயாம்.

வடமறை வடக்கே அன்றித் தெற்கிலும் வழங்கும். தமிழ்மறை வடக்கில் வழங்காது எனின் மறை எல்லாச் சமயி-கட்கும் பொது; சிவாகமம் சைவர்க்கே சிறப்பு. இதனால் மறை யினும் சிவாகமம் தாழாது. வேதம் பலருக்கும் பொது ஆகலான் பரத்தைமையுடையது. சிவாகமம் சைவருக்கே உரித்தாகலின் பரத்தைமை யுடையதன்று. வடமறை தமிழ் எல்லையை அடைதலால் வடகலை என்னும் பேர் சிறுமைப் படும். தமிழ்மறை வடஎல்லையை அடையாமையால் தென் கலை என்னும் பேர் நிலைக்கும். வடகலையானது தென்கலை யினும் சிறப்புடைமையால் தென் திசைக்கு அருள்புரிய

வந்தது எனில் வடதிசை முழுதும் அருளிய பின்னர் அன்றோ தென்திசைக்கு வரவேண்டும்! வடதிசையில் கேவலம் விலங்குணர்வுடையவரே பெரும்பாலராகையால் அத்திசைப்பாலதாகிய மறையும் வடக்கு எல்லைப்பாலனவும் முதல் வருணத்தார்க்கே உரியனவு மாகையால் அவை பார்ப்பனர் பற்றுவனவாம். அதனால் வடமொழி பார்ப்பனமொழியாம். அத்தகைய பார்ப்பனர் தென்னாடு அடைந்த பின்னர் அன்னோரது மொழியும் வேதமும் தமிழ்நாட்டில் பாவின. தமிழ் பார்ப்பனர்க்கு வேண்டுவதன்று. அதனால் தமிழ் பார்ப்பனர் மொழியாகாது. அது சூத்திரமொழியே என்று வழக்கிடுவாரேல் அதற்கு விடை கூறுதும். வடதிசைப் பாலாரும் வடமொழிவேதத்துக்கு உரியாரும் அவ்வடதிசையைத் தாண்டித் தென்திசைக்குவந்தவாறு என்னை? வடதிசையில் உள்ளார் யாவரும் பார்ப்பனரும் தென்திசையில் உள்ளார் யாவரும் சூத்திரர் என்று எங்கே கூறப்பட்டு உள்ளது? ஓர்காலத்தில் தானே பார்ப்பனர்கள் தென்திசையை அடைந்தார் எனின், அதற்கு முன்னர்ப் பார்ப்பனர் ஆசியின்றிச் சூத்திரர் எப்படிப் பிழைத்தார்கள்? தமிழ்நாட்டுச் சூத்திரரும் ஓர் காலத்தில் தானே வடதிசையை அடைந்திருப்பாராயின் ஏவலுக்கு உரிய சூத்திரரின்றிப் பார்ப்பனர்கள் எப்படி வாழ்ந்தார்கள்? தமிழைச் சூத்திரமொழி என்றதனால் யாம் இவ்வாறு கடாவினாம். கடாவிய இடத்தும் அன்னோர் மதத்தை உடன்பட்டேகடாவினாம். எல்லாச் சாதியும் எங்கும் முன்பே உண்டாகையால் பார்ப்பனர் வடபுலத்தார் என்றும் சூத்திரர் தென்புலத்தார் என்றும் பார்ப்பனர், மொழி கீர்வாணம் என்றும் சூத்திரமொழி தமிழ் என்றும் கூறுவது ஒவ்வாததாம். வடமொழிக்கும் அதனாலாய வேதத்துக்கும் எவ்வளவு மாண்புண்டோ அவ்வளவுக்கு மேலிட்ட மாண்பு தமிழுக்கும் அதனாலாய வேதத்துக்கும் உண்டு என்பதை யாம் பல்லாற்றானும் விளக்கினாம். ஆகையால் வடதிசையில் உள்ள பார்ப்பனர்கள் வடமறையுடன் தென்மறையையும் பயின்று வந்தார்

என்பதே முடிவுறும். அப்படியே இருமொழிகளையும் பார்ப்பனர் முதலிய நால்வருணத்தாரும் கற்று வந்தனர். வடமறையானது மந்திரமாகையால் அவ்விலக்கணம் தமிழ் மறைக்கு அமையாதெனின், தமிழ் மறைதானே மந்திரம் என்னும் சொல்லுக்கு உரித்தாகும். எழுகோடி மாமந்திரங்களே ஏழு திருமுறைகளாக வகுக்கப்பட்டன என்று தமிழ் மறையை உண்மையறிந்தோர் ஒப்பியதாலும் இத்தமிழ் மந்திர வாயிலாகவே முதலையுண்ட பிள்ளையை அழைத்ததும் சுட்ட எலும்பைப் பெண் ஆக்கியதும் வைகையைப் பெருகச் செய்ததும் மூங்கையைப் பேசுவித்தது மாகிய பெருமைகள் சிறந்தமையாலும் எமது உண்மை நிலைபெற்றது. ''தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை, உண்ட பாலனை அழைத்ததும் எலும்பு பெண் உருவாக், கண்டதும் மறைக்கதவினைத் திறந்ததும் கன்னித் தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்'' என்னும் செய்யுளானும் கண்டு தெளிக. வடமந்திரங்களினும் தென்மந்திரம் பேருறுதியைப் பயப்பனவும் தனித்த சத்துவப் பெருமையுடையதும் ஆகையால் தமிழ் மந்திரமே சிறந்தன எனவும் முன்னர்த் தென்னாட்டிருந்த பார்ப்பனர்கள் வடமொழியினும் மிகுதியாகத் தமிழ் மந்திரங்களையே பயின்று வந்தனர் எனவும் அவை தமிழ் வேதங்களேயாம் எனவும் திருமந்திரம் என்னும் பெயர்த்தாகிய திருமூலர் திருமொழியே இதற்குச் சான்றாகும் எனவும் உண்மையுணர்ந்தோர் பரவி மொழிவர்.

சுந்தர மூர்த்தி சுவாமிகள் நொடித்தான்மலைத் திருப்பதிகத்தை கயிலாயத்திலே தானே வெளிப்படுத்தியமையானும் அவருடைய தோழராகிய சேரர்பெருமான் ஆதியுலா என்னும் நூலை அவரோடு சென்று அங்குத்தானே வெளிப்படுத்தியமையானும் திருவாசகம் என்னும் தமிழ்வேதத்தை அக்கயிலையில் தானே பிரமவிட்டுணுக்கள் கேட்டுய்ய

வெளிப்படுத்தியமையானும் கயிலாயத்தில் தமிழ்மொழி வழக்குடையதாயிற்று. அன்றியும் சிவபெருமான் பாணபத்திரர் பொருட்டுத் திருமுகப்பாசுரம் சேரர்கோனுக்கு வரைந்தமை-யானும் தருமி என்னும் அந்தணச் சிறுவனுக்குக் 'கொங்கு-தேர் வாழ்க்கை' என்னும் பாசுரம் வரைந்து கொடுத்தமை யானும் பெற்றான் சாம்பானுக்கு முத்தி கொடுக்கும் பொருட்டு உமாபதி சிவத்துக்குச் சீட்டெழுதி அனுப்பினமை யானும் 'தில்லை வாழந்தணர்' என்று சுந்தரமூர்த்தி சுவாமி களுக்கும் உலகெலாம் என்று சேக்கிழார் சுவாமிகளுக்கும் முதலெடுத்துக் கொடுத்தமையானும் அகப்பொருள் என்னும் ஓர் இலக்கணம் செய்து உதவினமையானும் அவருக்கு உரிய மொழியாகவும் தமிழ் சிறந்திருக்கின்றது கயிலாய மொழியாகவும் சிவனுடைய மொழியாகவும் தமிழ் சிறக்கு-மானால் இதற்கு முன்னர் வடமொழியைத் தேவமொழி என்று நாம் வியப்பதில் என்ன சிறப்பு? இவ்வரிய மொழியில் நம் பாலறாவாயரே அன்றி ஏனைய குரவர்களும் உபநிடதங்-களை வெளியிட்டார் என்பதும் அதுவே சிறப்புடைப்பது என்பதும் எல்லாருக்கும் ஒப்ப முடிந்தது.

(சூளை. சோமசுந்தர நாயகர் அவர்கள்)

ஆகலின் வடஎழுத்திற்கும் முதல் ஆதல் நோக்கித் திருவள்ளுவர் ''எழுத்தெல்லாம்'' என்று கூறினார் என்பது பொருந்தாது. 'எழுத்தெல்லாம்' என்றது தமிழ் எழுத்துக்களையே என்று அறிக. எம்மொழியில் உள்ள அகரமாயினும் அஃது அங்காப்பு முயற்சியாலேயே பிறக்கும். எனவே அகரம் கலந்தன்றி ஏனைய எழுத்துக்கள் பிறவா என்று உணர்க.

4. இனி, பரிமேலழகர் ''உலகு என்றது ஈண்டு உயிர்கள் மேல் நின்றது'' என்றார். கூறிய அவரே ''காணப் பட்ட உலகத்தால் காணப்படாத கடவுட்கு உண்மை கூற

வேண்டுதலின் ஆதி பகவன் முதற்றே உலகு'' என்று கூறி வழீஇயனார். காணப்பட்ட உலகம் என்பது அவர் கருத்தின் படி உயிர்கள் ஆகும். உயிர் காணப்படாத பொருளேயல் லாமல் காணப்படும் பொருள் ஆகாது. எனவே 'காணப் பட்ட உலகத்தால்' என்ற அவர் கூற்று ஒவ்வாது. அற் றன்று. உயிர்கள் தங்கும் உடம்புகளைக் கண்டு அவற்றை உணர்தல் கூடும் எனின் உணர்தல் கூடுமேயல்லாமல் காண்டல் கூடாது என்று மறுக்க. உயிர் என்று ஒரு பொருள் இன்று என்னும் மதங்களையும் நினைவு கூர்க. மற்றும் உயிரல் பொருளான கடல், நெருப்பு முதலிய பொருள்களா லும் கடவுளுண்மை உய்த்துணரலாகுமே என்க. எனவே உயிர்களைத் தனியே பிரித்தல் வேண்டுவதன்று என் றுரைக்க.

திருக்குறள் கடவுள் உண்மையையும் தேவர், அவர் வாழுலகு, அவ்வுலகினும் உயர்ந்த உலகம், நிரயம், அலகை ஆகியவை உண்மையையும் எடுத்துரைக்கும். இறைவனை ''உலகியற்றியான்'' எனவும் கூறும். அவனே வினைப் பயனை ஊட்டுபவன் எனவும் உயிர்கள் அவனை அடையின் இருவினையும் அவற்றை அடையா எனவும் கூறும். இவை கடவுளின்மைக் கொள்கையரையும், பௌத்தரையும், சமண ரையும் முரணுவ. ஆயினும் கடவுளின்மைக் கொள்கையர் சிறிதேனும் நாணமின்றித் திருக்குறளை ஆளுகின்றனர். ஏனையர் எம்நூல் என்று அழிவழக்கு பேசுகின்றனர். இச் செயல் மனச்சான்று கொல்வதன்றிப் பிறிதன்றென்க.

இக்குறளில் வரும் 'ஆதிபகவன்' என்பதிலுறும் ஆதி என்பது பெண்பாற் பெயர் என்று கொண்டு ஆதிபகவன் என்பது பெண்ணொருபால் வைத்த பெருமானைக் குறிக்கும் என்பாருமுளர். வள்ளுவரின் தாய் ஆதி, தந்தை பகவன் இரண்டையும் கூட்டி 'ஆதிபகவன்' என்று கூறித் திருவள் ளுவர் பெற்றோரை வாழ்த்துகிறார் என்பகரும் உளர்.

இவரெல்லாம் இவ்வதிகாரம் கடவுளை வணங்கும் நெறியை மக்கட்குக் கற்பிக்க எழுந்ததே அல்லாமல் எவரையும் வாழ்த்திட வந்ததன்று என்பதை உணராராவர். பகவன் என்ற சொல் வடமொழியில் இன்றெனக் கூறித் தம் அறியாமையை வெளியிடும் தமிழ்ப் பேராசிரியரும் உளர். என் செய்வது?

5. வடமொழிக்கண் ஞானம், ஐசுவரியம், திரு, வைராக்கியம், வீரியம், புகழ் ஆகிய ஆறும் பகம் எனப்படும். இவற்றை உடையவன் பகவான் ஆவன். பகவான் என்ற சொல் வேதத்தில் குகனைக் குறிக்கும். குகன் என்பது உயிர்களின் உள்ளக் குகைகளில் விளங்குவதால் இறைவனுக்கு வந்த காரணப்பெயர் ஆகும். ''பகவாந்குஹ'' என்பது இருக்குவேத அட்சமாலிகை உபநிடதம். இக்குகன் என்ற பெயர் சிவபெருமானுக்கே உரியது. இவ்வுண்மையை ''எங்கும் முகம் உடையவனும், தலை உடையவனும், கழுத்து உடையவனும், எல்லாவுயிர்களின் உள்ளக் குகைகள் தோறும் இருக்கின்றவனும், எங்கும் நிறைந்தவனுமாயுள்ளான் அந்தப் பகவான். ஆகையால் சிவபிரானே யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பவன்'' என்று சுவேதாசுவதர உபநிடதம் கூறுகின்றது ''ஸர்வாநந சிரோக்ரீவஸ் ஸர்வபூதகுஹாசய! ஸர்வவ்யாபீஸபகவாந் தஸ்மாத் ஸர்வகதச்சிவ'' கூறுகின்றது. அனைத்தையும் அழித்து ஒடுக்குபவன் ஆதலின் அரன் எனவும் எங்கும் நிறைந்தவன் ஆதலின் விட்டுணு எனவும் முற்றும் உணர்ந்தவன் ஆதலின் பகவான் எனவும் காப்பவன் ஆதலின் ஓம் எனவும் சிவனுக்குப் பெயர்கள் உண்டாயின என்று கூர்மபுராணம் இயம்புகின்றது. ''பின்பு சிவன் எதுபற்றிப் பகவான் எனப்படுகின்றான்? எவன் எல்லா உலகங்களையும் சாட்சியாய்க் காண்கின்றான்? உயிர்கட்கு உரிய முற்றுணர்வை அருள் புரிகின்றான்? அதற்கு உறுப்பாகிய இராசயோகத்தை உண்டாக்குகிறான்? அதனால் அவன் பகவான் எனப்படுகின்றான்'' என்று அதர்வசிர உபநிடதம் ''அத

கஸ்மாதுச்யதே பகவாந் யகூஸர்வாந்பாவா நீக்ஷத் யாத்மஜ் ஞாநம் நிரீக்ஷயதி யோகம்கமயதி ஸரவ தஸ்மாதுச்யதே பகவாந்'' கூறுதலும் அறிக. ருத்ர நமகம் 'பகவாந் விச் வேச்வராய மஹாதேவாய' என்று கூறுதலும் காண்க. பகவான் என்னும் பெயர் சிவபெருமான் ஒருவனுக்கே உரியது. மற்ற தேவர்களைப் பகவான் என்று வடமொழி மறை கூறாது. எனவே வியாச பகவான், கிருட்டிண பக-வான், வான்மீகி பகவான் எனவரும் வழக்குகள் புகழுரை களேயன்றி உரிமையுரைகளல்ல என்று தெளிக. பாம்பன் குமர குருதாச சுவாமிகளும் ''திருவள்ளுவ தேவரது குறளு ளை முதற்செய்யுட்கண் போந்த 'பகவன்' என்பதற்கும் வைதிக நூல் மரபில் பொருள் கொள்ளுஞான்று இங்குக் கூறிய பொருளே சிறக்கும்'' என்று அருளிச் செய்தார். யாம் ஈங்கு விரித்த பொருளே அஃதாம் என்க.

பகவன் என்னும் சொல்லுக்குத் தொழப்படும் மேன்மை யுடையவன் என்று வடமொழி நிகண்டு பொருள் கூறும். சிவபிரானை யாவரும் தொழுவர். சிவபிரானால் தொழப் படுப்வர் யாரும் இல்லை. இத்தன்மையை திருவாசகம் ''செய்யானை வெண்ணீறணிந்தானைச் சேர்ந்தறியாக் கை யானை'' என்று அறிவுறுத்தல் காண்க. இரண்டு கைகளும் ஒன்று சேர்ந்தால் தான் கும்பிட முடியும். சிவபிரான் கும்பிட் டே அறியாதவன். எனவே அவன் சேர்ந்தறியாக்கையான் எனப்படுகின்றான். அவனையே எல்லாத் தேவரும் கும்பிடு வர். தாயுமானவ அடிகளாரும் ''இந்த்ராதி தேவதைகள் பிரமாதி கடவுளர் இருக்காதி வேத முனிவர் எண்ணரிய கண நாதர் மற்றையர்கள் யாவரும் கைகுவித்திடு தெய்வமே'' என்று பரவுதலும் அறிக. வடலூர் வள்ளலாரின் திருவடிப் புகழ்ச்சி இதை விரித்திசைக்கும்.

அரசன் ஒருவனே. ஏனைய யாவரும் அவன் கீழ் வாழும் குடிகள். அதுபோல இறைவன் ஒருவனே. ஏனைய

எல்லாத் தேவரும் அவனருளால் வாழும் உயிர்களே என்று அறிக. அரசன் வணக்கத்துக்கு உரியவன். அரசுப் பணி செய்யும் ஊழியரில் சிலர் அப்பணி மேம்பாடு கருதி வணக்கத் துக்கு உரியராயுளர். அது போலத் தேவர்கள் சிவபிரானின் ஊழியர்கள். சிவபிரான் யாவர் கீழும் வாழும் குடிமகனல்லன். அவன் யாவர்க்கும் முதல்வன். இதனைத் திருநாவுக்கரசு நாயனார் "தாமார்க்கும் குடியல்லாத்தன்மையான சங்கரன்" என்று உணர்ந்துகின்றார். அரச ஊழியரில் சிலர் வணக் கத்துக்கு உரியராதல் போலச் சிவபிரானின் ஊழியர் ஆய தேவரும் மக்களால் வணங்கப்படுகின்றனர். அவ்வாறு வணங்கப்படுதலை அத்தேவரும் பெரிதும் விரும்புகின்றனர். மக்களின் உள்ளப் போக்கினைச் சார்ந்து சிறு தெய்வ வழி பாடு நிகழ்கின்றது. இவ்வழிபாடு குறைவுறாது நிகழ வேண் டும் என்பது அத்தேவரின் விழைவு. அது கைகூட அன் னோர் சிவபிரானை வழிபடுகின்றனர். இவ்வுண்மையை

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம் நின்பால்
தாழ்த்துவதும் தாம் உயர்ந்து தம்மையெல்லாம் தொழ வேண்டி"

என்று திருவாதவூரடிகள் கூறுதல் ஓர்க.

மாந்தரால் தேவர் தொழப்படுகின்றனர். தேவரால் சிவ பிரான் தொழப்படுகின்றார். எனவே சிவபெருமான் தொழப் படும் தேவர் தம்மால் தொழப்படுவான் ஆவன். எனவே அவன் பகவான் ஆதல் உணர்க. இச்சிவனார்க்குத் தொண்ட ராயினார் பெருமை சொல்லவும் படுமோ? ஔவைப் பெரு மாட்டியும் "தொண்டர் தம் பெருமை சொல்லவும் படுமோ" என்று அருளிச் செய்தனரே. மக்கள் தொழுகின்ற தேவர் இத்தொண்டரைத் தொழும்படி சிவபிரான் செய்தருளுவான். இவ்வுண்மையை அப்பரடிகளார்

"முழுத்தழல் மேனித் தவளப் பொடியன் கனக குன்றத்
தெழிற்பரஞ் சோதியை எங்கள் பிரானை இகழ்திர் கண்டீர்

தொழப்படும் தேவர் தொழப்படு வானைத் தொழுத பின்னர்த்
தொழப்படும் தேவர்தம் மால்தொழு விக்குந்தன் தொண்டரையே.

என்று அருளிச் செய்தனர். சூதசங்கிதை சாம சாகோபநிடத தாற்பரிய அத்தியாயம்'' பரம அத்துவித சைவமெய்ஞ்ஞானி பாரளந் தவன்முத லோரால், வரமுறப் பூசை புரிந்திடத் தக்கோன்'' எனல் காண்க. இவ்வுண்மையைச் சுந்தரமூர்த்தி நாயனார் நேரேகண்டு அருளிய

''இந்திரன் மால்பிர மன்னெழி லார்மிகு தேவ ரெல்லாம்
வந்தெதிர் கொள்ள என்னை மத்த யானைய ருள்புரிந்தான்
மந்திர மாமுனிவர் இவன்யார் என்ன நம்பெருமான்
நந்தமர் ஊரன் என்றான் நொடித்தான்மலை யுத்தமனே''

என்ற பாடலையும் கருதுக.

6. இறைவன் உண்மையை உணர்த்தும் உவமைகள் பல உள. திருவள்ளுவர் ('அ' எனப்படும் எழுத்தாகிய) அகரத்தை உவமையாகக் கொண்டுள்ளார். மற்ற உவமைகள் இறைவன் இலக்கணத்தொடு சிறிதே ஒத்து நின்று பெரிதும் மாறுபட்டு நிகழ்வ. அகர உவமை பெரிதும் ஒத்து நின்று சிறிதே மாறுபட்டு நிகழும். ஆயினும் இறைவனோ வாலறிவன். அகரம் அறிவோ உயிரோ இல்லாதது. இதனை உவமை கூறலாங்கொல் எனின், உயிர்கள் அறிவித்தால் அன்றி அறியா இயல்பின ஆதலால் அவற்றிற்கு உணர்த்துவான் உவமித்தாரே அன்றி இறைவனுக்கு அகரம் இணையாகும் என்று கொண்டு உவமித்தார் அல்லர் திருவள்ளுவர் என்று உணர்க. திருவருட்பயனில் உமாபதி சிவனார்,

''அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறைநிற்கும் நிறைந்து''

என்று இத்திறத்தை விளக்கியருளுகின்றார். இக்குறட்பா-வுக்கு உரைவகுத்த நிரம்ப அழகிய தேசிகர் அகரம் உவமை யாகும் எல்லையும் அவ்வுவமைப் பண்பை இழக்கும் எல்லை-யும் இவையென அழகுற விளக்குகின்றார். அவர் உரை-யைக் கீழே காண்மின் :

''அகரம் தானே தனித்தும், ஏனை உயிருடம்புகள் எல்-லாம் வேறின்றிப் புணர்ந்தும் நிற்றலானும், அங்ஙனம் புணர்ந்தவழியும் தன் உருவுதோன்றாது ஆகலானும், முதற் கண் வைக்கப்படுதலானும், விகாரமின்றி நாத இயல்பால் பிறத்தலானும் இறைவற்கு உவமை ஆயிற்று. இவ்வொப்பு-மையால் சடமாகிய ஒலிவடிவு அன்று என்பதற்கு 'அறிவாகி' என்றும், அகரம் போல் ஒருகால் புணர்ந்து நீங்காது என்ப தற்கு 'நிறைந்து' என்றும், அவ்வகரம் முதலிய எழுத்துக் களும் உட்படுதற்கு 'எங்கும்' என்றும், மாணாக்கர்க்கு அறிவித்தல் பொருட்டு உவமனொடு புணர்த்தினும் அன்னது அன்று என்பதற்கு 'நிகரில்' என்றும் கூறியருளினார்''

''அன்றவை பதிதான் ஒன்றென்றுரையும் அக் கரங்கள் தோறும், சென்றிடும் அகரம் போல நின்றனன் சிவனும் சேர்ந்தே'' என்று சிவஞான சித்தியார் கூறுதலும் காண்க. பாம்பன் அடிகளாரும்

''எழுத்திறைபோ லக்கலந்தெல் லாமியக்கா நிற்கும்
முழுத்தலைவன் மார்க்கம் முழுதும் — வழுத்திக்
கருப்பா சயவல்ல கண்டக்கைப் போட்டும்
திருப்பா எனும் மதுரத் தேன்''.

என்று கூறுதலைக் கருதுக.

7 அகரவுவமை திருமுறைகளிலும் சைவ சித்தாந்த நூல்களிலும் மிக்குப் பயின்று வருகின்றது. ''அகர முதலானை அணியாப்பனூரானை'' எனவும், ''ஆனத்து முன்எழுத்தாய் நின்றார் போலும்'' எனவும் ''அகர முதலின்

எழுத்தாகி நின்றாய்'' எனவும் வருவனவும் இவைபோல் வனவும் காண்க.

மெய்கண்ட தேவ நாயனாரும்,

''ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளை காண் - ஒன்றின்றால்
அக்கரங்க ளின்றாம் அகர உயிர் இன்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு''

என்று சிவஞானபோதம் என்னும் தெய்வத் திருநூலில் அருளல் காண்க. இங்ஙனமே அகரவுவமை சைவசித்தாந்த நூல்களில் ஆட்சி பெற்றுள்ளது. சிவஞானபோத வெண்பாவை விளக்கவந்த சிவஞான முனிவர் ''வேதத்துள் 'ஏகம்' என்ற சொல் வேறுபொருள் படாது என்பார் 'ஒன்றென்ற தொன்றே' என்றும் அதற்குத் தாற்பரியம் கூறுவார் 'விண்ணும் மண்ணும் தோற்றுவிக்கும் தேவன் ஒருவனே' என்றும் ''ஒருவனே உருத்திரன். இரண்டாம் முதற்கடவுள் இல்லை'' என்றும் ''பிரமப்பொருள் ஒன்றே'' என்றும் ஓதுகின்ற அச்சுருதிப் பொருளே பற்றி 'ஒன்றே பதி' என்றும் பதியோடு உயிர்களிடை வேற்றுமை கூறுவார் ''பசுவாம் ஒன்றென்ற நீ'' எனவும் பசுவாதற்குக் காரணம் கூறுவார் ''பாசத்தோடுளை காண்'' என்றும் பிரமப்பொருள் இல்லையாயின் ஒரு பொருளும் இல்லை என்பதோர் சுருதிப் பொருள் இதனோடு முரணாமை அதன் தாற்பரியம் உணர்த்துமுகத்தான் அங்ஙனம் வேறாயினும் வேறன்மைக்கு அனுபவம் காட்டுவார் ''ஒன்றின்றால், அக்கரங்கள் இன்றாம் அகரவுயிரின்றேல் இக்கிரமத்தென்னும் இருக்கு'' என்றும் கூறினார். இது தானேயாதல் வலியுறுத்தப்பட்டவாறு காண்க.

''மெய்கள் அகரமொடு சிவணியன்றி இயங்காமையானும், இகர, ஈகார, உகர, ஊகாரங்கள் அகரத்திற்கு உரிய

அங்காப்பு முயற்சியோடு சிவணியன்றிப் பிறவாமையானும்; ஏகாரம், ஓகாரம் முதலாயின முன் அகரக் கூறும் பின் இகர உகரக் கூறுகளுமாய் இயைந்தன்றிப் பிறவாமையானும், அவை எல்லாம் அகரமாகிய உயிரை இன்றியமையாமை பெற்றாம் ''அது போலப்பிரமம் இல்லையாயின் ஒரு பொருளும் இல்லை'' என்றதூஉம் பிரமத்தை இன்றியமையாமைப் பொருட்டு என்பார் ''அக்கரங்கள் இன்றாம் அகரவுயிர் இன்றேல் இக்கிரமத்தென்னும் இருக்கு'' என்றார்''

என்று விரித்தலை யுணர்க. முனிவர் தமிழ்நூலுக்கு உரை எழுதுவதை மறந்து வடமொழி பற்றியே இலக்கணம் கூறுதல் ஒவ்வாது. முனிவர் அளிக்கும் விளக்கம் எகர ஒகரங்கட்கே செல்லுமாகவும் அவர் ஏகார ஓகாரங்களாய நெட்டெழுத்துக் களைக் கூறுதல் காண்க. ஈண்டு ஓர் உண்மை உணர்த்துதும்

'ஓம்' என்பது பிரணவம் எனவும் அது வடமறைத் தொடக்கத்தே நிகழ்வது எனவும் எல்லாவற்றுக்கும் மூலகாரணமாவதும் அப்பிரணவமே எனவும் வடநூல்கள் முறையிடும். ஆராயுமிடத்து 'ஓம்' என்னும் இது தமிழ் மொழியாமே அன்றி வடமொழியாகாது என்னும் உண்மை புலனாகும். மறைமுதலாகிய ''ஓ'' என்பது உலகினும், உடம்பினும் எங்ஙனம் அமைந்துள்ளதோ அங்ஙனமே வரி வடிவில் அமையப் பெற்ற சிறப்புடையது தமிழ்மொழியேயாம். இந்த 'ஓ' என்பது தமிழெழுத்து வழியாகப் பின்னர் உண்டாகிய கிரந்த எழுத்திலும் அவ்வாறே அமைந்துள்ளது. ஏனைய தேவநாகரி முதலிய எழுத்துக்களில் அங்ஙனம் அமைந்திலது. மற்றும் 'ஓம்' என்பது அகர உகர மகரக் கூறுகளையுடையது என்பர். அகரவுகரங்கள் ஒகரம் ஆமே அன்றி ஓகாரம் ஆகாது. ஒகரம் வடமொழியில் இன்று. இன்றாகவே சிவஞான முனிவர் வலிந்து ஏகார ஓகாரங்களைக் கூறுதலை நல்லறிஞன்மார் ஒப்பார் என்க. எனவே வடமொழிமறைகள் தமிழ் மொழியையே மூலமாகக் கொண்டுள்ளமை நணி விளங்கும்.

8. நச்சினார்க்கினியரும் அகரம் பற்றிய நல்விளக்கம் ஒன்று தந்துள்ளார். அது வருமாறு :-

''மெய்யில் நிற்கும் உயிரும், தனியே நிற்கும் உயிரும் வேறு என உணர்க. ''அகர முதல'' என்புழி அகரம் தனி உயிருமாய், ககர வொற்று முதலியவற்றிற்கு உயிருமாய் வேறு நிற்றலின். அவ்வகரம் தனியே நிற்றலானும், பலமெய்க்கண் நின்று அவ்வம் மெய்கட்கு இசைந்த ஓசைகளைப் பயந்தே நிற்றலானும் வேறுபட்டதாகலின், ஒன்றேயாயும், பலவேயாயும் நிற்பதோர் தன்மையை யுடைத்தென்று கோடும். இறைவன் ஒன்றேயாய் நிற்கும் தன்மையும், பல்லுயிர்க்கும் தானேயாய் அவற்றின் அளவாய் நிற்கும் தன்மையும் போல'' (தொல் எழுத்து 8).

''இங்ஙனம் மெய்க்கண் அகரம் கலந்து நிற்குமாறு கூறினாற் போலப் பதினோருயிர்க்கண்ணும் அகரம் கலந்து நிற்கும் என்பது ஆசிரியர் கூறாராயினார்; அந்நிலைமை தமக்கே புலப்படுதலானும் பிறர்க்கு இவ்வாறு உணர்த்துதல் அரிதாகலானும் என்று உணர்க. இறைவன் இயங்குதிணைக் கண்ணும் நிலைத்திணைக் கண்ணும் பிறவற்றின் கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல, அகரமும் உயிர்க்கண்ணும் தனிமெய்க் கண்ணும் கலந்து அவற்றின் தன்மையாலே நிற்கும் என்பது சான்றோர்க் கெல்லாம் ஒப்ப முடிந்தது. 'அகர முதல' என்னும் குறள்கள் அகரமாகிய முதலை யுடைய எழுத்துக்கள் எல்லாம். அதுபோல இறைவனாகிய முதலையுடைத்து உலகம் என வள்ளுவனார் உவமை கூறியவாற்றானும், கண்ணன் 'எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே' எனக் கூறியவாற்றானும் பிறநூல்களானும் உணர்க''. (தொல். எழுத்து 46)

நச்சினார்க்கினியர் சுட்டிய கண்ணன் கூற்று பகவற்கீதை பத்தாம் அத்தியாயத்தே ''அக்ஷராணா மகாரோஸ்மி'' என வரும் 33-ஆம் சுலோகத்தில் உள்ளது. பகவற்கீதை பற்றிய

புதுமைச் செய்தி ஒன்று உள்ளது. அது கால வெள்ளத்தில் மறையாமல் இருக்க வேண்டும் என்னும் கருத்தால் ஈண்டுத் தரப்படுகின்றது.

9. ஹியான் சுவாங் என்பவர் தருமக்ஷேத்திரம் என்னும் குருக்ஷேத்திரம் பற்றிக் கேள்விப்பட்ட வரலாற்றைத் தமது சியூகி என்னும் நூலில் குறித்துள்ளார். அது வருமாறு.

தங்கட்கு உரிய நாட்டை உரிமை பற்றி இரண்டாக்கிப் பங்கிட்டு ஆண்டுவந்த மன்னர் இரு திறத்தவரும் ஒருவரை ஒருவர் வேறல் கருதி ஓயாது போர் செய்து கொண்டிருந்தனர். அதனால் சலித்துப்போன அவர்கள் இறுதிப்போர் ஒன்று செய்து வெற்றி தோல்வியை உறுதி செய்து கொள்வதென ஒப்பந்தம் செய்து கொண்டனர். தங்கள் மன்னர்கள் செயலால் மனம் வெறுத்த மக்கள் போரில் ஈடுபட மறுத்தனர். தன் நோக்கத்துக்கு மக்கள் தடையாயிருப்பதை அறிந்த தனேசுவரத்து மன்னன் சிந்தித்தான். மக்களுக்குள்ள மூட நம்பிக்கையைக் கொண்டு தான் பயனடைய சூழ்ச்சி செய்தான். அறிவில் சிறந்த பார்ப்பனன் ஒருவனுக்கு யாரும் அறியாதபடி பரிசுப் பொருள்களை வழங்கி அரண்மனையில் ஒரு தனியிடத்தில் தங்க வைத்தான். அப்பார்ப்பனன் அரசன் கருத்தின்படி தருமசூத்திரம் எனப் பெயரிய நூலையாத்தான். அது வருணாச்சிரமக் கடமைகளை வலியுறுத்துவதாகும். அந்த நூலை அரசன் ஒரு மலைக் குகையில் மறைத்து வைத்தான். மறைத்த இடத்தைப் புல்பூண்டுகள், மரம், செடி, கொடிகள் வளர்ந்து மறைக்கும் வரையில் காத்திருந்தான்.

பின்னர் ஒரு நாள் மன்னன் அரசவையில் மந்திரிகளைப் பார்த்துத் தன் கனவில் இந்திரன் தோன்றி குறிப்பிட்ட இடத்தில் ஒரு தெய்வநூல் இருப்பதாக உணர்த்தினான் என்றான். அதன் பயனாக மறைத்து வைத்திருந்த நூல் வெளிப்பட்டது. அரசன் ஆணைப்படி அந்த நூலின் கருத்-

துக்கள் மக்களிடையே பரப்பப்பட்டன. அதன் சுருக்கம் வருமாறு :

பிறப்பும் இறப்பும் கரை காண முடியாத பெரிய கடலாகும். மாறி மாறி வரும் அதன் சுழலில் இருந்து யாரும் எவ்வகையாலும் தப்ப முடியாது. எனினும் நான் போற்றத் தக்க ஒரு வழி கூறுகின்றேன். இந்நகரைச் சுற்றி 200 இலிங்கங்கள் இருந்தன. பழைய அரசமரபினரால் போற்றப் பட்ட அவை கால வெள்ளத்தில் கரந்து போயின. மக்களும் மறந்து விட்டனர். எனவே அவர்களைத் துன்பம் பற்றியுள்ளது. நல்ல அறிவுடையவர்கள் போர் செய்து மாய்ந்தாலும் மீண்டும் மக்கட் பிறவி அடைகின்றார்கள். போரில் எதிரியைக் கொல்வது தீவினையாகாது. அன்னோருக்கு இறைவன் அருள்புரிகின்றான். பெற்றோருக்குப் பணிவிடை செய்தல் நல்வினை தரும். உன் பணி சிறிதே. நீ பெறும் பயனோ மிகப் பெரிதே. இந்த வாய்ப்பை நழுவ விடாதே. உயிர் உடம்பை விட்டுப் பிரிந்தால் மூன்று வகையான இருளில் ஆழும். எனவே நல்வினையை நாடு. போரில் பங்கேற்பவருக்கு வீடுபேறு கூடும்.

இக்கருத்துக்கள் நாடெங்கும் பரவின. அரசன் படை திரட்ட ஆணையிட்டான். மக்கள் திரள் திரளாக வந்து படையில் சேர்ந்தனர். பின்னர் நடந்த போரில் எண்ணிலர் மாண்டனர். அவருடம்புகள் கண்டபடி சிதறிக் கிடந்தன. அந்த இடம் தெய்வத் தலமாக வழிபடப்படுகிறது. யுவான் சுவாங் நூலை மொழி பெயர்த்த தாமசு வாட்டர்சு என்பார் அந்நூல் பகவற்கீதை போன்று உள்ளது என்கின்றார்.

இவ்வரலாற்றை உறுதிப்படுத்துவதுபோல ஒரு சான்றும் உள்ளது. குடந்தை வைணவப் பெரியார் அக்னிஹோத்ரம். இராமானுச தாதாசாரியார் வெளியிட்டுள்ள வரலாற்றில் பிறந்த வைணவம் என்னும் நூல் பக்கம் 324-இல்

"கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சைனாவின் 'திரிபிடகம்' என்ற பௌத்தமத நூல் கீதையில் காணப்படும் பத்தாவது அத்தியாயத்தின் சுருக்கத்தை வெளியிட்டு நாராயண சாஸ்திரியினுடையது என்று கூறுகிறது"

என்று உள்ளது. இதனால் அப்பார்ப்பனர் பெயர் நாராயண சாஸ்திரி என்பது வெளிப்பட்டது. வைணவப் பெரியார் "சாஸ்திரி என்ற சொல்லுக்கு என்ன பொருள் இருந்தாலும் கீதையை நாராயணன் தான் சொல்லியுள்ளான் என்று இதனால் விளங்குகிறது" என்றும் கூறியுள்ளார். கிருட்டிணன் அரசராய யாதவ குலத்தவன் ஆதலின் அவனைச் சாஸ்திரி என்று யாரும் கூறார். கிருட்டிணனுக்கு நாராயணன் என்று பெயர் இன்று. கிருட்டிணன் இறந்த பிறகே அவனை அவதாரமாக்கி வழிபடத் தொடங்கினர். எனவே நாராயண சாஸ்திரி என்பவர் மேல் வரலாற்றில் குறிப்பிடப்பட்ட பார்ப்பனனே ஆவன் என்க. இவ்வரலாறு ஆங்கிலத்தில் கூறப் படலைக் கீழே காண்க.

"The emphasis laid in the Bhagavad Gita on killing as a duty calls to mind the following tradition that the chinese traveller yuan chuvang heard concerning Dharmakshetra otherwise called Gurukshetra :- "The five Indies" were once divided between two sovereigns who fought for mastery invading each other's territory and keeping up unceasing war. At length in order to settle the question of superiority and to give peace to their subjects, the kings agreed between themselves to have a decisive action. But their subjects were dissatisfied and refused to obey their king's commands. There upon the king of that part of India which included Thanesver thought of an expedient. Seeing it

was useless to let his subjects have a voice in his proposals and knowing that the people would be influenced by the supernatural he secretly sent a roll of silk to a clever Brahmin commanding him to come to the palace. On his arrival there, the Brahmin was kept in the inner chamber and there he composed, that is by the king's inspiration, a Dharmasutra (that is a treatise on duty). This book, the king then lied in a rock cave where it remained for several years until vegetation covered the spot. Then one morning, the king informed his ministers at an audience that he had been enlightened by Indra, who told him in a dream about an inspired book hidden in a certain hill. This book was brought forth and officials and people were enraptured. By the king's order the contents of the scripture were made known to all and the sum of them was briefly this :

"Life and death are a shoreless ocean with elb and flow in endless alternation; intelligent creatures cannot save themselves from the eddies in which they are mmersed. I have an admirable device for saving them from their woes and it is this. Here we have 200 li. round the city the place of merit for generations of the ancient sovereigns, but as its evidences have been effaced in the long lapse of time, people have ceased to reflect on the efficacy of the place and so have submerged in the ocean of misery with no one to save them from perishing. No wall who being wise go into battle and die fighting will be reborn among men. slaying many, they will be innocent and will receive

divine blessings; Obedient grand children and filial children serving their parents while sojourning in this district will obtain infinite happiness. As the meritorious service is little and the reward it brings great, why *miss this opportunity? Once the human body* is lost, there are three states of dark oblivion; hence every human being should be delight in walking good Karma, thus all who engage in battle will look on death as a return home. Then the king ordered an enrolment of those *killed in battle and an engagement took place on* this ground. The bodies of those killed in battle were strown about it confused masses, so great was the number of slain and the huge skeletons of those heroes still cover the district which popular tradition calls the place of religions merit. "Thomas Waters from whose trans lation of yuant ehwang's SIYUK!, this passage has been taken remarks that it reads like an extract from Bhagavad Gita". Here probably lies the reason of the incorporation of the Bhagavad Gita in the revised version of the Mahabharatha" (page 54 and 55, A study of caste ley Lakshmi Narasu year 1922).

**10.** இனி, இக்குறள் உணர்த்தும் நுட்பப் பொருளையும் காண்பாம்.

i) அகரம் தனக்கு முதலாக எந்த உயிரெழுத்தையோ' மெய்யெழுத்தையோ உடையது அன்று. தானே எல்லா எழுத்துக்களுக்கும் *முதலாக விளங்குகிறது.*

இறைவன் தனக்கு முதலாக எந்த அறிவுடைப்பொருளை யோ, அறிவில் பொருளையோ உடையவன் அல்லன். தானே எல்லாப் பொருளுக்கும் முதற் பொருளாகி விளங்குகின்றான். "ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ் சோதி" என்

பது திருவாசகம். இது பிறரால் ஆளப்படுதல் இல்லாத தன்வயத்தன் ஆதலைக் குறிக்கும். அருளும் ஆற்றலும் ஒருவர் பால் அமைந்து கிடப்பினும் அவர் பிறருக்குக் கீழ்ப் பட்டு ஒழுகுபவராகவோ பிறர் சொல்லுக்கு இணங்கி நடப் பவராகவோ இருப்பின் அவர் தாமாகச் செயற்படுதற்குத் தடையுண்டாகும். அதனால் அவர் தம் அருளும் ஆற்றலும் முறைப்படி பயன்படாது வீண்படும். எனவே இறைவன் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தன்வயத்தன் ஆதல் வேண்டும் என்க.

ii) அகரம் ஒலி அளவிலேயே விளங்குவது. ஏனைய எழுத்துக்களைப் போல விகாரப்பட்டுப் பிறிப்பது அன்று. இறைவன் இயற்கையுணர்வினன்; அவன் ஏனைய உயிர்-களைப் போலக் கற்று எய்தலாம் செயற்கையுணர்வினன் அல்லன். உயிர்கள் பிணி, மூப்புச் சாக்காட்டுக்களுக்கு உரிய விகார உடம்பின. இறைவன் தூயவுடம்பினன். இதனால் இறைவன் இயற்கையுணர்வினன், முற்றுமுணர்பவன், தூயவுடம்பினன் என்னும் குணங்களுடைமை விளங்கும்.

இறைவன் நம் போன்ற மலவுடம்பினனாயின் அவனும் சின்னாளில் அழிந்து படுவன் எனவே அவன் ஓங்காரத் திருமேனியாம் தூயவுடம்பினனாதல் வேண்டும். இறைவன் பிறரால் கற்பிக்கப்படுபவனாயிருப்பின் உயிர்களையும் அவை படும் துன்பங்களையும் கற்பித்தால் அன்றி அறிய மாட்டான் எனவே அவன் இயற்கை உணர்வினன் ஆதல் வேண்டும். அந்த அறிவும் ஓர் எல்லை உடையதாயின் எண்ணற்ற உலகங்களில் நிகழ்வனவற்றை அவன் அறிய மாட்டான். ஆகவே அவன் முற்றுணர்வினன் ஆதல் வேண்டும் என்க.

iii) அகரம் தானே தனித்தும், ஏனை உயிரெழுத்துக் களிலும் மெய்யெழுத்துக்களிலும் வேறின்றிப் புணர்ந்தும் அல்லது சார்ந்தும் நிற்கும். இத்தன்மைகளால் சொற்கள் பிறந்து கருத்தை உணர்த்தும். இறைவன் தனித்தும் உயிர்

களின் உடனாயும் சார்ந்தும் நிற்பன். இதனால் உலகம் தொழிற்படும். தொழிற்படலால் உயிர்கள் அறிவுகூடி இறையுண்மை தெளிந்து வீட்டு நெறியில் பயின்று பேரின்பத்தை எய்தும். இது பேரருளுடைமையைக் காட்டும்.

உயிர்கள் பாசத்தால் துன்புறுகின்றன. அப்பாசத்தை நீக்கவேண்டும். வேண்டுமாயின் இறைவன் அருளுடையானாதல் வேண்டும். அவ்வருளும் சிறிதேயாயின் எல்லா உயிர்களும் நலமடைதல் இயலாது. எனவே அவன் பேரருளுடையனாதல் வேண்டும்.

iv) அகரம் ஏனைய எழுத்துக்கள் பிறக்கவும் தொழிற்படவும் முதலாகவுள்ளது ஆனால் அஃது ஏனைய எழுத்துக்களால் தோன்றுவதுமன்று தொழிற்படுவதும் அன்று. அன்றியும் அகர உயிரின்றேல் ஏனைய அனைத்து எழுத்துக்களும் இன்றாய் விடும்.

இறைவன் உயர்திணை, அஃறிணை ஆகிய இருவகைப் பொருள்கள் தோன்றவும் தொழிற்படவும் காரணமாய் நிற்பன். ஆனால் இறைவன் தோன்றவோ தொழிற்படவோ காரணமாம் பொருள் ஏதும் இன்று. இறைவன் இல்லையேல் உலகுயிர்கள் இல்லை. இதனையே அப்பர் பெருமான் ''தானலா துலகமில்லை சகமலா தடிமையில்லை'' எனவும் ''ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே'' எனவும் அருளிச் செய்தார். இது வரம்பிலாற்றலுடைமையாகும்.

அருளுடைய ஒருவனுக்கு ஆற்றல் இன்றெனில் துன்புறுவோரைக் கண்டு அவனும் வருந்தும் நிலையிலேயே அருள் நின்றுவிடும். துன்பத்தை நீக்கும் ஆற்றல் வேண்டும். உயிர்களைப் பற்றியிருப்பது தேவரும் நீக்க முடியாத பாசமாகலின் அதனை ஒழிக்கப் பேராற்றல் வேண்டும். துன்புறும் உயிர்கள் பலவாதலின் அவை தம்மை வினைக்கு ஏற்றபடி உடம்புகளுள் புகுத்தித் தொழிற்படுத்தி அறிவை விளங்கச்

செய்து அவைபடும் துன்பை அழிக்க வரம்பிலாற்றல் வேண்டும் என்க.

v) அகரத்திற்கு விகாரம் இன்று. ஆதிபகவனுக்கும் விகாரம் இன்று. இஃது இயல்பாகவே பாசங்களின் நீங்குதலைக் காட்டும்.

சேற்றில் சிக்கிக் கொண்ட ஒருவனை அவ்வாறே சிக்கிக் கொண்டு தவிக்கும் மற்றொருவன் மீட்டல் கூடுவதன்று. நம் பாசம் கழிக்க வரும் இறைவன் பாசத் தொடக்கே இல்லாதவனாய் இருத்தல் வேண்டும். எனவே இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கினவன் என்க.

vi) அகரம் பிற எழுத்துக்களைத் தோற்றுவித்தும் தொழிற்படுத்தியும் நிற்பதால் அஃது எய்தும் பயன் ஒன்றும் இன்று. அகரத்தின் தொழிலால் சொற்கள் உணர்த்தப்படுகின்றன. அகரம் எஞ்ஞான்றும் தன் வன்மை குறைாது பொலிவுடன் திகழும்

இறைவன் உலகுயிர்களைத் தோற்றுவித்தும் தொழிற்படுத்தும் நிற்பதால் அவனுக்கு உண்டாம் பயன் யாதும் இன்று அவன் வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன். அவன் செயலால் உயிர்கள் அறிவு விளக்கம் பெற்று இறைவனைக் கூடி இன்பம் நுகர்கின்றன. உயிர்கள் பல ஆதலால் அங்ஙனம் நுகரப்படும் இன்பம் எல்லையுளதாயின் குறைவுபடும். குறைவுபடின் எல்லா உயிர்களும் எண்ணறு காலம் நுகர்தல் இயலாது. எனவே இறைவன் வரம்பில் இன்பம் உடையனாதல் வேண்டும் என்க.

vii) எழுத்துக்கள் உயிர் எனவும் மெய் எனவும் இருவகைப்படும். அவற்றை அகரமே இயக்கும். உலகுயிர்கள் உயர்திணை எனவும் அஃறிணை எனவும் இருவகைப்படும். அவற்றை இறைவனே இயக்குவன்.

viii) அகரம் உயிரிலும் மெய்யிலும் கலந்திருப்பினும் தன்னுருவு காட்டாது. இறைவனும் உலகுயிர்களில் கலந்து இருப்பினும் தன்னைக் காட்டமாட்டான். அகரத்தின் இருப்பு ஒலியான் உணரப்படும். அதுபோல இறைவன் இருப்பும் உலகுயிர் இயக்கத்தால் உணரப்படுகின்றது. அகரம் தோன்றாதேல் ஏனை எழுத்துக்கள் இன்றாம். அகரத்தில் ஏனைய எழுத்துக்கள் ஒடுக்கம் பெறும். அதுபோல இறைவன் இன்றெனில் இவ்வுலகுயிர்கள் இன்றாம். இவ்வுலகுயிர்கள் இறைவனிடத்தில் ஒடுக்கம் பெறும் என்க.

ix) மெய்யெழுத்துக்கள் இயங்க உயிரெழுத்துக்கள் வேண்டும். அவ்வுயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும் தோற்றுவிக்க அகரம் வேண்டும். அதுபோல உலகில் காணப்படும் உடம்புகளை இயக்க உயிர்கள் வேண்டும். அவ்வுடம்புகளையும் அவற்றில் உயிர்களையும் தோற்றுவிக்க இறைவன் வேண்டும். அகரம் ஏனை எழுத்துக்களை நடாத்துவிப்பது போல இறைவனும் ஏனை உலகுயிர்களை உள்ளிருந்து நடாத்துவிப்பன். உடலுக்குள்ளே உயிர். உயிருக்குள்ளே இறைவன் என்று அறிக.

x) ஒரு மெய்யெழுத்தோடு அகரம் ஆகிய உயிரெழுத்து புணரின் அஃது உயிர்மெய் எழுத்தாகிறது. உயிர்மெய் எழுத்து என்னும் அளவில் உயிரும் மெய்யும் கூடிய எழுத்து என்று அறிதல் கூடுமேனும் வரிவடிவில் உயிரும் மெய்யும் புணர்ந்திருத்தலைக் காண்டலியலாது. மெய்யெழுத்து தனக்குரிய புள்ளியை இழந்த நிலையில் காட்சிதரும். புள்ளியை இழத்தலோடு தனக்குரிய அரை மாத்திரையையும் இழந்து அகரத்துக்கு உரிய மாத்திரையையே ஏற்று நிற்கும்.

இறைவனைப் புணர்ந்த உயிரும் அறியாமையாகிய இருளை (மெய்யெழுத்து தனக்குரிய புள்ளியை இழந்தல் போல) இழந்து உயிர்க்கருவிகள் யாவும் சிவக்கருவிகளாக

(மெய்யெழுத்து தன் அரை மாத்திரை நீக்கம் பெற்று உயிர்க்-குரிய ஒரு மாத்திரையே ஏற்று நிற்பது போல) மாறி நிற்கும் என்க.

xi) ''ல்'' என்பது மெய்யெழுத்து. இது தானாக நின்று பொருள் உணர்த்தாது அதனோடு அகரம் புணர்ந்து 'ல' என்னும் உயிர்மெய்யெழுத்து தோன்றுகிறது. இதுவும் தானாக நின்று பொருள் உணர்த்தாது அது அகரத்தைச் சார்ந்து ''அல்'' எனவும் ''அல'' எனவும் ஆகிப் பொருள் தரும். உயிரில் இறைவன் உறைகின்றான். உயிர் செயல் படுகிறது. ஆனால் அறியாமையின் காரணமாகத் துன்பமே விளையும். வேறு நற்பயன் உண்டாகாது. அவ்வுயிர் இறைவனைச் சார்ந்து நின்றாலே அறிவு விளங்கி இன்பம் விளையும்.

xii) ''க'' உயிர்மெய் எழுத்து. ககர மெய்யும் அகர உயிரும் கூடியது. இதனை நாம் ஒலியாலே உணர்கிறோமே அல்லாமல் வரிவடிவமாகிய காட்சியால் அன்று. அதுபோல உலகுயிர்களில் இறைவன் கலந்திருப்பதை ஆகம அளவை-களால் உணர்கின்றோம். ககரம் என்னும் உயிர்மெய்-யெழுத்தில் அகரத்தைக் காண வேண்டுமாயின் ககர மெய்-யையும் அகரவுயிரையும் பிரித்தல் வேண்டும். அங்ஙனம் க் + அ என்று நிற்கும். அதுபோல உலகுயிர்களில் புணர்ந்துள்ள இறைவனைக் காண்டல் வேண்டுமாயின் மெய்யாகிய உலகிலிருந்து நம்மைப் பிரித்து நின்றால் இறைவன் காட்சிப்படுவன். உலகைப் படைப்பவனே அதனை ஒடுக்குகிறான். ஒடுங்கியவனிடத்திருந்தே உலகம் மீட்டும் தோற்றம் கொள்ளுகிறது. இது கருதியே சங்காரகாரணனே முழுமுதல்வன் என்கிறது சிவஞான போதம்.

இக்குறளில் உலகு உண்மையும், அதனால் உயிர்கள் உண்மையும், இறையுண்மையும் கூறினமையானே உலகுக்-குக் காரணமான மாயையையும் கூறினார் என்று அறிக.

உயிர் என்றொரு தனித்தபொருள் இல்லை என்பார்க்கும் திருக்குறளுக்குர் யாதொரு தொடர்பும் இன்று. ''புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு'' எனவும் ''குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே உடம்பொ டுயிரிடை நட்பு'' எனவும் திருக்குறள் உயிருண்மையைத் தெளிவாக அறிவுறுத்துதல் காண்க.

11. ஈண்டுச் சைவசித்தாந்தக் கருத்துக்கள் அன்றோ திருக்குறளின் உட்கிடையாகக் கூறப்படுகின்றன! திருக்குறள் பொதுமறை அன்றோ எனின் திருக்குறள் எப்படிப் பொதுமறையாமோ அதுபோலவே சைவசித்தாந்தமும் உலக மக்கள் உய்தி கருதி எழுந்த பொது மறையேயாம். மதப்பற்றினால் நடுநின்று உண்மையுணராத பிறர் ஏலாமையால் அது தனித்தொரு குழுவினர்க்கே உரிமையாகாது. பிறாது உள்ள முதிர்ச்சிக்குத் தக அந்நூலும் உரிமையாம். மற்றும் பிறநூல்களை 'அவன் ஓத்து' என்று கூறிவிட்டுத் திருக்குறளை மட்டும் 'எம் ஓத்து' என்று போலி உரிமை கொண்டாடுவார் அந்நூற்கண்வரும் 1330 குறள்களையும் உடம்படுவரோ? அன்னோர் சில குறள்களை அலைத்துப் பொருள் கண்டு சலித்து நழுவுவரால். திருக்குறள் கூறுவது தம் சமயக் கருத்தே என்று ஆய்ந்து கண்டு அந்நூலைப் போற்றிக் கொள்வது சைவ சித்தாந்தம் மட்டுமே என்க. சில எடுத்துக் காட்டுகளைத் தருவாம்

அ) ''சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் என்றமையால்
சார்புணர்தல் தானே தியானமுமாம் - சார்பு
கெடஒழுகின் நல்ல சமாதியுமாம் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று''

(திருக்களிற்றுப்படியார்)

எனவரும் வெண்பா ''சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின் மற்றழித்துச், சார்தரா சார்தரு நோய்'' என்னும் குறளின் விளக்கமாதல் காண்க. மேலும்

ஆ) தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவரென்று – நிலைத்தமிழின்
தெய்வப் புலமைத் திருவள் ளுவர் உரைத்த
மெய்வைத்த சொல்'' (நெஞ்சுவிடுதூது)

இ) வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்
வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது - வேண்டினது
வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுவன் பால்
(திருக்களிற்றுப் படியார்)

இவ்வெண்பா ''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது, வேண்டாமை வேண்ட வரும்'' என்னும் திருக்குறளின் விளக்கமாதல் ஓர்க.

ஈ) பற்றை யறுப்பதோர் பற்றினைப் பற்றிலப்
பற்றை யறுப்பரென் றுந்தீபற
பாவிக்க வாரார் என் றுந்தீபற (திருவுந்தியார்)

மேற்பாடல் ''பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு'' எனும் திருக்குறட்கருத்தாதல் காண்க. மேலும் வருவனவற்றை ஆய்ந்து காண்க. இங்ஙனம் திருக்குறளை முழுவதும் ஏன்று கொள்வது சைவ சித்தாந்தமாகிய ஒரு சமயமேயாம் என்க. திருக்குறள் கூறும் முடிபுகளே சைவசித்தாந்தத்துள் கூறப்படுகின்றன. இறை, உயிர், தளை என்னும் மூன்றையும் ஆய்ந்து அவற்றின் உண்மைகளைச் சிறந்தெடுத்து விளக்கும் சைவசித்தாந்தம் தமிழ்நாட்டுக்கே அல்லது தமிழரில் சைவருக்கே உரிய ஒன்று எனல் ஒவ்வாது, அஃது உலகிலுள்ள மாந்தர் அனைவரும் தழுவி ஒழுகுதற்கு உரியதே என்க. இஃது என் சமயம் அஃது உன் சமயம் என்னும் பற்றை ஒருவி நடுவுநிலை நின்று உண்மை யுணர்ந்து உய்தி பெற விழைவார்க்குச் சைவ சித்தாந்தமே மனநிறைவையும் மெய்ந்நெறியையும்

தரவல்லது என்பது உண்மையே அன்றி வெறும் புகழ்ச்சி அன்று என்க.

ஆதிபகவன் முதற்றே உலகு என்றதனால் இக்குறள் தன்வயத்தனாதல் என்னும் இறைவனின் குணத்தை உணர்த்திற்று. இம்முதற்குறள் கடவுளுண்மை அறிவுறுத்திற்று என்க.

## 9 வாலறிவன்

1. இறை, உயிர், தளை என்னும் முப்பொருள் உண்மையைத் திருவள்ளுவர் முதற்குறளில் உணர்த்தினார் என்பது கண்டாம். தளையாகிய ஆணவ மலம் இருள் எனப்படும். அவ்விருள் மூடுண்டிருக்கும் உயிர் தன் அறிவை இழந்து நிற்கின்றது. உயிர்கள் தம்மையுணர்ந்து தலைவனையும் உணர அறிவு விளங்க வேண்டும். அது கருதியே இறைவன் உயிர்களுக்கு உடம்புகளையும், கருவிகளையும் உலகையும் படைத்துள்ளான். அவற்றின் உதவியால் அறிவாகிய ஒளி தோன்றும். முதலில் சிறிதே வெளிப்படும் அவ்வொளி பின்னர்ச் சிறிது சிறிதாகப் பெருகி எங்கும் பரந்து ஒளி செய்யும் தகைமைத்து. முதலில் உயிர்கள் கல்வியாலும் பட்டறிவாலும் பெறும் அறிவு சிற்றறிவேயாம். அஃது இறைவனைச் சாரச் சார பேரறிவாகும். எனவே ஒருவர் பெற்ற கல்வியின் பயன் கடவுளைத் தொழுதல் என்று ஆசிரியர் இரண்டாவது குறளில் உணர்த்துகின்றார்

''கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்''

இக்குறளுக்குப் பரிமேலழகர் பகரும் உரையாமாறு:

''எல்லா நூல்களையும் கற்றவர்க்கு அக்கல்வி அறிவான் ஆய பயன் யாது?' மெய்யுணர்வினை யுடையானது நல்ல தாள்களைத் தொழார் ஆயின் என்றவாறு.

''எவன் என்னும் வினாப்பெயர் என் என்றாய் ஈண்டு இன்மை குறித்து நின்றது. கொல் என்பது அசை நிலை. பிறவிப் பிணிக்கு மருந்து ஆகலின் 'நற்றாள்' என்றார்.

ஆகம அறிவிற்குப் பயன் அவன் தாளைத் தொழுது பிறவி-யறுத்தல் என்பது இதனால் கூறப்பட்டது.''

2. எல்லா நூல்களையும் கற்றவர்க்கு என்றார் பரிமேலழகர். நூல்கள் இருவகைப்படும் அவை கற்கப்படு-வன; கற்கப்படாதன என்பவாம். எனவே கற்கவேண்டும் எல்லா நூல்களையும் கற்றவர்க்கு என்பதே பரிமேலழகர் கருத்து ஆகும் வள்ளுவரும் 'கற்க கசடறக் கற்பவை' என்றே கழறினார். நல்லாசிரியரை அடுத்துக் கல்விநலம் கைவரப் பெறல் வேண்டும். பெற்றாலும் அதன் பின்னரும் நூல்களை ஓதுதல் வாழ்நாள்காறும் தொடர்தல் வேண்டும். இதனைத் திருக்குறள்

''யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு''

என்று கூறி ஒருவர் வாழ்நாள் காறும் நூல்களை ஓதும் இன்றியமையாமையை அறிவுறுத்துகின்றது. இக்குறட்குப் பரிமேலழகர், மணக்குடவர் காலிங்கர் என்போர் எந்நாடும் தம்நாடாம்; எவ்வூரும் தம்ஊராம் ஆகலின் ஒருவன் சாந்-துணையும் கல்லாதவாறு என்னை என்னும் கருத்தையே கூறி னர். எந்நாடும் தம்நாடு எனவே நாட்டின் சிறுபகுதியாகிய ஊரும் தம் ஊராதல் கூறாதே பெறப்படும். எனவே எளிய மக்கள் கூறும் வழக்குப்போல யாதானும் நாடு ஆமால் ஊர் ஆமால் என்பதென்னை? 'ஆல்' என்பது இருமுறை அசை நிலையாதல் என்னை? இவை கருதிப் பரிதியார் என்பார் ''எந்தத் தேசமேஆனாலும் தன் தேசமேயாம். மால் ஊராகிய வைகுண்டப்பதம் மறுமைக்கு ஆம். ஆதலால் சாமளவும் கல்வியே பயிலுவான்'' என்றுரைத்தார். இவர்தம் உரையும் சிறிதே ஒவ்வும் என்க.

கல்வியின் பயனால் உலகப் பொருள்களின் இயல்பு நன்கு விளங்கும். விளங்கலின் அவற்றின் மேல் செல்லும் ஆசை அறும். இதனையே திருவள்ளுவர் ''யாதானும் நாடாம்'' என்றார். எப்பொருளையும் விரும்பேம் என்றார். திருமந்திர முனிவர்

''ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை அறுமின்கள்
ஆசைப் படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்தம் ஆமே''

என்றருளினார். ''பற்றுக பற்றற்றான் பற்றினை'' என்பது தமிழ் மறையாகவும் ஈண்டு ஈசனோடு ஆயினும் ஆசை அறு-மின்கள் என்றது உலக நிலையில் ஆசை வையன்மின் வைப்பின் ஈசனுக்குக் கோயில் எடுத்தல், நகை முதலியன செய்தலில் கருத்தைப் புகுத்திப் பணப்பற்றை உண்டாக்கும். மேலும் தன்னையும் மீறி நேர்மையற்ற செயலுக்கு உடன் படவும் அதனால் மனத்தூய்மை கெடவும் நேரும். இங்ஙனம் சிறிதுசிறிதாக அறநெறி நின்றும் ஒருவரை விலகச்செய்து தீவினையையும் துன்பத்தையும் விளைக்கும். இக்கருத்தே பற்றி ''ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்'' என்றார். இதுவேறு. பற்றற்றான் பற்றினைப் பற்றுதல் வேறு என்று தெளிக.

ஆசையால் மயக்கம் உண்டாகும். மயக்கம் வெகுளிக்கு வித்தூன்றும். எனவே காமம், வெகுளி, மயக்கம் இம்-மூன்றானும் பிறவி பெருகும் ஆசை ஒழிந்தால் மயக்கமும் ஒழியும். இதனையே ''மால் ஊரா ம் ஆல்'' என்றார். ஈண்டு வரும் 'ஆல்' என்பது அசை. விருப்பு வெறுப்பு இல்லாத இயல்பைக் கூட்டி மயக்கத்தை மடிவிப்பது கல்வி ஆகும். மயக்கம் மாய்தலும் பேரின்பம் பிறக்கும். இத்துணை நலம் தரும் கல்வியை ஒருவர் வாழ்நாள் முழுதும் கற்றல் வேண்டும் என்று இக்குறள் அறிவுறுத்துகின்றது.

3. இதனுள் மக்களைக் கற்றவர் என்றும் இறைவனை வாலறிவன் என்றும் தேவர் வழங்குதல் உன்னித்து அறியற்பாலது. மக்களைக் கற்றவர் என்பதால் இயற்கை உணர்வின்றிச் செயற்கையாய கல்வியறிவு பெற்றவர் என்பதும் அஃதும் 'கற்றனைத் தூறும் அறிவு' என்பதனால் குறையறிவே யன்றி நிறை அறிவு அன்று என்பதும் பெற வைத்-தார். கல்வியால் பெறுவது செயற்கை அறிவே என்பதனை "நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றும் தன், உண்மை அறிவே மிகும்'' என்பதனான் உணர்க. இறைவனை வாலறிவன் என்பதால் அவன் இயற்கையுணர்வினன் ஆதலும் முற்றும் உணர்தலுடைமையும் பெறுதும். இறைவன் வாலறிவன் எனவே மாந்தர் வாலாமையாகிய மாசு உடைய அறிவினர் என்பதும் பெறவைத்தார்.

வாலாமை கூடிய அறிவினர் எனலால் அன்னோர் நூல்களை உணரும் முறையும் வேறுபடும். குறிப்பாக முதல் நூல்களாகிய வேதங்கள் தம்மை அணுகுவார் உள்ளத்திற்கு ஏற்பவே விளங்கி நிற்கும் என்பதைப் பாம்பன் குமரகுருதாசப் பெருமானார்,

''முட்டி லாதபுற் கலர்தமக் கந்தநன் மறைகள்
கிட்டு மேல் அவை மாறுப டாப் பொருள் கிளைக்கும்
துட்டு ளார்க்கவை கிடைப்பின டாப்பொருள் தோன்றக்
கட்டும் காதைக்கும் ஆம் இதை ஓர்திஎன் கருத்தே

என்று உணர்த்துதல் அறிக. பொருள்.'' குற்றம் இல்லாத மாந்தருக்கு வேத ஆகமங்கள் எனப்படும் நன்னூல்கள் கிடைப்பின் அவை நேரிய பொருளை உணர்த்தும். நெறி-யின் நீங்கியவருக்கு அவை கிடைப்பின் அடாத பொருள் விளக்கி அவர் கட்டும் கதைக்கும் ஆகும். என் கருத்தே! இந்த உண்மையை அறிவாயாக'' எனவாம் இதே உண்மையைச் சேலம். சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் என்பவர்

''இவ்வாறான வாழ்க்கைக்கு வேண்டும் ஞானம் நூல்களைப் படிப்பதனால் மட்டும் உண்டாகாது. அவைகளில் சொல்லப்பட்ட விஷயங்கள் விளங்குவதற்கு வாழ்க்கையில் சீலமும் பக்தியும் பெற்றிருக்க வேண்டும். இல்லாவிடில் விளங்கிய மாதிரி தோற்றம் காட்டுமே ஒழிய உண்மையில் 'விளங்காது''.

என்று ''அற்நூல்கள்'' என்னும் தம் நூலில் கூறுதலையும் உணர்க.

4. கற்க வேண்டும் நூல்களை நெறியறிந்து கற்க வேண்டும். அந்நெறியை ''ஒலியே எழுத்து ஆகிறது. எழுத்தே சொல் ஆகிறது. சொற்களே சொற்றொடர் ஆகின்றன. சொற்றொடர்களே பாட்டு ஆகின்றன. பாட்டுக் கூட்டமே புத்தகம் ஆகிறது. இதனைச் சாத்திரம் என மதிப்போன் தொடக்கம் யாதாய் இருந்தது எனக் கவனிப்பவனாய் இல்லை. இத்திற வழக்கப் பேழ்வாய் முதலை அவன் முதலிய உலகரை விழுங்கிவிடுகிறது. புத்தகங்களுள் முழுப் பொய்யும், பொய் கலந்த மெய்யும் அறியாமையும் இருத்தல் கூடுமாகலின் அனைத்தும் மெய் எனக் கோடலும் கூடாது.'' என்று பாம்பன் குமரகுருதாச அடிகளார் அருளுதல் காண்க. நூல்கள் அறிவை விளக்கவன்றோ எழுந்தன! அவற்றுள் அறியாமை, பொய் முதலிய குற்றங்கள் தங்கியிருத்தல் என்னையெனின் உரைப்பாம். எந்நூலாயினும் அந்நூல் ஆக்குவோனது பண்பையே சார்ந்திருக்கும். எனவே நூலாசிரியனுக்கு அறியாமை இருத்தல் கூடாது. ஆனால் ''அரியகற் றாசற்றார் கண்ணும் அறியாமை உளவாதல் இயற்கையாம். எனவே நூலாசிரியரின் அறியாமை நூலின் கண் தங்குதற்குத் தடை யாதும் இன்றே என்க உலகில் உழவு, கைத்தொழில், வணிகம், அரசுப்பணி, கூலிவேலை முதலியன புரிவார் உளர். இவருள் நல்லவரும் இருப்பர்; தீயவரும் இருப்பர். இதுபோலக் கற்றவரிலும் பண்புடை-

யோரும் இருப்பர்; கயவரும் இருப்பர். இவர்தம் நூல்களில் மெய்யும் இருக்கும், அறியாமையும் இருக்கும், பொய்யும் இருக்கும் என்று அறிக.

ஓரிரண்டு எடுத்துக்காட்டுக்கள் தருவாம்.

அ) வியாசர் பாரதம் பாடினார். விநாயகர் அதை மேரு மலையில் தம் கோட்டால் எழுதினார். இப்படி பாரதத்துக்கு ஒரு பெருமை கற்பிப்பர். இக்கதையை வில்லிபுத்தூராழ்வாரும், ''நீடாழியுலகத்து'' என்னும் பாடலில் கூறுகின்றார். விநாயகப் பெருமான் ஓங்காரக் கடவுள். பாரதமோ மும்மலமும் நிறைந்த மக்கள் வரலாறு. அதனைக் கேட்பவர் எய்தும் பயனும் உயர்வுடைத்து அன்று. எனவே அது வீடு பேறு கூட்டுவிக்காது. அக்கதையில் வருவோரில் ஒருவரேனும் வீடுபேறு கூடினாரல்லர். இத்துணைச் சிறுமையுடைய ஒரு கதையை விநாயகர் எழுதினார் என்பது தீவினையே தரும். வியாசருக்குப் பெருமை தேடித் தரும் வேணவாவான் அறிவு நன்கு விளங்காத ஒருவர் விநாயகரைச் சிறுமை செய்யும் இக்கதையைப் புனைந்துள்ளார் என்று அறிக.

ஆ) காட்டிலே இருந்தகாலை ஒரு நாள் இராமன் சீதை மடியில் தலைவைத்துத் துயின்று கொண்டிருந்தான் அக்காலை இந்திரன் மகன் சயந்தன் என்பான் காக்கையுருவில் வந்து சீதையின் முலைகளைக் கொத்தலாயினான். (பாவம்! சீதைமேல் எத்தனைபேர் ஆசைப்படுவரோ? அவள் திருமகளாய் வைகுந்தத்து இருந்த காலை சயந்தன் பார்க்கவில்லை போலும்) குருதி வடிந்தது. அதனால் துயிலுணர்ந்த இராமன் சினம் கொண்டு ஒரு கணையை விடுத்துக் காக்கையின் ஒரு கண்ணைப் பறித்து விட்டான். அன்று முதல் காக்கை இனத்துக்கு ஒரே கண்மணிதானாம். இப்படி ஒரு கதை. இதைக் ''காகம் முற்றும் ஓர் கண்ணில வாக்கிய வேக வென்றி'' என்று கம்பராமாயணம் புகழும்.

இராமாயண காலத்துக்குமுன் சூரபதுமன் இருந்தான். அவனால் சயந்தன் துன்புற்றான். அப்போதே

''தண்டேன் துளிக்கும் தருநிழற்கீழ் வாழ்க்கை வெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம் வான்பதமும் கோதென்றே
கண்டேன் பிறர்தம் பதத்தொலைவும் கண்டனனால்
தொண்டேன் சிவனேநின் தொல்பதமே வேண்டுவனே''

என்று முறையீடும் உள்ள முதிர்ச்சியுடையவனாய் இருந்தான். இளைய பரமசிவன் சூரனாற்றலை மாற்றி இந்திரனுக்கு முடிசூட்டினான். அஞ்ஞான்றும் சயந்தன் ''கொன்னுயிர்மானவ அரசர் தெருள்விபுதர் விழைந்திடுமிக் கோல வாழ்வில் என்னுய வூழினியிருக்க ஒட்டாதுன் இணையடிக்கீழ் இருத்தியாளே'' என்றே விண்ணப்பித்தான். அவன் காக்கையாக வந்து சீதையின் முலைகளைக் கொத்தினான் என்பது சிறுமகார் கூற்றேயாம்.

பாம்பன் அடிகளார் ஒரு காக்கையைப் பிடித்து ஆராய்ந்து பார்த்ததில் ஏனைய பறவைகளுக்கு இரு கண்களுக்கு இடையில் ஓர் எற்புத் தடையுளதாதல் போலவே காக்கைக்கும் இருத்தலையும் எனவே ஒரு கண்மணியே உளது எனல் உண்மையன்றாதலையும் காக்கைக்கு இரு கண்மணிகள் உளவாதலையும் காக்கை தலையைச் சாய்த்து நோக்கும் இயல்பிற்று எனலையும் கண்டறிந்தார். இந்த இராமாயணக் கதையை நம்பி அகராதி காக்கை ஏகாட்சம் எனப் பெயர் சூட்டியதும் தவறேயாம். இக்கதையை நாலாயிரப் பிரபந்தமும்

''சித்திரகூ டத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட
அத்திரமே எடுத்தெறிய அனைத்துலகும் திரிந்தோடி
வித்தகனே இராமாவோ நின்அபயம் என்றழைப்ப
அத்திரமே அதன்கண்ணை அறுத்ததும்ஓர் அடையாளம்''

என்று இக்கதையைக் கூறுகின்றது. வைணவர் தத்துவ நூல்களோ ''காகசூர்ப்பணகை'' என்று இக்கதையைக் கூறிக் களிக்கின்றன இத்தனை ஆரவாரத்துக்கும் அசை-யாது காக்கை இரண்டு கண்களோடு விளங்கி வாழ்கின்றது.

நம்பியாண்டார் நம்பி திருமுறைகளை வகுத்த காலைத் திருக்கோவையார் எட்டாம் திருமுறையாகக் கொள்ளப்பட்ட-தற்குச் சான்று இல்லை. பின்னாளில் பெற்ற சிற்றின்பமே பேரின்பம் என்று கொண்ட உயர்ந்த உள்ளத்தார் எவரோ அந்நூலையும் மாணிக்கவாசகப் பெருமான் அருளியதே என்று கொண்டு எட்டாம் திருமுறையாகக் கொண்டாடிவரும் மர-பையும் ஏற்படுத்தி விட்டார். அந்நூலும் காகத்துக்கு ஒரு கண்மணி உண்மையை நொடிக்கின்றதே!

இதனால் நூல்களில் பொய், வஞ்சர், அறியாமை குடி கொண்டிருக்கும் என்பது தெளிக. மற்றும் இவர் அருளாளர்; இவர் சொல் மேற்கோள் இன்றியும் ஏற்புடைத்தாகும் என்னும் மடமைக் கோட்பாட்டினின்றும் விலகி எந்நூலா-யினும் ஆய்ந்து உண்மை என்று கண்ட பிறகே ஏற்றல் அறிவுடையார் தடையாகும். அருளாளராயினும் அவர் நூல்-களில் உலகில் வழங்கிவரும் எழுத்துக்கள் பயிலுமாறே அவர் காலத்து வழங்கி வந்த செய்திகளும் பயிலும் என்பது உணர்தல் வேண்டும்.

இ) வடமொழி அறிவின்மையால் அதில் வரும் செய்தி-களைத் தாமே உணர்தற்கு இயலாமல் பிறர்வாய்க் கேட்டுத் தமிழில் நூல்செய்த புலவன்மாரும் உளர். வேதம் உயிர்க் கொலையை விளம்பும். அதன் பாடியமாகிய ஆகமம் அதை மறுக்கும் எனக் கூறும் சைவரும் உளர். வேதம் பலதெய்வ வழிபாடு கொண்டது எனவும் ஆகமம் ஒரு தெய்வ வழிபாடு கொண்டது என்பாரும் உளர். வடமொழி மிருதிகள் சுமார்த்-தர்க்கு உயர்வு கூறுவதுபோல ஆகமம் சைவப் பார்ப்பனர்க்கு

உயர்வுகூறி ஏனையரை இழித்துரைக்கும் என்பதை அறியாதாரும் உளர் இங்ஙனம் வடமொழியறிவின்மையால் தமிழ்ப் புலவன்மார் இழைத்த பிழைகள் பல.

(மாணிக்கவாசக) ''அடிகள் ஆதிசைவ மரபினர் என்று 'வடமொழி ஆலாசியம் கூறியதைச் சற்றும் உற்று நோக்காது அமாத்திய குலம் என்று தமிழ் நூல்கள் புகன்றமை வியப்பை விளைக்கின்றது. வடநூலினை நேரே கற்று அதனைத் தமிழிலே மொழிபெயர்க்காது வடமொழி வாணர் கூறுவதைக் கேட்டுத் தமிழ் நூலுடையார் தாம் கூறும் கதையை எழுதினராதல் வேண்டும்'' என்று கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் மணிவாசகப் பெருமான் வரலாறு என்னும் தம் நூல் பக்கம் 12-இல் திருவிளையாடற்புராணம் பற்றிக் கூறுதல் அறிக. பாம்பன் அடிகளாரும் திருவிளையாடற்புராணத்துத் தங்கும் உண்மையின்மையை

''இந்த ஆலாசிய மகாத்மியம் காந்தபுராணத்ததென அம்மகாத்மியத்தில் எழுதப்பட்டு இருப்பினும் அந்தப் புராணத்து யாண்டேனும் உளது அன்று. ஒல்லை நூலாய் உள்ள அப்புராணத்தின்கண் அம்மகாத்மியம் என்பது இருத்தற்கு இடனும் இன்று. என்னை? பிற்காலத்த திருவாதவூரடிகளது சரித்திரமும் திருஞானசம்பந்தப் பெருந்தகையினது சரித்திரமும் அதனுழை எழுதப்பட்டிருக்கின்றமையின்'' என்று உணர்த்துதலும் காண்க.

ஈ) ஒருவர் தாயுமானவர் பாடலை அச்சிட்டார். அதில் தாயுமானவர் பிழம்புருவாய்ச் சென்று மறைந்து விட்டார் என்று வரைந்து வைத்தார். தாயுமானவர் சமாதி இராம நாதபுரத்தில் உண்மையை அவர் அறிந்திலர் போலும்! அவரைப் பாம்பன் அடிகளார் கண்டு அவர் கூற்றுக்குச் சான்று என்னை என்று வினவிய காலை அவர் அப்படித் தானே இருக்க வேண்டும் என்று விடை கூறினர். இங்ஙனம் அறியாமையால் நூல்களில் தங்கும் அவலங்கள் பல,

உ) தமிழ் நூல்களில் இடைச் செருகல்கள் நீக்கமின்றி நிறைந்திருக்கின்றன. நூல் கற்கப்புகுவார் இவ்வுண்மையை மறத்தல் **ஆகாது**.

ஊ) சார்பு பற்றி எழுதும் உரையாசிரியன்மாரும் உளர். இத்தகைய இடர்க்கடல்களை நீந்தி உண்மையுணர வேண்டும். ஆராய்ச்சியில் எந்நூலும் முழுவதும் குற்ற மெனல் அடாது. எந்நூலும் குற்றமே தங்காதது எனலும் ஒவ்வாது. எனவே நீர் ஒழியப் பாலுண் குருகின் பரிசில் குற்றமும் குணமும் நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளலே நன்னெறி ஆகும்.

அறிவு இன்பத்தைத் தரும். அறியாமை துன்பத்தைத் தரும். மக்கள் இன்பத்தை அவாவுகின்றனர். அவர் பெறும் இன்பம் அவர் அறிவின் அளவால் வேறுபடும். கல்விநலம் வாய்ந்த ஒருவன் வாழ்வின் இன்பத்துக்கு உரிய நெறி களையும் கருவிகளையும் எளிதில் அறிந்து பயன்கொள்ளு கின்றான். துன்பத்திலும் இன்பம் காணும் வழியை ஆராய்ந்து பின்பற்றுகின்றான். கல்விநலம் வாயாதவன் எத்துணைச் செல்வனே ஆயினும் அறியாமையின் விளை வால் அவன் அடையும் இன்பமும் சுருங்கியதாகவே உள் ளது. மேலும் கல்வியே இன்பம் பயப்பதும் **அன்றோ!** ஒருவர் எத்துணைக் கற்றாலும் குறையறிவினரே ஆவர். எனவே தான மாந்தர்க்குக் ''கற்றனைத்தூறும் அறிவு'' என்றார் வள்ளுவர். இதனால் ஒருவரை அறிஞர் என்பதும் பேரறிஞர் என்பதும் புகழுரைகளாகவே முடியும் என்று அறிக.

இவ்வுலக வாழ்வு சிற்றின்பம். இறையுலக வாழ்வு பேரின்பம். அறியாமை நீங்கி அறிவு வண்ணமாய் நிற்பார் எய்துவது பேரின்பம். பேரின்பம் அருள்பவன் இறைவன். அவனை ''வாலறிவன்'' என்கின்றார் வள்ளுவர். பரிமே

லழகர் அப்பெயருக்கு ''மெய்யுணர்வினை யுடையான்'' என்று பொருள் கூறினார். வடநூல்கள் சத்து எனவும் சித்து எனவும் வழங்குதல் இம்மெய்யும் உணர்வுமே ஆம். ஆகலின் ஏனையர் அறிவு மெய்யொடுபடாததும் வாலாமையுடையதும் ஆம் என்பது பெறப்படும். எனினும் அவன் திருவடியைப் பற்றி அவன் திருவருளில் தோய்ந்து நிற்பார் தூய நிறை யறிவினர் ஆவர். உயிர் தான் சார்ந்ததன் வண்ணமாய் நிற்பது. எனவே தான் இறைவன் திருவடிப் பற்றையுடை யோர் ''கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர்'' என்று நக்கீரர் பெருமானால் போற்றப்பட்டார். பசுத்துவத்தொடு சார்ந்து பசுவாய் இருந்த உயிர் சிவத்தொடு சேர்ந்து சிவமாய பரிசு இஃது.

வாலறிவு என்பது பிற விளக்கம் வேண்டாது தானே உணரும் இயற்கை உணர்வு. வாலாமை உடைய அறிவு என்பது கருவிகள் கொண்டு உணரும் அறிவு. பரிமேலழகர் 'ஆகம அறிவின் பயன் அவன் தாளைத் தொழுது பிறவி யறுத்தல்' என்றார். மக்களாய் வாழ விரும்புவார் கற்க வேண்டியவற்றைக் கற்றுக் கடவுளின் திருவடி தொழுதல் வேண்டும். அதனால் பிறவித்துயர் நீங்கலாம். இது செய்யா தார் பிறவியும் கல்வியும் பயனற்றனவேயாம். எனவே தான் திருவள்ளுவர் 'கற்றதனால் ஆய பயன் என்கொல்' என்றார். கல்வியறிவு பெற்றும் உள்ளம் முதிராமையாலோ முன்செய்த வினைப்பயனாலோ இறைவன் நற்றாளைத் தொழ நாணி நன்மைக்குப் புறம்பினராவார் தொகை நாளுக்கு நாள் கூடி வருகிறது. இவரெல்லாம் மக்கட் பிறவியின் பயனை இழந்த வரேயாவர்.

மாமரப்போலி இருப்பை, வில்வப்போலி விளா, கவுதாரிப் போலி காடை, குதிரைப் போலி வேசரி, தெய்வப் போலி மக்கள், மக்கட் போலி குரங்கு என அறிக. மக்கள் தேவப்

போலி என்றமையால் உயிர் கடவுட்போலியாதல் அறிக. மக்கள் அத்தேவர்களுடைய வடிவு முதலான பேற்றைக் கூடுதல் தேவர்கட்கு உவப்பான அறங்களைப் புரிதலான் கூடும். அன்னணம் புரிமாந்தர் இம்மையில் தானே மக்கள் தன்மையொடு தேவர் தன்மையும் சிவணி நிற்றலான் அவர் எக்குடிப் பிறந்தாரே ஆயினும் நற்குடிப் பிறந்தாரராய்ப் 'பூசுரர்' எனப்படுவர். அவர் இருக்கையும் ''பூசுரர் ஆலயம்'' எனப்படும். இங்ஙனம் ஆகாதார் மக்கட்போலியாம் குரங் கோடு ஒப்ப வைத்து எண்ணப்படுவர். அவர் இருக்கையும் அங்ஙனமேயாம். இறை வழிபாடு தேவநிலையைக் கடந்த கடவுள் நிலைக்கு உய்க்கும். இதற்கு உயிர்களை நெறிப் படுத்துவது கல்வியேயாம் என்க.

சிலர் கல்விநலம் சிறப்ப வாய்ந்திருப்பர். இருப்பினும் நாத்தளர்ந்து, பல்கழன்று, கோல் ஊன்றி நடைதளர்ந்து உடம்பு கழியுங்காறும் மனை, மக்கள், ஒக்கல் ஆகிய பற்றும் செல்வத்திலும் இவ்வுலக இன்பத்திலும் அவாவும் முறுகிக் கிடப்பர். எனினும் பெற்றம் புலித்தோல் போர்த்தாங்குத் துறவுக் கோலம் கொண்டு பற்றற்ற துறவிகள் போல் உலவித் திரிவர். இன்னோர் தம் செயற்கு ஒரு நொண்டிக் காரண மும் நுவல்வர். காடு, மலைபுக்குழலல் வறட்டுத் துறவு என்றும் இல்லிலிருந்து பற்றற்ற நிலையில் வாழ்தலே சாலச் சிறந்தது என்றும் அகப்பற்று அற்றார்க்குப் புறப் பற்று என்செய்யும் என்னும் இங்ஙனம் வாழ்தல் நற்றமிழர் நெறி என்றும் இதற்குத் திருத்தொண்டர் புராணத்துறும் வரலாறுகளே கரியாய் விளங்கும் என்றும் கூறி இறுமாப்பர். திருத்தொண்டர் புராணத்துறும் அடியார்களின் அடிப்பொடி ஒன்றுக்கேனும் இன்னோர் இணையாவர்கொல்? ''பார னைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல், ஆரும் துறக்கை அரிதரிது'' என்று தாயுமானவர் போற்றி னார் அன்றோ? அப்பட்டினத்துப் பிள்ளையாரே ''வாளால்

மகவரிந்து ஊட்டவல்லேன் அல்லேன் எனவும் மாது சொன்ன சூளால் இளமை துறக்க வல்லேன் அல்லேன் எனவும் தொண்டு செய்து நாளாறில் கண்ணிடந்து அப்பவல்லேன் அல்லேன் எனவும் புகழ்தலை இன்னோர் அறிந்துளரா என்றே ஐயம் எழுகின்றது இத்தகையோர் கற்றும் கல்லாதவரே என்க. ''கற்றல் கேட்டல் உடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்''துவர் என்று ஆளுடைய பிள்ளையார் அருளிச் செய்தார். இக்காலத்துக் கல்வி இக்குறிக் கோளிலிருந்து நெடுந்தொலைவு விலகி வயிற்றுப்பரை வழி படும் தொழில் ஒன்றையே முதன்மையாகக் கொண்டிருத்தல் பெரிதும் வருந்துதற்கு உரியதாகும்.

''புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம் போக்குகின்றோம் அவமே'' என்று புத்தேளிரும் மக்கட்பிறவியை விழைகின்றனர். மக்கட் பிறப்பின் இத்தகு மாண்பை மாந்தர் உணராது வீண்படுகின்றனர் நாய், பன்றி முதலாம் விலங்குகளைப் போலவே உண்பதும், உறங்குவதும், குட்டி போடுவதும், ஓடுவதுமாக நாள் போக்கி மாந்தர் நமன்கைப் படுகின்றனர். இங்ஙனம் இழிவுறாது வாலறிவன் நற்றா-ளைத் தொழுதி தொழாயேல் நீ கற்றதனாலாய பயனைப் பெறாய் என்று வள்ளுவர் பெருமான் இக்குறளில் அறி-வுறுத்துகின்றார். அங்ஙனம் தொழுதலால் பிறவிப்பிணி நீங்கும். எனவே பரிமேலழகர் ''பிறவிப் பிணிக்கு மருந்து ஆகலின் நற்றாள் என்றார்'' என்று விளக்கினார். மணிவாசகரும் ''பிறப்பறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல்கள் வெல்க'' என்று அருளிச் செய்தனரால்

நாம் அவன் திருவடி பணிவோம். அவன் திருவடி நம் தலையில் படும் படலால் நம் ஊழ் அழியும். இதனை அருணகிரிநாதப் பெருமான் ''அவன் கால்பட்டழிந்ததிங் கென்றலை மேல் அயன்கையெழுத்தே'' என்று அருளினார்.

இங்ஙனம் தொழுதலை உணர்த்துவதே கல்வியாம். இதனை உணர்த்தாத கல்வி கல்வியாகாது. கல்வியால் செருக்கு உண்டாகாது; அழியும் என்க. அதனால் அவன் திருவடி கூடும். இதனை "யான் எனது என்னும் செருக்கு அற்று அவனது சீபாதத்தை அணையுமாகலான்" என்று மெய் கண்ட தேவரும் உணர்த்தியருளினார். அத்திருவடி அணைந்-தால் உயிர் சிவமாகும். "ஆயின் அந்த அறிவே வடிவாய் நிறைந்துள்ள பரமனை அடைந்த தன்மையும் ஆகும்" என்க. திருவடி வாழ்வு வேறு எதனாலும் எய்த முடியாத இறுமாப்பைத் தரும். தருதலைத் திருநாவுக்கரசு நாயனார் "சிறுமான் ஏந்திதன் சேவடிக்கீழ்ச் சென்றிறுமாந்திருப்பேன்" என்று அருளிச் செய்தார். பாம்பன் அடிகளார் "செக்கர்வேள் செம்மாப்பு எனவும் செக்கர்வேள் இறுமாப்பு எனவும் பெயர் வைத்து இரு நூல்கள் அருளியுள்ளார். அங்கணன் அம்மையே என்றழைக்கும் பேறுபெற்ற காரைக்காலம்மையார் அத்திரு-வடி வாழ்வையே வேண்டி நின்றார் என்பது "அறவா நீ ஆடும்போதுன் அடியின்கீழ் இருக்க" என வரும் சேக்கிழார் பெருமான் திருமொழியால் உணர்க.

கல்வியின் பயன் மெய்யுணர்ந்து வீடு கூடலே என்பதை இலக்கண நூலாரும்

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும் - மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதல்நூல் பொருள் உணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்"

என்னும் வெண்பாவைக் காட்டி அறிவுறுத்தலை நினைக. எனவே கல்வியின் பயன் கடவுள் அடிதொழுது கட்டறுத்து வீடு பெறலே என்பதை நம் முன்னோர் உணர்ந்து ஒழுகி வந்தனர். வந்தமை,

''உள்ளநிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்ற
வற்றால்
தெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்கழலில்
செறிவென்றே
கொள்ளுமுணர் வினில்முன்னே கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாய் என்றும் பயின்றுவரும் பண்புடையார்''

என்று சிறுத்தொண்டர் புராணத்தும் (4)

''செய்யுணிகழ் சொல்தெளிவும் செவ்வியநூல்
பலநோக்கும்
மெய்யுணர்வின் பயன் இதுவே எனத்துணிந்து
விளங்குஒளிர்
மையணியும் கண்டத்தான் மலரடிக்கே ஆளானார்''

என்று பொய்யடிமை இல்லாத புலவர் புராணத்தும் (1) சேக்கிழாரடிகள் உணர்த்தியருளலால் அறிக.

இன்பத்துக்கு வாயில் கல்வி. (கல்வியே ஒரு தனி இன்பத்துக்கு இருப்பிடமும் ஆம்). எனவே கல்வியின் பயன் இன்பத்தை அடைதலேயாம். இன்பத்துள் அழியா மாலைத்து வீடுபேறு. அதை ஊட்டுவது வாலறிவன் நற்றாள். எனவே இறைவனின் நற்றாளைத் தொழாதார் வாலாமை சூழறிவினராய் வாளா மாய்வர். கற்றிருந்தும் அன்னோர் கல்லாரேயாம்.

இக்குறளால் இறைவன் இயற்கை யுணர்வினனாதலும் முற்றுமுணர்பவனாதலும் உணர்க.

## 10. மலர்மிசை ஏகினான்

திருவள்ளுவர் இறைவன் உண்மையை முதற் குறளில் உணர்த்தினார். இரண்டாவது குறளில் அவ்விறைவன் திருவடி மலர்களைத் தொழுதலே ஒருவர் தாம் கற்ற கல்வி

யால் பெறும் பயன் என்னும் உண்மையை அறிவுறுத்தருளி னார். அங்ஙனம் அறிவுறுத்திய அவர் அவ்விறைவனை யாண்டு வைத்து வழிபடுவது மேன்மைத்து என்று மூன்றாவது குறளில் உணர்த்துகின்றார். அக்குறள் வருமாறு :

''மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.''

முதற்குறளில் ஆதிபகவன் எனவும் இரண்டாவது குறளில் ''வாலறிவன் நற்றாள்'' எனவும் இக்குறளில் மலர்மிசை ஏகினான் மாணடி எனவும் ஆசிரியர் கூறுகின்றார். இதனால் நாயனார் திருவுருவ வழிபாட்டுக் கொள்கையர் என்பது நனி விளங்கும். கடவுள் அருவநிலை மட்டுமே உடையவர் என்பாரும் கடவுள் மாயையில் சிக்கி உலகமாய் மாறித் துன்புற்று உழல்கின்றது என்பாரும் திருவள்ளுவருக்குப் புறம்பாவர் என்க.

நாத்திகத்தில் ஒரு காலும் கல்வியின் பயனாய் எய்திய கடவுளுணர்வில் ஒரு காலும் வைத்துக் கொண்டிருந்த சிறந்த புலவர் ஒருவர் சங்கநூல் உணர்ச்சியையே இழந்து விட்டுத் ''திருவள்ளுவரும் அவர் காலத்தவரும் அவர் காலத்துக்கு முற்பட்டவர்களும் யார் யாரை ஆதிபகவராகக் கொண்டிருந் தனர் என்று அறிய முடியாது'' என்று கூறித் தம் கற்பனை யால் ஆதிபகவர் என்பதோர் குழுவைப் படைத்து நிறுவ முயல்கின்றார். இஃது இரங்கத்தக்கதே. இனி இக்குறளுக்குத் தெள்ளு பரிமேலழகர் விள்ளும் உரையைக் காண்பாமாக.

''மலரின் கண்ணே சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தார் எல்லா உலகிற்கும் மேலாய வீட்டுல கின்கண் அழிவின்றி வாழ்வர் என்றவாறு.

''அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின்'' ஏகினான்

என இறந்த காலத்தால் கூறினார். என்னை? ''வாரார்க் காலத்து நிகழுங் காலத்தும், ஓராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி, இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்த பொருள என்மனார் புலவர்'' (தொல். சொல். 241) என்பது ஒத்து ஆகலின். இதனைப் பூமேல் நடந்தான் என்பதோர் பெயர் பற்றிப் பிறிதோர் கடவுட்கு ஏற்றுவாரும் உளர். சேர்தல்: இடைவிடாது நினைத்தல்.''

அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் என வரும் பரிமேலழகர் விளக்கம் பெரிதும் பாராட்டற்பாலது. சாந்தோக்கிய உபநிடதம் எட்டாம் பிரபாடகம் ''பிரமபுரம் எனும் இதிலே தகர புண்டரிக வீடு உள்ளது. இதிலே சிற்றம் பலம் (தகராகாசம்) உள்ளது. இந்த வெளிக்குள்ளே உள்ளது நாடற்பாற்று, அறியற்பாற்று'' என்று கூறுதல் காண்க. இது கருதியே ''புந்தியாய்ப் புண்டரிகத் துள்ளாய் போற்றி'' என்று அப்பர் பெருமானும் ''உள்ளப் புண்டரிகத்துறை புராணர்'' என்று புகலிப்பிள்ளையாரும் அருளிச் செய்தனர்.

இந்த உள்ளத் தாமரையில் எட்டு இதழ்கள் உள்ளன. இவ்விதழ்களில் மனம் தங்குங்கால் பல்வேறு செயல்கள் உண்டாகும். இதன் கிழக்கு இதழில் மனம் நிற்குங்கால் நற்சிந்தனையும் தென் கிழக்கு இதழில் மனம் தங்குங்கால் கடின சிந்தனையும், துயிலும், தெற்கு இதழில் மனம் நிற்குங் கால் பாவசிந்தனையும் தென்மேற்கு இதழில் மனம் நிற்குங் கால் கோபச்சிந்தையும் மேற்கு இதழில் மனம் நிற்கும்கால் காமவிருப்பமும் வடமேற்கு இதழில் மனம் நிற்கும்கால் அலைதரும் சிந்தையும் வடக்கு இதழில் மனம் நிற்குங்கால் அறம்சார் சிந்தையும் வடகிழக்கு இதழில் மனம் நிற்கும்கால் அறிவும் தாமரைப்பூவின் கொட்டையில் வேண்டுதல் வேண்டாமையின்மையும், பூந்தாதுவில் உயிருய்தி பற்றிய சிந்தையும் உண்டாகும் என அறிக. முகத்திற்கு நேராய் உள்ள இதழைக் கிழக்கு இதழாகக் கொள்க. சிந்தையின்

இயல்பு இவ்வாறாதலின் அதனைப் புடைபெயரவிடாது *தன்னகம் நிறுவிச் சிற்றம்பல வழிபாட்டில் (தகர உபாசனை* **யில்**) நிற்பார்க்குச் சிந்தையின் செயல் மடங்கும் என்க.

பரிமேலழகர் "அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின்" என்பதும் "ஏகினான்" என்பதற்கு இலக்கண விதி கூறியதும் ஆய்தற்பாலன. "விரைந்து சேறலின்" என்றதால் அன்பால் நினையுங்காறும் அவர் உள்ளக் கமலத் தின்கண் இலன் என்பதாயிற்று. இஃது அவனன்றி ஓர் அணுவும் (அணு : உயிர்) அசையாது என்னும் முதுமொழி யை முரணி நிற்கும். தைத்திரீயாருண சாகை நாராயணம் "*உலகத்தில் எஃது எஃது உள. இந்த எல்லாம் ஆன உலகம் ஈசனால் நிறைந்திருக்கப்பட்டு உள்ளது*" எனலை நினைவு கூர்க. உயிர் என்று உளதோ அன்றே இறைவனும் உயிரின் உள்ளத்தாமரைக்கண் எழுந்தருளினான் ஆவன். அஃது *எஞ்ஞான்று என அறுதியிட்டுரைக்க ஒண்ணாது*. அது பற்றி யே திருவள்ளுவர் 'ஏகினான்' என்று இறந்த காலத்தால் கூறினார்.

இனிப் பூமேல் நடந்தான் என்பதோர் பெயர் பற்றிப் *பிறிதோர் கடவுட்கு ஏற்றுவாரும் உளர் எனவரும் பரிமேலழகர் உரையைச் சிந்திப்பாம்.*

*திருவள்ளுவர் தாம் பற்றியுள்ள சமயம் இஃதென* வெளிப்படக் கூறினாரல்லர். தாம் கூறும் மொழிகளான் உய்த்துணருமாறு செய்கிறார். செய்தலால் தாம் வழிபடு கடவுள் இவன் என்பதும் வெளிப்படக் கூறினாரல்லர். ஆதியகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினான், வேண்டுதல் வேண்டாமையிலான், பொறிவாயில் ஐந்தவித்தான், இறை வன், எண்குணத்தான், அறவாழியந்தணன், தனக்குவமை *இல்லாதான் என்று கடவுளின் குணங்களைக் கூறியே குறிப்* பால் உணர்த்துகின்றார். இவையாவும் இறைவனின் பண்பு களாதல் தெளிக.

எனவே மலர்மிசை ஏகினான் என்னும் அருட்பண்பாம் காரணம் வேறு. பூமேல் நடந்தான் என்னும் சிறு தொழிற் காரணம் வேறு. இரண்டிற்கும் யானைக்கும் எலிக்கும் உள்ள வேறுபாடு உள்ளது. மலர்மேல் நடந்த சிறு தொழிலர் புத்தரும், அருகனும். நடத்தல் போதலையும் வருதலையும் குறிக்கும். ஏகுதல் என்பது சென்று சேர்தலை மட்டுமே குறிக்கும். பூமேல் நடந்த அருகக் கடவுளையோ புத்தரையோ குறித்தல் வேண்டுமேல் மலர்மேல் நடந்தான் என்று ஐயமறக் கூறப்பட்டிருக்கும். நடத்தலைக் குறியாது போதலை மட்டுமே உணர்த்தும் ஏகினான் எனக் கூறப்பட்டிராது. ''சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை, வெல்லும் சொல் இன்மை யறிந்து'' என்று சொல்லுக்கு இலக்கணம் வகுத்த ஆசிரியர் நடந்தான் என்ற சொல்லுக்கும் ஏகினான் என்ற சொல்லுக்கும் உள்ள வேறுபாடு அறியார் என்பது நகைப்பூட்டும். எனவே மலர்மிசை ஏகினான் என்பது பூமேல் நடந்தான் என்னும் பொருளைத் தாராது.

பூமேல் நடத்தல் இறைவனுக்கு உரிய இலக்கணங்களில் ஒன்று அன்று. அஃது இலக்கணமே என வற்புறுத்தப் புகினும் பூமேல் நடத்தலால் அக்கடவுட்கு எய்தும் தனிச்சிறப்பு ஒன்றும் இன்று. அன்றியும் அதனால் உயிர்கட்குறு நலமோ யாதும் இன்று. இப்படிப் பயனற்ற ஒரு தொழிலைப் புகழ் வேட்டுச் செய்வோர் கடவுளாகார். மற்று அக்கடவுளினும் பூ பெரிதெனப்பட்டு அவன் வடிவமும் ஓர் எல்லைக்குட்பட்டுச் சிறுமையும் அழிவும் எய்தும். இறைவன் விண் நிறைந்து மண் நிறைந்து மிக்காய் விளங்கொளியாய் எண் இறந்து எல்லை இல்லாதவன் ஆவன். இவ்விலக்கணம் இல்லாதான் கடவுள் எனப்படாது உயிர் எனவே படுவன். ஓரிடம் சேர்தல் வேண்டுமேல் அவன் நடந்தன்றிச் சேரமுடியாது என்றும் முடியும். இத்துணை அவலங்களோடு அவன் பிறப்புக்கு உட்படும் ஓர் உயிரே என்றும் முடியும். இவ்வுண்மைகளை உணராமல் திருவள்ளுவர் பூமேல் நடந்த ஒருவனைப் போற்றினார்

எனல் புன்மையாயே முடியும். சமணர் என்று கருதப்படும் காலிங்கரும் மலர்மிசை ஏகினான் என்பதற்கு ''எல்லாருடைய நெஞ்சத் தாமரையிலும் சென்று பரந்து உள்ளான்'' என்று கூறி ''எவ்வுயிர்க்கும் உயிராய் நின்ற இறைவன்'' என்று விளக்குதலும் நினைதற்பாலது.

இறைவனைப் புறப்பூசனை செய்வர். இறைவன் (அருட் குறியாம்) திருமேனியில் நீரும் மலரும் இட்டுத் தூபம் காட்டி வழிபடுதல் இது. இத்திறப் பூசனைத் தாழ்நிலைத்து இறைவனை அகப்பூசனை செய்வர். இறைவனைத் தம்முள் கண்டு வழிபடுதல் இஃதாம். பூசலார் நாயனார் புரமெரித்த புண்ணியனுக்கு உள்ளத்தாலேயே திருக்கோயில் எடுத்த செயலையும் அதைப் பெரிதும் கொண்டாடி ''நின்றவூர்ப் பூசல் அன்பன் நெடிது நாள் நினைந்து செய்த, நன்று நீடாலயத்து நாளை நாம் புகுதும்'' என்று இறைவன் அருளியதையும் எண்ணிப் பார்மின். இஃது உயர்ந்த நிலை. அகப்பூசனையிலும் பல வகை உண்டு. மூக்கு நுனியில் கருத்தைச் செலுத்தி வழிபடலும் இதுபோலவே கொப்பூழ். பிரமரந்திரம், புருவநடு, கழுத்து, கண்கள், மூலாதாரம் இவற்றில் ஒன்றை இடனாகக் கொண்டு வழிபடலும் அவை என அறிக. இவை யாவற்றினும் பெரிதும் மாட்சிமைப் பட்டது நெஞ்சம் தாமரையில் இறைவனைக் கண்டுவழிபடலேயாம். என்னை? உயிரும் உயிருக்கு உயிர் ஆகிய கடவுளும் விளங்குமிடம் நெஞ்சத் தாமரையே. உயிர் நெஞ்சத்தாமரைக் கண் உண்மை உபநிடதங்களில் சொல்லப் பட்டுள்ளது. முண்டக உபநிடதமும் சுவேதாச்வதர உபநிடதமும் ''இறையும் உயிரும் பறவைகள் போலப் பிரியாத ஒற்றுமையாய்க் கூடியிருப்பன. மரம் போன்றதை (உடம்பை) அடைந்துள்ளன. அவற்றுள் ஒன்று வினை என்னும் கனியை உண்கின்றது. மற்றொன்று அப்படி உண்ணாமல் பார்த்துக் கொண்டிருக்கிறது'' என்று கூறுகின்றன. இங்ஙனமே பிரம சூத்திரமும் கூறும். உள்ளக்கோயில் வழிபாட்டின் சிறப்பை மைத்ரேய உபநிடதம் ''ஆசலின் துறவியானவன் மறுபிறப்பு

எய்தாது இருக்குமாறு உள்ளத்தில் வழிபடுதலையே செய்தல் வேண்டும். புறவழிபாட்டை ஒழித்தல் வேண்டும் என்று கூறுகின்றது. ஒருவன் தன்னை ''நான்'' என்று சுட்டுங் காலைத் தனது நெஞ்சைக் கையால் தட்டிச் சொல்கின்றான். மற்றும் நெஞ்சத் தாமரையே மனத்திற்குப் பிறப்பிடம் ஆகும். மனம் ஒடுங்க வேண்டுமாயின் அது தோன்றிய இடத்தில் தானே ஒடுங்க வேண்டும். இங்ஙனம் நெஞ்சத் தாமரை வழிபாடே சிறந்ததாதல் நோக்கித் திருவள்ளுவர் ''மலர்மிசை ஏகினான்'' என்று அருளிச் செய்தார்.

இறைவன் தன்னை அடைந்தவரைக் காப்பவன். இதனை உமாபதி சிவனாரும் ''நலமிலன் நண்ணார்க்கு நண்ணி-னர்க்கு நல்லன், சலமிலன் பேர் சங்கரன்'' என்று அருளிச் செய்தார். மக்கள் பிறவியாம் கடலுள்பட்டுப் பெரிதும் வருந்துகின்றனர். அத்துன்பத்தை ஒழித்து இன்பத்தை அருளுவது இறைவன் நற்றாள். திருமந்திரம் கூறுமாறு உயிர்கள் ''சிந்தையின் உள்ளே எந்தை திருவடி, சிந்தையும் எந்தை திருவடிக் கீழது'' என்னும் நிலையில் விளங்குதல் வேண்டும்.

மாணடி சேர்ந்தார் நிலமிசை உளதாய இன்பத் துன்பங்-களால் பற்றப்படார். திருவடிச் சார்பினால் அவ்வின்பத்திலே-யே திளைத்திருப்பர் அவ்வின்பத்தை அருணகிரிநாத முனிவர் ''துரிய நிலையே கண்ட முத்தரிதயா கமலமதனில் விளையா நின்ற அற்புத சுபோதசுக சுயபடிக மாவின்ப பத்மபதம்'' (சுருதி முடிமோனம் எனும் திருப்புகழ்) என்பர். அவ்வின்பம் நுகர்ந்த பேர்க்குக் 'கரும்பும் கைத்ததே தேனும் புளித்ததே' என்பர் திருமந்திர முனிவர். அருணகிரிநாதரும் ''கரும்பும் துவர்த்துச் செந்தேனும் புளித்தறக் கைத்ததுவே'' என்பர். உயிர் இவ்வின்பத்தில் திளைக்கும் ஞான்று இறைவன், உயிர் ஆகிய இரண்டின் நிலை யாது என்று கண்டு கூறினவர் ஒருவரும் இலர். கூறினாருளரேல் அவர் கருதலளவை

துணைக் கொண்டே கூறுகின்றார் என்று தெளிதல் வேண்டும். இறைவன் மனமொழிகளைக் கடந்தும் அளவையுட் படாதும் விளங்குபவன். எனவே அன்னோர் கூற்று உண்மை என நிறுவுதற்குச் சான்று ஏதும் இல்லை. அவ்வின்பம் எத்தன்மைத்து என்பதும் சொல்ல வாராது. இதனைத் திருமந்திர முனிவரும்

''முகத்தில் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்தில் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல் என்றால் சொல்லுமா றெங்ஙனே''

எனல் அறிக. இவ்வின்பமே யாம் முற்கூறிய இறுமாப்பையும் தரும்.

இத்திருக்குறளால் உள்ளத் தாமரைக்கண் இறைவனை வழிபடும் சிறப்பு உணர்த்தப்பட்டது. 'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்தல் என்பது சிற்றம்பல வழிபாட்டையே குறிக்கும். அச்சிற்றம்பலத்தை வணங்காத் தலை வினைகள் சேரும் பறந்தலையே ஆகும்.

நிலமிசை நீடுவாழ்வார் என்பதால் இவ்வுலகத்தும் புகழும் போகமும் எய்துவர் எனின், இறைசார்பினர் அவற்றை வேண்டாராய் நிற்பர். ஆகலின் அங்ஙனம் கூறுதலால் பயன் ஒன்றுமின்று. அதனை அடுத்த குறளில் நாயனார் கூறுதல் காண்க. அடியார்களின் உயிர்க் கருவிகள் எல்லாம் சிவகருவிகளாய்ச் சிவசமமாய் விடுதலின் அன்னோர் இறைவனுக்குரிய எண்குணங்களையும் அடைந்து வாழ்வர். அங்ஙனம் அடைதலை அப்பர் பெருமான் ''எண்குணத்துளோமே'' எனல் காண்க (இதனைக் கூறும் மறுமாற்றத் திருத்தாண்டகம் அரச வாழ்வு முதலியவற்றை எள்ளுதல் காண்க). இது கொண்டே திருஞான சம்பந்தப் பெருமானும் மலர்க் கொன்றைத், தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே

எனத் திருச்சாய்க் காட்டுப் பதிகத்தே அருளினர். அப்பதிகத்தேயே'' பூம்புகார்ச் சாய்க் காட்டான் தாள் நிழற்கீழ் ஓங்கினார் ஓங்கினார் எனவுரைக்கும் உலகமே'' எனலும் காண்க. புளியம்பழமும் அதன் ஓடும் போல இவ்வுலகில் வாழும் காலத்தேயே எண்குணங்கள் எய்திச் சிவசமமாய் விளங்குவராதலின் மாணடி சேர்ந்தார் நீடுவாழ்வர் என்றார். இக்குறளின் கருத்தைத் திருஞான சம்பந்த மூர்த்திகள் அருளிய பின்வரும் பாடலினும் காண்க.

சினமலி யறுபகை மிகுபொறி சிதைதரு வகைவளி நிறுவிய
மனனுணர் வொடுமலர் மிசையெழு தருபொருள் நியதமும் உணர்பவர்
தனதெழில் உருவது கொடுவடை தகுபரன் உறைவது நகர்மகள்
கனமரு வியசிவ புரநினை பவர்கலை மகள்தர நிகழ்வரே

சினம் மலிந்த ஆறுபகைகளால் மிக்க ஐம்பொறிகளும் தம் செயல் ஒழியுமாறு மனத்தின் அலைவோடு உயிர்க்காற்றையும் உள்ளத்தாமரைக்கீழ் ஒடுங்குமாறு செய்து அத்தாமரை மலரில் எழுந்தருளியுள்ள பொருளை இடைவிடாது சிந்தித்து அறிபவர் அப்பரம்பொருளின் அழகிய வடிவம் கொண்டு அவனைச் சேரத் தக்கவராகிய அருளைப்புரியும் பெருமான் எழுந்தருளிய கோயிலை வளைந்துள்ள வலிய மதிலைக் கொண்ட சிவபுரம் என்னும் திருவூரைச் சிந்திப்பவர்கள் கலைமகளுக்கு ஒப்பாகி விளங்குவர்.

## 11. வேண்டுதல் வேண்டாமையிலான்

இறைவனை உள்ளத்தாமரையில் வைத்து உள்குமாறு உணர்த்திய ஆசிரியர் அங்ஙனம் உள்குங்காலை இடருறுமேல் உள்குந்திறம் குறைவுபடுமே என்னும் ஐயம் போக்குவான்,

''வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை யில''

என்று உணர்த்தியருளினார். இக்குறளுக்குப் பரிமேழலகர் கண்டவுரையாமாறு :

''ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன் அடியைச் சேர்ந்தார்க்கு எக்காலத்தும் பிறவித் துன்பங்கள் உளவாகா என்றவாறு

''பிறவித் துன்பங்களாவன'' தன்னைப் பற்றி வருவனவும், பிறவுயிர்களைப் பற்றி வருவனவும் தெய்வத்தைப் பற்றி வருவனவும் என மூவகையான் வருந் துன்பங்கள் அடிசேர்ந்தார்க்கும் அவ்விரண்டும் இன்மையின் அவை காரணமாக வரும் மூவகைத் துன்பங்களும் இலவாயின''.

எப்பொருளையும் வேண்டுதல் உடையோர் அப்பொருள் வழிப் பாசத்தால் கட்டுண்பவர். இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கினவன். ஆகவே வேண்டுதல் இலான் என்றார். எப்பொருளுழையும் வேண்டாமையுடையோர் அப்பொருளைச் சார்ந்து நில்லார். இறைவனோ எல்லாப் பொருள்களினுள்ளும் நிறைந்திருப்பவன். யாவையுமாம் அல்லையுமாம் சோதியன் அவன் எனவே வேண்டாமையிலான் என்றார். திருநாவுக்கரசுநாயனாரும் ''வேண்டாமை வேண்டுவதும் இல்லான் தன்னை'' என்று அருளிச் செய்தல் காண்க. இதனால் காய்தல் உவத்தல் இன்றி உயிர்கட்கு வினைப்பயனை ஊட்டி உய்யக் கொள்பவன் இறைவன் என்பது தெளியப்படும்.

பரிமேலழகர் தன்னைப் பற்றி வருவனவும், பிற உயிர்களைப் பற்றி வருவனவும் தெய்வத்தைப் பற்றி வருவனவும் ஆக இடும்பைகள் மூவகைய என்றார்.

மக்கள் உடம்பில் ஐயும் பித்தும், வளியும் (வாத, பித்த, சிலேட்டுமங்கள்) மிகுதலாலும் குறைதலாலும் நோய் செய்யும். இவை தன்னைப் பற்றி வருவன

காதலர்ப் பிரிவு கலக்கம் செய்யும். இதமுறல் எந்தாள் சேயால் ஏற்றைக்கும் துன்பமேயால் என்றபடி மக்களால் துன்பு விளையும். மற்ற உயர்திணை அஃறிணைப் பொருள்களாலும் உறுகண் உண்டாகும். அறம் வளர்க்கும் போதும் அழுக்காற்றால் அரந்தை விளையும். மற்றவரின் அறிவு, திரு, புகழ் மேம்பாட்டைக் கண்டு பொறாமையால் புன்கண் தோன்றும். பிறஉயிர்களான் வரும் துன்புகளில் அரசரால் களையப்படுவன ஐந்தாம். அவற்றை

''மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரான் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும்தீர்த் தறம் காப்பான் அல்லனோ''

என வரூஉம் அருண்மொழித்தேவ நாயனார் அருளிச் செயலால் அறிக.

கருக்குழி அழுங்கல், பிறப்பு, வளர்ச்சி, நரை, திரை, இறப்பு முதலியன தெய்வத்தைப் பற்றி வருந்துன்பங்கள். இதில் பனி, மழை, வேனில், காற்று, மின், இடியேறு முதலாய இயற்கைச் செய்திகளாலுறும் துன்புகளைபும் அடக்கியுரைத்தார் உரையாசிரியர் என்று உணர்க. தெய்வம் ஈண்டு ஊழின் மேற்று. ''தெய்வத்தால் ஆகாதெனினும்'' என் வருதல் காண்க.

இனிக் கல்வியான் விளையும் கலக்கமும் உண்டு. இதில் தலையாயது நூல்களைப் பதிப்பித்திடுவாரால் விளைவடாகும். நூல் ஓதற்கு எளிதாக அமைதல் வேண்டும் என்னும் தவறான எண்ணத்தால் சொற்சிதைவு செய்து இசையழிவு செய்கின்றனர். அதனால் பொருட்கேடும் விளைகின்றது. சான்று ஒன்றும் காட்டுவல். திருவாசகத்து

''கூற்றைவென் றாங்கைவர் கோக்களையும்வென் றிருந்
தழகால், வீற்றிருந் தான்பெருந் தேவியும் தானுமோர்

*மீனவன்பால், ஏற்றுவந் தாருயி ருண்ட திறலொன்றைச் சேவகனே, தேற்றமி லாதவர் சேவடி சிக்கெனச் சேர்மின்களே.*

என்று வரும் பாடலில் ''ஓர் மீனவன்பால் ஏற்றுவந் தாருயி ருண்ட திறலொற்றைக் சேவகனே'' என்பதன் மெய்ப்பொருள் தேராமல் ''பாண்டியன்பால் குதிரை ஏற்று வந்து அவனது உயிர்ப்போதத்தை உண்ட திறல் ஒற்றைச் சேவகனே'' என்று பொருள்கண்டு அதற்கு ஏற்ப மீனவன்பால் ஏற்று வந்து ஆருயிர் உண்ட திறலொற்றைச் சேவகனே என்று சொற்பிரிவு செய்வாராயினர். சைவசித்தாந்த மகா சமாசம் 1968 இல் வெளியிட்ட பதிப்பில் இங்ஙனமே சொற்பிரிவு செய்துள்ளது. இது ஏனையர் உண்மைப் பொருளைக் காணவொட்டாமல் வழியடைக்கும் கல்லாகும். என்னை? இவர் கூறுதல் உண்மைப் பொருளன்றாகலின். இவர் கூறுமாறு பாண்டியன்பால் குதிரை மேலமர்ந்து வந்து அவன் உயிர்ப்போதத்தைக் கவர்ந்தது உண்மையாயின் பாண்டியன் திருவாதவூரடிகளின் திருவடிக்கு அடிமையாய் அன்றோ இருப்பன்! சிவபிரான் பிட்டுக்கு மண் சுமந்தருள வேண்டியிராதே. வேண்டியிருந்ததொன்றே இவர் உரை வடுப்படுதலைக் காட்டும். திருவாதவூரடிகள் இறைவன் திருவிளையாடலைக் கூறுதலில் விருப்பமுடையவர். எனவே இஃதும் ஓர் திருவிளையாடலைக் குறிப்பதேயாம். ஓர் மீனவன்பால் போர் ஏற்று வந்தவராகிய சோழனையும் அவன் படைவீரரையும் ஒற்றைச் சேவகனாக வந்து உயிர்கவர்ந்த வரலாற்றை அடிகளார் இப் பாடலில் கூறுகின்றார். இது திருவிளையாடற் புராணத்தில் சோழனை மடுவில் வீட்டிய படலமாக வுள்ளது. அதன்கண் இறைவன் ''எண்ணில் ஈறிலாப் பரிக்கும் ஒற்றைச் சேவகன் யானே என்றான்'' என வருதலும் உன்னுக. இங்ஙனம் உண்மைப் பொருளைக் காண வொட்டாமல் செய்யுளைச் சொற்பிரிவு செய்து பொருளை மறைத்தல் நலமோ? கூறுமின் அன்றியும் இச்-

சொற்பிரிவால் இலக்கிய இன்பமும இழந்துபடுகிறது என்பதையும் காட்டுவார். நாவரசர் பெருமான் சமணம் நீத்துச் சைவம் சேர்ந்தார் எனக் கேட்ட பல்லவ மன்னன் வெகுண்டதை

''விரையலங்கல் பலலவனும் அதுகேட்டு வெகுண்-
டெழுந்து, டரையுடைய மனததினராய்ப் போவதற்குப்
பொய்பபிணிகொண், டுரைசிறந்த சமயத்தை அழித்-
தொழியப் பெறுவதே, கரையிறவத் தீரிதனுக் கென்
செய்வ தெனக்கனன்றான்''

என்ற பாடல் கூறுகின்றது. அரசன் சமணரைக் ''கரையில் + தவத்தீர்'' என்று விளிக்கின்றான் அஃது முறையே. ஆயினும் இசசெயயுளை அருளியவர் சேக்கிழார் பெருமான். புண்டலைவன் முருட்டமணர், இருட்குழாம், அமண்குண்டர்' என இன்னோரன்ன திருமொழிகளால சமணரைக் குறிப்பவர். அவர் திருவாயால் 'கரையில் தவத்தீர்' என வராது. என்னை? மொழிவது பல்லவனே ஆயினும் மொழிய வைப்பது சேக்கிழாரே யாகலின் அவரும் அக்கருத்தை மறைமுகமாக உடன்படடாராவர் எனவே மன்னவன் மொழியில் மற்றொரு பொருளும் மறைந்திருக்கின்றது என்க. அப் பொருளாமாறு :- ''கரை இறு அவத்தீர்'' என்று அறிக. இங்ஙனம அரசன் மொழியாகக் கரையில் தவத்தீர் எனவும் சேககிழார மொழியாகக் கரை இறு அவத்தீர் எனவும் கொண்டு பொருள் காண்பதில் உள்ள இலக்கிய இன்பத்தை உன்னுமின். இவ்வினபத்தை ஒழிப்பதே எம் கடன் என்று கரையில் தவத்தீர் என்றே சொற்பிரிவு செய்து நூலைப் பதிப்பித்தல் நற்செய்கையாமோ? நவிலுமின்! எனவே சொற்பொருள் இழப்பும் நேராது இசை இழப்பும் இயையாது இந்நூலில யாம் சொற்பிரிவு செய்திருத்தலைக் காண்க.

தாயின் கருவில் உயிர் தங்கியிருக்கும காலை, கருப்பையுறுத்தலானும், அதில் நீர் நிறைதலானும், வயிற்றுத்தீயின்

வெப்பத்தானும் துன்பு உண்டாகும். பிறக்கும் காலைக் காற்று முரித்துத் தள்ளுதலானும், அல்குல் புழைநெருக்கத்தானும், மற்றும் மலையிருத்திக் கொண்டது போலவும், கடலின்கண் வீழ்த்தி அமுக்குதல் போலவும், இருப்புப்பானையில் அடைத்து நெருப்பிட்டுச் சுடுதல் போலவும், மலைமேல் நின்றானைத் தலைகீழாகத் தள்ளுதல் போலவும், ஆலையில் இட்டகரும்பு நெருக்குணல் போலவும் உண்டாம் துன்பங்கள் அச்சம் தருபவையே எனினும் பிறவிக்காலத் துன்பம் உணர்தற் கியலாமையினால் யாவரும் இறப்பில் உண்டாகும் துன்பத்தையே பெரிதும் அஞ்சுகின்றனர். இதனைப் பாம்பனடிகளார்

''கருமவழி யாய்வரும் சனனவே தனையோ கலக்கங் களிற்
கொடிதெனல்
கட்டாகும் அதுவோஎன் ஞாபகத் திப்போது காணஎளி
வருவதின்று
வெருவினில் வெருவென்ன இனிவர வுள்ள கொடுமரண
வேதனைக் கேஎன்மனம்
மெத்தப் பயந்து கவல்கின்றதிவ விடயத்தில மேதினியில்
உதவிசெய்ய
ஒருவரா லாகுமகொல் என்னைய வுன்னையே உளளபடி
நனிநம்பினேன்''

என்று அருளிச்செயல் காண்க திருவாசகமும் ''யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்'' எனல் அறிக.

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி எழுமையும ஏமாப்புடைதது. ஆதலின் குரவனின்றியும் ஒருவன் தானே பொருள்களை ஆராய்ந்து தெளிவுறலும் உண்டு. அதனால் அறியாமை அகலும. அறிவு மணற்கேணி யொத்து ஊறும். கல்வியானும், குரவனானும், வினைசெய்தலானும் உயிர்கள் அறிவுவிளக்கம் பெறும். அஃதொப்பவே ஊழான், உயிர்களான் இயற்கையான் உண்டாம் துன்பங்களைக் கண்டும்,

கேட்டும், நுகர்ந்தும் உயிாகள் அறியாமை நீக்கலும் அறிவு ஆக்கமும் எய்தும். எனவே இடும்பைகளும் அறிவு விளக்கம் பெறுதற்கே உதவுமாறு உணர்க.

பொருளை ஈட்டியும் காவல் செய்தும் எய்திய துன்பம் நோக்கிப் பொருளை உவாததலும், உயிரனையார் உலகம் நீத்த காலைப் புலம்பிப் பேதுற்ற துன்பம நோக்கி அவர் பால் உவர்ப்புறுதலும, இணைவிழைச்சான் இன்பங் காண்-பான் உடம்பின் குற்றமுணர்ந்து உவர்ப்புறுதலும, பருத்த தொந்தி நம்மதென்று நாமிருக்க, நாயும், நரியும், பேயும, எரியும் தமமதென்று தாமிருக்கும் திறங்கண்டு உவர்த்தலும் ஆகிய திறங்களால் மெய்ப்பொருளில் உறுதியான நாட்டம் தரலால் இடும்பைகளும் உயிாக்கு இனியவே ஆதல் தெளிக. மெய்ப்பொருள் நாடினார்க்கு இடும்பைகளால் பயனின்று எனவே ''யாண்டும் இடும்பை இலவாயின'' என்க.

இறைவன் வேண்டுதல வேண்டாமை இலாதவன். சார்ந்ததன் வண்ணமுடைய உயிரும் அவனைச் சார்தலினால் வேண்டுதலும் வேண்டாமையும இலவாகும். இதனையே பரிமேலழகர் அடிசேர்ந்தார்க்கும் அவ்விரண்டும இன்மையின் என்றார் இத்திறம் திருக்களிற்றுப் படியாரில்

''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்
வேண்டின்அஃ தொன்றுமே வேண்டுவது — வேண்டினது
வேண்டாமை வேண்டவரும என்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால''

என்று உணர்த்தப்படுகிறது இறைவனைச் சேர்ந்தோர் நிலையை

''வையினும் வாழ்ததினும மலர்கொ டேத்தினும்
வெய்ய அராவிடை வீழ நூக்கினும்
எய்யினும் எறியினும் யாது செய்யினும்
நைவொடு மகிழ்வில ஞானி சீலமே''

எனவரும் பாடல் தெளிவுறுத்தும். இவர்க்கு இடும்பையும் இன்பமே எனலை அப்பர் சுவாமிகளை அமணர் செய்த நீற்றறைக் கொடுமை ''மாசில் வீணையும் மாலை மதியமும் வீசுதென்றலும் வீங்கிள வேனிலும் மூசுவண்டறைப் பொய்கையுமாய் இருந்தமையும் அதற்கு 'ஈசன் எந்தை இணையடி நிழலே' காரண மாயினமையும் தேர்க இறைவனைச் சேர்ந்தார் திறத்தை

''கேடும் ஆககமும் கெட்ட திருவினார்
ஓடும செமபொனும் ஒக்க நோக்குவர்
கூடும் அன்பினில் குப்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்''

என்று சேக்கிழார் பெருமான் அருளலை அறிக

இறைவனுடைய திருவடிப் பற்று உலகப் பொருள்களில் உண்டாம் விருப்புவெறுப்புக்களைப் போக்கும. போக்கவே அவற்றா லுண்டாம் இருவினைகளும் உளவாகா. வினைகள இன்மையால் இடும்பைகளும் பிறவியும் இன்றாய் வீடுபேறு கூடும் இவ்வுண்மை இக்குறளால் அறியப்பட்டது. இக்குறள் இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கினவன் என்பதை உணர்த்திற்று

## 12. இறைவன்

இடும்பைக்குப் பிறவியே இருக்கை. அப்பிறவி, இடும்பை இரண்டனுக்கும் மூலமாயுள்ளவை நல்வினை, தீவினை என்னும இருவினைகள். ஆகலின் வினையின்றேல் இடும்பையின்று. யாம் வினை ஈட்டாது இடுமபையைத தவிர்ப்போம் எனில் அஃது உடம்புடைய எவ்வுயிர்கும் இயலாததாம். வினை சேராமலிருத்தற்கு இறைவன் அடிசேர்தலே உரிய நெறியாகும். இதனை உணர்த்துவது பின்வரும் ஐந்தாவது குறள் ;

''இருளசேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு''

இருமொழிப் பயனும் நெறியொடு மருவிய ஆசிரியர் பரிமேலழகர் இக்குறட்பாவுக்கு இயம்பிய எழில்பெறும் உரையா மாறு:

''மயக்கத்தைப் பற்றிவரும் நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளும் உளவாகா; இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து என்றவாறு. ''இன்னதன்மைத்து என ஒருவராலும் கூறப்படாமையின் அவிச்சையை இருள் என்றும் நல்வினையும் பிறத்தற்கு ஏது ஆகலான் ''இருவினையும் சேரா'' என்றும் கூறினார். இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையர் எனக்கருதி அறிவிலலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேரா ஆகவின் அவை முற்றவும உடைய இறைவன் புகழே ''பொருள் சேர் புகழ்'' எனப்பட்டது. புரிதல் = எப்பொழுதும் சொல்லுதல்''

''மெய்ம்மை சேர்ந்த புகழ்'' எனப் பரிமேலழகரும், ''மெய்ப்பொருள் சேர்ந்த புகழ்ச்சிச் சொற்கள்'' என மணக்குடவரும் இன்னும் பலவிதமாக ஏனையரும் சில சொற்களால் விளக்கிய பொருளை நச்சர் அவற்றினும் திட்பம் பெற்றதாய ''திருப்புகழ்'' என்னுய ஒரு சொலலால் கூறுவது இனிது என்க

இருள் என்ற சொற்கு மயக்கம அல்லது அறியாமை என்றே ஆசிரியன்மார் விளக்குதலைப் போற்றிக் கொள்க. இஃது அவிச்சை எனவும்படும். இருள் இரண்டு வகைப்படும. ஒன்று பகலவன் மறைதலால் மக்கள் கண்ணை மறைக்கும் உலகஇருள் மற்றொனறு உயிர்கள உளவாயின வன்றே தானும் உளதாய் உயிர்களின் அறிவை மறைக்கும ஆணவ மலம் என்னும் இருள். புற இருளாகிய உலகஇருள் நாம் எநதப் பொருளையும் காண வொட்டாமல மறைத்துக்

கொண்டு தன்னை மட்டும் காட்டிக் கொண்டு நிற்கும். அக இருளாகிய மலமோ உயிர்கள் தம்மையும் தம்தலைவனையும் அறியாதபடி மறைத்துக் கொண்டிருப்பதோடு தன்னையும் மறைத்துக் கொண்டு நிற்கும். இதனை உமாபதி சிவனார்

''ஒரு பொருளும் காட்டா திருள்உருவம் காட்டும்
இருபொருளும் காட்டா திது''

என்று சுவைபட உணர்த்தியருள்வா. ''எலலாவற்றிலும் நீக்கமற நிறைந்து சான்றாக நிற்கும் சிவனை வழிபட்டு முனிவன் இருளைக் கடப்பன்'' என்று கைவல்ய உபநிடதமும் ''ஊனத்திருள் நீங்கிட வேண்டின்'' எனக் காழிவேந்தரும் அவிச்சையை இருள் என வழங்குதல காண்க.

''இன்ன தன்மைத்து என ஒருவராலும் கூறப்படாமையின் அவிச்சையை இருள் என்றார்'' எனப் பரிமேலழகா உரைத்த நயம் பெரிதும் உணர்ந்து இன்புறற்பாலது. இவ்வுரையின் மாட்சியினைத் தேர்தற்கு இருள பற்றிய ஆயவு நிகழ்த்துதல் ஈண்டைக்கு இன்றியமையாதது என்க.

''அருளால் எவையும்பார் என்றான் அதனை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்ததேன்
இருளான பொருள்கண்ட தல்லால் கண்ட
என்னையும் கண்டிலேன என்னேடி தோழி''

என்று தாயுமானவ அடிகளாா கூறியருளினார். இஃது அவிச்சையாகிய இருளைப் பற்றியது.

இஃது இங்ஙனமாகவும, மாதவச் சிவஞான முனிவர் என்னும் திருவாவடுதுறை ஆதீனத் தம்பிரான் உயிர்களின் கட்பாவை பலவகை அமைப்புடையது என்பதைச் சிறிதும் அறியாராய் மக்களின் கட்பார்வை ஒன்றையே அளவையாகக் கொண்டு புறஇருள் பற்றித் தமது சிவஞான பாடியத்தே பலபட வரைந்து வைத்தார். அதனையும் ஈண்டுத் தருவாம்.

''*இவ்விருளினது உண்மை வெளிவிடையின் அலர* விழித்து நோக்கிய வழியும் மறைத்தல் தொழில் நிகழ்த்தல் பற்றிப் பாரிசேட அளவையான் அறியப்படும்.

''*அற்றேல் நீலவடிவிற்றாய்த் தோன்றுதலின் இருள* காட்சிப் பொருள் என்றால் படும் இழுக்கு என்னை எனின் அற்றன்று. துன்னிய இருளின் - கண் விழித்துழிப் போலக் கண்ணிமை இறுக மூடி வழியும் ஒருதன்மைத்தாய்த் தோன்று தலின் வேற்றுமை யின்மையான் ஆண்டுத் தோன்றுவதும ஒரு வடிவப் பொருளாமெனின், வடிவப் பொருள் கண் மூடிய வழிக் காட்சி எய்துதல் சாலாமையான அது மயக்க உணர்வே யாம் என்பது போதருதலின் விழித்துழி *அவ்வாறு தோன்று* வதும் அது போல மயகக வுணர்வாவதன்றி இருளின் தோற் றம் அன்று என்பது அநுபவத்தால் கண்டு கொள்க. ''ஒரு *பொருளும் காட்டா திருள் உருவம் காட்டும்''* என்பது காட்சிப் பொருளாம என்னும் பொருட்டன்று. உடனாய் மறைந்து நிற்புழியும் பாரிசேட அளவையான் அறியப்படும் இயல்பிற்று என்னும் பொருட்டேயாம்''. முனிவர் கூற்று ஆராய்ச்சியின் முன் நில்லாது முதுகிடுவதே எனவே இரு ளைப் பற்றிய ஓர் ஆய்வு ஈண்டு நிகழ்த்துவாம்.

இருள் என்பது மக்கள் கண்ணிற்கும அக்கண்ணனைய பிறகண்கட்கும ஒளியிலா ஞான்று காணப்படுவதாகும. செஞ ஞாயிற்றின் ஒளியுள் காலமே பகல் எனவும் அஃது இல் காலமே இரா எனவும வழங்கப்படுகின்றன. பகல், இரவு என்பவற்றைப் பூனையின் கணணும் அக்கண்ணனைய பிற கண்களும ஒன்றாகவே காண்கின்றன. ஆகலின் அக்கண் கள் ஒளி வேண்டாமலே நோக்கும் தன்மையுவாம். இக் *கண்ணுடைப் பிராணி இருள் எனபதையே அறியாது.* (இத னால் முனிவர் ''கண் ஒளியைத் தடை செய்து நிற்பதாகிய இருளை அபாவம் என்றல் கூடாமையதிக'' என்பது யாங் ஙனம் சாலும்?), இப்பிராணி ஞாயிற்றின் வெப்பத்தால் பக

லும் அஃதின்மையாலும் திங்கள் நாள்களின் தோற்றத் தாலும் இரவும் அறிதல் கூடும். கூகையும், வீரியன் பாம் பும் பகற்காலத்தே பாரா இயல்பும் இராக் காலத்தே பார்க் கும் இயல்பும் உடையன. எனவே இவை ''பகற்குருடு'' எனப்படும் இவ்வியல்பிற்குக் கண் அமைப்பே காரணமாகும் பகற்குருடு என்பதற்குக் காக்கை, கூகை என்று பொருள் தந்த அகராதிக்காரர் ''பகல் வெல்லும் கூகையைக் காக்கை என்னும் திருக்குறளைப் படித்திருப்பார்? என்றே எண்ணு கிறோம்.

செஞ்ஞாயிற்றைப் பெரிதும நோககிய மக்கள்விழி சிறு பொழுது ஒன்றும நோக்காது நிற்றல் போலக் கூகை விழி யும் அஞ்ஞாயிற்றொளி முன் மாழகி நிற்கும் என்புழியும் எத்துணைச் சிறிய ஞாயிற்றொளி முன்னும் கூகை விழி குருடு படுதற்குக் கண்ணமைப்பே காரணம் என்பது போதரும். இக்கண்கள ஞாயிற்றின ஒளியினையே இருளாகக் காண பான் அமைக்கப்பட்டபடி வெளியினையே இருளாகக் காண பான் அமைக்கப்பட்டது மக்கள் கண் எனல ஆம். இதனால் மக்கள் கண்ணும் அது போல்வனவும் வெளியினை உள்ள படியே அறியா நீர்மைய என்றுணர்க. இருளில் காட்சியின்றி நிற்கும் கண் இருளாகக் காணும் என்பது என்னெனின், ஒளியில் நின்று கொண்டிருப்பானது விழி தனக்கு அணித் தாய் உள்ள ஒரு மர நிழலாகக் காணபபடும் இருளையும் காண்டலின் அங்ஙனம் கூறலாம என்க. ஒளியோடு கூடிக காணுணர்ச்சிக் கண்ணுக்கு அன்றி ஏனைய உறுப்புகளுக்கு இன்று என்பதும் உணர்க. வெளியே இருள் என நிற்கும மர்நிழலாகக் காணப்படுகின்றது கண்காணாத் தன்மையே இருள் எனின் காணும் காலத்தும் மரநிழலாகிய இருள் காணப்படுவதால கணகாணாத தன்மை வேறு இருள் வேறு என்க. இங்ஙனம ஒளி தடையுண்ட மாததி ன்ரயே மரநிழல் உளதாகலான் ஒளியின்மையே இருள் எனின் ஒளியில்லா நிலைக்களம் சூனியமன்று; வெளி என்னும் பூதம் உண்மையின். இதற்கு வேறாக ஒளி அல்லது இருள் இருக்

கும் என்பது சாலாது. கூகை விழிக்குக் கதிரவன் ஒளியே இருளாயிருத்தலும் உண்னுக. ஒளியிலா ஞான்றும் பூனையின கண் தனி காண்டலையும் கருதுக. குருடர்க்கும, மாலைக் கணணர்க்கும், கண்ணை மூடிக கொண்டவர்க்கும உண்டாம் இருள் 'ஒளியின்மையே இருள் எனக் கூறுதலின் அடங்கும். எனவே ஒளியின்மையே இருள எனல் ஒவ்வாது என்று வரும் சிவஞான முனிவர் கூற்று போலி யாயவாறு காண்க நீளிடை விண் நீனிறமாகக் காணப்பட லும் வெளிதானே இருளாகக் காணயபடுகின்றது என்பதை நிலை செய்யும். அவ்விண் பார்வை செயலற்று நின்று விட்ட தால நீனிறமாகக் காணப்படுகின்றது என்று கூறுதலும் ஒவ்வும்.

இருளே நிழலாகவும் கானலே கானல நீராகவும் வழங் கப்படுமாறு இயறகை வெளிதானே இருள் எனவும் வழங் கப்படுகிறது. இங்ஙனம் இருளாகத தோன்றலான் பூத இருள் என்றும இது வழங்கப்படுகிறது

ஆயினும் காண்தகக பொருள்களைக் காணுமாறு மக்கள் விழிககு ஒளி தரும் கதிரவன் ஒளி போல மறைப்பினைச் செய்யும் பொருளன்று இவ்விருள் மறைத்தல் தொழிலும் கரிய நிறமும் இருளுக்கு உரைத்தல அஃது ஒரு பொருள் எனக் கொண்டு கூறுவதேயாம் வெயினின்றும இருளை வேறுபடுத்தலும, வேறுபடுத்தப்பட்ட அதனை விழிக்கண் சார வைததலும், சார வைப்புழி விழிநோக்காது நிற்றலை நிறுவுதலும் எவரும் செய்யாதிருக்குக காறும இருள் ஒரு தனிப் பொருள எனல் ஒண்ணாது வெளிக்கும் இருளுக்கும் தொடர் புளதாகலின் வேறுபடுத்தலாகா தெனின் அத்தொடர்பு கூட் டத்தான் (சையோகத்தான்) அன்றி என்றும் பிரியாத் தன்மை யது (சமவாயம்) ஆதல் வேண்டும். ஆயின் ஞாயிறும் கதிரும் போல வெளியும இருளும் ஒன்று எனவாம. மற்றும் கரி என்பதொரு பொருள் எப்பார்வைக்கும் கரிதாகக் காணப்

படல கடுப்ப இருள் காணப்படாமையின் அஃது ஒரு தனிப் பொருளாவது யாங்ஙனம்? என்னை? கூகை முதலியவற்றின் விழிக்கு இருள் ஒரு படித்தாய் காணப்பட்டிலது ஆகலின். அஃறிணை யுயிர்களின் பார்வை பஃறிறப்பட்டு நிற்கும். மாந்தர் பார்வை கதிரவன் ஒளி வேண்டும். அவரின் மேம் பட்ட தேவர் பார்வையோ பூனைவிழி போல்வது எனவே தேவ ருக்கு வேறாக நின்று இன்பமும் துன்பமும நுகர்பாக்கு இறைவனால் படைககப்பட்ட மாநதர் விழி வெளியினையே இருளாகக் காண்பான் அமைக்கப்பட்டது என்க. அவ்விருள் மேலிடாது அடங்கும் ஏல்வை காட்சியுண்டாம்படி ஞாயிறு, திங்கள், விணமீன் முதலியன அமைக்கப்பட்டன. இவ்வழி இரவும பகலும நுகாசசியாமாறு மாத்தா பொருட்டு இம மண்ணுலகில அமைககப்பட்டது என்க. எனவே இருள என் றொரு தனிபபொருள் இன்று என்க.

இருளைப் பறறித் திருவருட் பெருஞ் செலவர் பாமபன் அடிகளார் கூறியதின் சுருக்கமே மேலே யாம் வரைந்தது என்க இடையில சிவஞான முனிவர் பற்றி வருவன யாமே கூட்டியது.

''நல்வினையும் பிறத்தற்கு ஏது ஆகலான் இருவினை யும் சேரா என்று கூறினார்'' எனவரும பரிமேலழகர் கூற்றை நோக்குவாம். தீவினை அளறுட்படுத்துத துன்புறுத்தி எஞ்சிய பகுதியை நுகர்பாக்குப் பிறப்பினுட்படுததுமாறே நலவினை தேவருலகிற்படுத்து இன்புறுதரி எஞ்சிய பகுதியையும நுகர்-பாக்குப் பிறப்பினுட்படுத்தும. எனவே தீவினையை இரும்பு விலங்கு எனவும நலவினையைப் பொன் விலங்கு என்றும் நல்லோர் நவிலவர். இறைமைக் குணங்களை ஒன்பதாம் குறளில் காண்பாம இறைவன் தன்மையை அருணகிரிநாத முனிவர்

''வாசித்துக் காணொணாதது
பூசிததுக் கூடொணாதது

வாய்விட்டுப் பேசொணாதது நெஞ்சினாலே
மாசர்க்குத் தோணொணாதது
நேசர்க்குப் பேரொணாதது
மாயைக்குச் சூழொணாதது விந்துநாத
ஓசைக்குத் தூரமானது
மாகநதுக் கீறதானது
லோகத்துக் காதியானது

என்று விளக்குதல காண்க.

இறைவனின பொருள்சேர் புகழ புரிநதார் பிறா வியத் தலையும இகழ்தலையும் பொருளாகக் கொளளா. தீவினை அஞ்சும இயலபினராய இன்னோர் நலவினையும் பிறவிக்கு எதுவென்று உணர்ந்து நலவினைகளை இறைவனுக்கே உரிமை செய்வர். எனவே இவரை இருவினை சேருவதின்று. அவிச்சையும் முதற்பொருளே ஆதலின் அஃது இறைவன் திருவருளால் கழலுதல் வேண்டும எனவே இறைவனின் பொருள் சேர் புகழ்புரிவர். சிலர் இறைவனை வணங்கார். மாணிக்கவாசகா ''அவனருளாலே அவன் தாள் வணங்கி'' என்கின்றார். அவ்வருள் வரவில்லை. எனமீது குற்றம் இன்று என்பர் இன்னோர் எப்பிறவியில இறைவனையடை-வரோ அறியேம இறைவனை வணங்கும் போதும் ''பெரு மானே நீ ஆட்ட ஆடுகின்றேன். உன்னை நான் வணங்கு வதும உன் அருளே என்று தன்முனைப்பு இன்றி வணங்கு-தல் வேணடும என்று மாணிககவாசகா உணாத்தியருளு-கின்றாரே யலலாமல திருவருள வரும; வந்து இறைவனை வணங்கச் செய்யும என்று கூறுகின்றார் அல்லர்.

இறைவன் ''உதியா மரியா உணரா மறவா விதிமால் அறியா விமலன''. இவையில்லார் இறைமைப் பண்பில்லாரே இறைவன் என்ற சொல்லுக்கு எலலாப் பொருள்களிலும் தங்கியிருப்பவன் என்பது பொருள் ஆகும் இதனை 'மலர்மிசை ஏகினான்' என்ற குறள் விளக்கத்தே உணர்த்தினோம்.

(இறை — தங்குதல்) அவன் சிவபிரானே என்பதையும் ஆண்டே உணர்த்தினோம். இறைவன் என்ற தமிழ்ப்பெயர் சங்க நூல்களில் சிவபிரானுக்கே வழங்கப்படுகின்றது. சிலப்பதிகாரம கடலாடு காதைக்கண்

> ''இதனுள், இறைவனை முற்கூறாது மாயோனை முற்கூறியது என்னையோ எனின் மாயோன் காவற் கடவுளாய் அருளை அருத்தலான் என்க''

என்று அடியார்க்கு நல்லார் கூறுதல காண்க இதனால் தெய்வங்களைக் கூறும ஞான்று சிவபிரானை முற்கூறுதல் முறைமை என்பதும் பெறப்படும. நச்சினார்க்கினியரும் சிவபிரானை இறைவன் என்றும் தேவியை இறைவி என்றும் வழங்குவர் யாப்பருங்கல விருத்தியுரைக்கண் மேற்கோளாய வரும் (கீழ்க்காணும்) பாடல் சிவபிரானை 'இறை' என்றே வழங்குதல் காண்க

> ''பூமலை நீர் உறையுள் புள்ஏறு புள்கொடி
> வாய்மைவேல் ஆழி படைக்கலம் — நாமம்
> பிரமன் இறைகணணன் பொன்தீக்கா மேனி
> கருமம் படைப்பழிபபுக் காப்பு

இச்செய்யுள் நான்முகன், நஞ்சுண்ட நம்பன், நாரணன் ஆகியோர் தம் வாழிடம், கொடி, படைக்கலம, பெயர், வண்ணம், தொழில் ஆகியவற்றைக் கூறுகின்றது.

வாழிடம் : தாமரை, கயிலை, பாற்கடல; கொடி: அன்னம், விடை, கருடன்; படைககலம் :- மறை, சூலம், சக்கரம்; பெயர் . பிரமன், இறை, கண்ணன்; வண்ணம :- பொன், தீ, மேகம்; தொழில் :- படைப்பு, அழிபபு, காப்பு எனவாம் இதனுள் சிவபிரானின் திருப்பெயர் இறை என வருதல காண்க பிங்கல நிகண்டு இறைவன் எனவும், சேந்தன் திவாகரமும், சூடாமணி நிகண்டும, ஆசிரிய நிகண்டும் இறையோன் எனவும் கயாதரமும், உரிச்சொல் நிகண்டும் இறை

எனவும் சிவபிரான் திருப்பெயரைக் கூறுகின்றன எப்பொருட்கும் இறைவன் என்னும தொடருக்கு ஈசன் என்று திவாகரமும், கயாதரமும் அரன் என்று சூடாமணி நிகண்டும் தாணு என்று ஆசிரிய நிகண்டும் கூறும் சங்க நூல்களில் சிவபிரான் புகழன்றிச் சமண, புத்த முதல்வரின் புகழ்கள் பேசப்பட்டில என்பது நினைவில் வைக்கற்பாற்று.

இக்கூறியவற்றால் இறைவன் சிவபிரானே என்பது நன்கு தெளியப்படும். இதனால் பழந்தமிழா சமயமாகிய சைவ சமயமே திருவள்ளுவர் சமயம என்பது புலனாம்.

இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையர் எனக் கொண்டு அறிவிலலார் கூறும புகழகள் பொருள சேரா என்பது ஒவ்வொருவரும் உள்ளத்தில் பதிக்கற்பாற்று மக்கள் துயர்வீட்டுவான் மாநிலத்துப் பிறநதான் இறைவன் என்பதும் பொருள் சேராததே. மந்திரங்கட்கும, பூசனைகட்கும் மகிழ்ந்து மாற்றாரை ஒழிப்பன் என்பதும் மாபெரும் இழுக்கேயாம் இறைமைத் தன்மையிலலாத, மாந்தரினும் உயர்வுடைய உயிரே இங்ஙனமெலலாம செய்யும் என்று அறிக அவ்வுயிர் அதனினும உயர்வுடைய கடவுளாலோ, கடவுளாளை பெற்றவராலோ ஒறுத்தற்கும, பணிகொளற்கும உரியதாகும். அத்தகு உயிாகளைத் தெய்வம் என்று கொண்டாடுவது அறியாமையேயாம.

இக்குறளால் பிறவிக்குக் காரணம மூலமலம் எனவும் அதனினின்றும் கிளைப்பவை இரு வினைகள் எனவும் இருவினை ஒழிந்தாலன்றிப் பிறவியும் இருளும் ஒழியா எனவும் அவை ஒழிதற்கு இறைவனின் பொருள்சேர் புகழ்களைப் புரிதல் வேண்டும் எனவும் அறிவுறுத்தார் இக்குறள இறைவனின் வரம்பிலாற்றலுடைமையைக் குறிக்கின்றது.

## 13. பொறிவாயில் ஐந்தவித்தான்

வினைகள் இருள் ஆகிய அறியாமையால் விளைவன என்பதும் பிறவிக்கு அவை வாயிலாம் என்பதும் உணர்த்தப்

பட்டன. அவ்வினைகள் விளையும் வாயில் ஐமபுலன்கள் ஆம் எனவே ஐம்புலன்களும் அவித்தான் நெறி நின்று ஒழுகுக என்று கீழ்வரும் குறளான் உணர்த்துகின்றார் ஆசிரியர்.

''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ வார்

இக்குறளுக்குக் கீழ்வருமாறு பரிமேலழகர் உரைவிரிக்கினறா ''மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளை வழியாக வுடைய ஐநது அவாவினையும அறுத்தானது மெய் யான ஒழுக்க நெறியின்கண் வழுவாது நின்றார் பிறப்பின்றி எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ்வார் என்றவாறு.

''புலன்கள் ஐந்து ஆகலான அவற்றின்கண் செலகின்ற அவாவும் ஐந்து ஆயிற்று ஒழுக்க நெறி ஐநது அவித்தானால சொல்லப்பட்டமையின் ஆண்டை ஆறனுருபு செயயுட் கிழமைக்கண் வந்தது 'கபிலரது பாட்டு' என்பது போல இவை நான்கு பாட்டானும் இறைவனை நினைத்தலும், வாழ்த்தலும், அவன் நெறி நிற்றலும் செய்தார் வீடு பெறுவர் என்பது கூறப்பட்டது ''

அடியவர் இறைவனை நினைநது உருகுவர் அவர் ஒரு திருமேனியைக் கருதி அதன்கண் ஈடுபடுவர் அவா தன்னைக காணவும், அருள் பெற்று இன்புறவுப இறைவன் அத்திருமேனி கொளவன். இது கடவுளின் அருள திறம். இத்திருமேனி இடம முதலிய எல்லைகட்கு உட்பட்டது போன்று தோன்றும. தோன்றினும் அஃது எல்லையுட்படாததே என்றுணர்தல் வேண்டும. எனவேதான் இளங்கோ அடிகள் இறைவனைப பிறவா யாக்கைப் பெரியோன் என்றார் விலலிபுத்தூராழவாரும பிறப்பிலி இறப்பிலி என்றார் இறைவன் இவ்வாறு கொள்ளும் கோலங்கள் பல. அவற்றுள நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன், பணிமிடற்று எண்கையான், கறைமிடற்றண்ணல், ஏற்றூர்தியோன், நீர்

சடைக்கரந்தான், தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோன் முதலிய திருக்கோலங்களைச் சங்க நூல்கள் கூறும். புறநானூறு

''எல்லா வுயிர்க்கும் ஏமம் ஆகிய
நீர்அற அறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோற்கே''

என்னும் திருக்கோலமே ஐந்தவித்தான் திருக்கோலம் என்க. இஃது தென்முகக் கடவுள் திருக்கோலம் எனவும் படும். ஏனைய தேவரும் மாந்தரும் முதலில் பொறிவாயில் உடையவராய் இருந்து பின்னை அவற்றை அவித்து விளங்குவரேல் அவரை நீத்தார் என்பர். அவர் இறைவன் ஆகார். இறைவன் இயற்கையாகவே பாசங்களின் நீங்கினவன். அவன் இயல்பாகவே ஐம்புலன்களைத் துறந்தவன். இறைவனைக் காழிவேந்தர் ''வென்றவன் புலனகள் ஐந்தும் எனவும், அப்பர் பெருமான் ''நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐநதும் வென்றானை'' எனவும கூறியருளல் காண்க பொறிவாயில் ஐந்தவித்தான் என்பதன் மெய்ப் பொருளை நம்பியாரூரா ''முற்ற அஞசும் துறந்திருப்பானை'' என்று திருநீடூர்ப் பதிக த்தும் மாணிக்கவாசகப் பெருந்தகையார் ''போற்றி ஐமபுலன் கள நின்னைபபுணர்கிலாப் புணாக்கையானே'' எனத் திருச்ச தகத்தும் உணர்த்தியருளல் காண்க. இங்ஙனம் தான் பொறி வாயில் ஐந்தவித்தான் என விளங்குதல் போன்றே தன் அடியவர் புலன்களையும் அவித்தருளுவன் என்பதை

''மெய்வரை யான்மகள் பாகன்தன்னை விரும்ப உடலவாழும் ஐவரை ஆசறுத் தாளும் என்பர் அதுவும் சரதமே''

என்று திருஞான சமபநத மூர்த்திகள திருக்கலிககாமூாப் பதிகத்தே அறிவுறுததியருளல் காண்க.

இது காறும் கூறியவற்றால இறைவன் இயல்பாகவே புலன்களைத் துறந்திருந்து பொறிவாயில் ஐந்தவித்தான. ஆதலே அனறித் தன்னை அடைந்தார் பொறிவாயில் ஐந்து

அவிப்பவனுமாம் மாட்சியுடையவன் என்பது தெளியப்படும் ஆலமர் கடவுளின் திருக்கோலம ஐந்தவித்த திருக்கோலமே-யாம். இஃது அறம் முதல் நான்கும் அறிவுறுத்துவான் கொண்டதாகும். ''அருந்தவருக் காலின்கீழ் அறம் முதலாம் நான்கனையும், இருநதவருக் கருளுமது எனக்கறிய இயம்-பேடி'' என்று மணிமொழிப் பெருமானும் ''அன்றாலின் கீழிருந்தங் கறம் சொன்னானை'' என்று சொல்லரசரும் போற்றுதல் காண்க. திருக்குறள் அறம் முதலிய நான்-கனையும் உணர்த்தும் நூல். இநநூலைச் செய்ய எடுத்துக் கொண்ட திருவள்ளுவர் பெருமான் அவற்றை விளக்கும் ஆலமர் செல்வன் திருக்கோலத்தை நினைவு கூர்தல் இயல்-பேயாம். இக்கோலத்திருந்து இறைவன் அறம் முதல் நான்-கனையும் அருளிச் செய்தனன். அதனையே வள்ளுவர் ''பொய்தீர் ஒழுக்க நெறி'' என்றார். ஏனையா கூறும் நெறி பொய்புணர் ஒழுக்க நெறியாதலும் இதனால பெறப்படும்.

ஒரு வரையறையின்றி எந்நூற்கும் அணிந்துரை வழங்கிப் புகழ்பெறும வேணவாவுடையார் பலர் உளர் திரு.வி க. என்பவர் சிறுவயதில் வடலூர் வள்ளலார சாரபினரை எதிர்த்துத் தம் கலவியைக் கெடுத்துக் கொண்டேனும சான்று வழங்குதல் வேண்டும் என்று நீதிமன்றம் ஏறியும பின்னாளில் அவ்வடலூர் வள்ளலாருக்கு எடுக்கும் விழாக்களில் அவை ஏறியும் வந்தமை புகழ விருப்பையே காட்டும அவர் திருக்-குறள் ஆராய்ச்சியும் ஜைனசமய சித்தாநத விளக்கமும் என்னும் நூலுக்கு அணிந்துரை அருளவதும், அதில் ''முதலில் பொறிவாயில் ஐநது உடையவனாயிருந்து பின்னை அவ்-வைந்தவித்த ஒருவனை அவர் ஆதிபகவன் எனப் போற்றி இருக்கின்றார் எனபது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குவதொன்று'' என்று ஞானமொழி நவில்வதும வியப்-பாமோ? அங்ஙனம் ஓர் உயிரை ஆதிபகவன் என்று எவரேனும் துணிந்து கூறுவரா? உன்னுமின். மூக்கவாம் மணம் அணை

கருணை முதலியவற்றோடு வலசி மாந்தி மகிழ்தற்குப், எச் சமயத்தோரும் தம்மைச் சமரச மெய்ஞ்ஞானி எனப் போற்றும் பொய்ப் புகழுக்கும் விருப்பமுறுவோரினும் கடவுளின்மை கூறும் மதத்தவரே பெரியராவார் என்க.

இனிப்பொயதீர் ஒழுக்கநெறி நின்றார் உலக நிகழ்ச்சி களால தாக்குறாது இறைவன திருவடிக்கண் வைதத சிந்தை-யராய்ப் பேரின்பம் நுகர்நதிருப்பர் இஃதே எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ்தலாகும.

மலர்மிசை ஏகினான் என்ற குறளில் வரும 'நிலமிசை நீடுவாழ்வார்' என்பதற்கு 'எலலா உலகிறகும் மேலாய வீட்டுலகினகண் அழிவினறி வாழ்வர்' என்று பரிமேலழகர் பொருள் உரைத்தார் இககுறளில வரும நீடுவாழ்வார் என்பதற்கு அவரே 'பிறப்பினறி எக்காலத்தும் ஒரு தன்மைய-ராய் வாழ்வார' என்று கூறினார முன்னையது வீடுபேற்று நிலையைக் குறிப்பது பின்னையது சீவன்முத்தர் நிலையை-யும் வீடுபேற்று நிலையையும குறிப்பது என்றுணர்க.

பொறிவாயில ஐநதவித்தான் என்பது இறைவனைக் குறிப்பது போன்றே அடியவரையும குறிக்கும். எனவே இடமறிநது பொருள கொளளல் வேண்டும். இறைவனைச் சேர்தற்கு ஐந்தும் அவிதல் வேண்டும். வேண்டுமேல் துறவு மேற்கொள்ள வேண்டும். இல்லத்திருந்து கொண்டே துறவுக் கோலம பூணபோர் சேற்றில அழுந்தியிருந்தும தூயோம் என்று சொல்வாரை ஒபபர். இன்னோர் காட்சியின்பததையும, மண இன்பத்தையும், சொல் இன்பத்தையும், இசையின்பத்-தையும், ஊற்றின்பத்தையும் நாடுபவராயே உள்ளார். ஐம்-புலனும் ஆரத துய்ப்பின் உவர்ப்பு உண்டாகும்; அஃதே ஐந்தவித்தல என்றொரு புதுமை கூறுவர். திருமந்திரம் ''அஞ்சும் அடககடக கென்பர் அறிவிலார், அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை, அஞ்சும அடக்கில அசேதன மா-மென்றிட், டஞ்சு மடக்கா அறிவறிந்தேனே'' எனும் திருமந்-

திரத்தை மேற்கோள் காட்டுவோர். அதன் மெய்ப்பொருளை அறியார் என்றே எண்ணுகின்றோம். ஒருவற்கு ஐம்புலன் இன்பத்திலும் உவர்ப்பு ஏற்படுவது எஞ்ஞான்று? நரை முதிர்ந்த மூதாளனாயினும் கருவிகள் செயலற்று நிற்குமே அன்றி உவர்ப்பு விளையாது. அவற்குக் காயகற்பம் முதலியவற்றால் இளமை யுணர்வு மீளுமேல் காமச் சேற்றில அழுந்து வதைப் பெருமையாகப் பிதற்றிக் கொள்வன் கருவிகள் வன்மை யிழந்த கிழவனே ஆயினும் அழகிய ஒரு பெண்ணைக் காண்பானாயின் அவளைத் தழுவியேனும் ஊற்றின்பம் பெற விரும்புகிறான். எனவே புலனவிப்பார் இல்வாழ்க்கையைப் புறம செய்தல் வேண்டும என்றறிக.

சிலர் நாட்டுப்பணி என்றும் மக்கட் பணி என்றும் கூறிக் கொண்டு அதனால் எய்தும் தலைமை, ஊதியம், புகழ் இவற்றில அழுந்தி மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்று கூக்குரலிடுவர். எனவே இல்லிருந்து காவி யணிவானும் நாட்டுத்தொண்டு என்று தன் குடும்பத்தொண்டு செய்வானும் மக்களை ஏய்ப்பவரே ஆவர்.

புத்த சமண மதத்தினர் இக்குறள் புத்தரைக் கூறுவ தென்றும் இடபதேவரைக் கூறுவதென்றும கூறித் தங்களுக்குள் களிப்பர். ஆயினும அஃது உணமையன்றே புததரோ, இடபதேவரோ இறைவராகாரே. ஆகாராக, இவவதிகாரம் கடவுள் வாழ்த்து எனப்படல் கூடாதே. எனவே திருவள்ளுவர் ஓர் எளிய உயிரைப் பெரிது படுத்திக் கடவுள் வாழ்த்தில் வைத்துப் போற்றார் என்க.

## 14. தவக்குளமை யில்லாதான

ஒருவர் துறவு மேற்கொண்டு ஐம்புலனையும் அவித்தார் ஆயினும் மெய்யுணர்வு கூடினார் இல்லையெனில் அவா பெறலாம் பயன் யாதும் இன்று. இஃது ''ஐயுணர் வெய்-

தியக் கண்ணும் பயமின்றே, மெய்யுணர்வில்லாதவர்க்கு'' என வரும் திருவளளுவராலும் பெறுதும. புகலிவேந்தர் "ஆறினார் பொய்யகத்தை யுணர்வெய்தி மெய் தேறினார் வழிபடுந் தென்குடிததிட்டையே" என அருளல ஓர்க. கண்ணி காட்சியவரவை வென்றான் என்பது நலமா? வாயிலி மோன நிலை சிறந்தான் எனல் வழுவாமன்றோ? அங்ஙனமே மெய் யுணர்விலி ஐநதவித்த நிலையும என்க. எனவே துறவு-நிலையடைநதோர் இவ்வுலகக் கல்வி நிலையிலும் வீட்டுலகக் கல்வி நிலையிலும் பெற்றுள்ள அறிவைக் கொண்டே போற்றப்படல் வேண்டும் கல்விநிலை அவர்பால் சிறந்-திலதேல் ஏனையரை ஒப்பவே அவரும காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்றானும் பற்றப்பட்டு உழல்வர். அதனால் மனக்கவலை எய்துவர். அம்மனக்கவலை மாற்று தற்குப் பற்ற வேண்டும் நெறியைக் கீழ்வரும் ஏழாவது குறள் கூறுகின்றது.

''தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனககவலை மாற்றல் அரிது.''

இக் குறட்பாவுககுப் பரிமேலழகர் செய்த உரை வருமாறு :-

"ஒருவாற்றானும் தனக்கு நிகர் இல்லாதவனது தாளைச் சேர்ந்தார்க்கு அலலது மனத்தின்கண் நிகழும் துன்பங்களை நீக்குதல் உண்டாகாது என்றவாறு

''உறற்பால தீணடா விடுதல் அரிது'' என்றாற் போல ஈண்டு அருமை இன்மைமேல் நின்றது. தாள் சேராதார் பிறவிக்கு ஏதுவாகிய காமவெகுளி மயக்கங்களை மாற்ற மாட்டமையின் பிறந்து அவற்றான் வரும துன்பங்களுள் அழுந்துபவர் என்பதாம்''. தாள சேர்ந்தார் அடையும் பயனை மணக்குடவர் நன்கு விளக்குகின்றார். அவர் கூறுமாறு:-

''வீடுபெறலாவது அவலக் கவலை கையாற்றின் நீங்கிப் புண்ணியபாவம் இரண்டினையும் சாராமல், சாதலும் பிறத்-

தலும் இல்லாததொரு தன்மையை எய்துதல். அதுபெறும் என்பார் முற்படக் கவலை கெடும் என்றார். அதனால் எல்லாத் துன்பங்களும் வரும் ஆதலான்'' .

மணக்குடவர் கூறுமாறு சாதலும் பிறத்தலும் இல்லாத தொரு தன்மையைஅடைதல் வீடுபேறு ஆகாது என்னை? அந்நிலையிலும் உயிர்க்கு உவர்ப்பு ஏற்படுதல் கூடும் ஆக லின். எனவே தான் உயிர் இறைவனுக்குரிய எணகுணங் களும் பெற்றுத்திகழும என்று சைவ நூலகள் கூறுவ ஆயின மணக்குடவர் விளக்கப் புகுந்தாரேனும வீடுபேற்று நிலை யைச் செவ்வனே கூறினாரில்லை என்க

இறைவனுக்கு உவமையாக எபபொருளும் இன்று என்பதை நாயனார் ''தனக்கு உவமை இல்லாதான்'' என்ற தொடரால் விளக்கியருளினார் எனவே முதற்குறளில கூறப்படும் அகரவுவமை மாணாக்கர்க்கு அறிவுறுத்தும பொருட்டே என்பது நனி விளங்கும். இறைவன் அருவாய் உருவாய், அருவுருவாய் அவையல்லனாய் இருப்பவன் அவன் எலலாமாயும் இருப்பன். அவை அல்லனாயும் இருப்பன், இறைவன் இப்படித்தான் இருக்கின்றான் என்று எப்படிப்புளரும் சொல்ல முடியாது.

''மைப்படிந்த கணணாளுப தானும் கசசி
மயானத்தான் வார்சடையான் மாசொன் றில்லான்
ஒப்புடையன் அலலன் ஒருவன் அல்லன
ஓர்ஊரன் அல்லன்ஓர் உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவவண்ணமும்
அவன்அருளே கண்ணாகக காணின் அல்லால
இப்படியன் இநநிறதத்ன் இவ்வண் ணததன்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே''

என்று அவன் திறத்தை அப்பா பெருமான் அருளிச் செயல காண்க.

இறைவனை ஒப்பாா எவரும் இலர். இருப்பின் கடவுளர் இருவராகி விடுவர் ''ஒன்றென்றிரு தெய்வம்'' என்பது பொய்ம்மொழியாகி விடும் ஆகவேதான இறைவனைத ''தன்னை ஒபபார் ஒன்றும் இல்லாத் தலைமகன் என்றது திருமந்திரம்.

''மனக்கவலை மாற்றல் அரிது'' எனறார். மனமே எலலாவற்றுக்கும் காரணமாயுளது. நன்மைக்கும் காரணம் மனமே. தீமைககும காரணம மனமே இதனைப் பாம்பன் அடிகளார்

''மனமே சனனமும் மனமே மரணமும் மனமே உலகும
லதுமாகும்
மனமே அபலமும் மனமே சபலமும் மனமே மதியொடு
விதியாகும்
மனமே சமலமும மனமே நிமலமும மனமே வளியொடு
வெளியாகும்
மனமே சிறுமையும மனமே பெருமையும் மனமே இருமை-
யும் ஒருமையுமே''

என்று அருளிச் செயதுள்ளார். இதன் பொருள் : ''பிறப்பு, இறப்பு. உலகம், உலகம அல்லாதது, பயனலலாதது, பய-னுள்ளது, அறிவு, ஊழ், மலத்துடன் கூடியது, மலம் அற்றது, வளி, வெளி, சிறுமை, பெருமை, இருதிறப்படும துவிதம், அதற்கு வேறாயுள்ள ஒருதன்மை ஆகிய அனைத்தும் மனமேயாகும் '' எனவாம். இந்த மனமே நம்மை நற்கதி-யிலோ, தீயகதியிலோ கூட்டுவது மாகும.

''கெடுக்க வல்லதும கெட்டவர் தங்களை
எடுக்க வல்லதும் இம்மனம எனறதை
அடக்க வல்லவன் ஐய பவக்கடல்
கடக்க வல்லவன் ஆவன் கடிதரோ'' (பிரபுலிங்கலீலை)

என வருதலை உன்னுக மனம் நற்றன்மை வாய்ந்திருக்கும் காலை

''ஓடும் பொன்னும் உறவும் பகையும் ஓர்
கேடும செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
வீடும் கானமும் வேறற நோக்குதல்
கூடும் தன்மை கொளுமெ (பிரபுலிங்கலீலை)

மனம் தீய தன்மையைப் பற்றி யிருக்குங்காலை

''மன்னு காம வெகுளி மயக்கமென்
றின்ன கூடி எறிவளி முற்சுடர்
என்ன ஆடும்.'' (பிரபுலிங்கலீலை)

இத்தகைய மனத்துக்கு அருணகிரிநாத முனிவர் அறிவுறுத்துதல் காண்மின் :-

''கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழிநா சியொடும் செவியாம
ஐவாய வழிசெல் லுமவா வினையே''

இன்பத்தைத தருவதும் துன்பத்தைத் தருவதும் மனமாதலினால வள்ளுவர் 'மனக்கவலை' என்றார். மக்களுக்கு உண்மையில் தேவை சிலபொருள்களே மனமோ பல தேவைகளையுமெ தானே அவாவி உயிரைத் துன்பத்துக்கு ஆளாக்குகின்றது. ஔவைப் பெருமாட்டியார்

''உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந தெண்ணுவன — கண்புதைநத
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையுமெ சஞ்சலமே தான்''

என்றே அருளிச்செயதார். உலகில உழலும் மனமெ துன்பத்துக்கு இருககை. இறைவன் திருவடிக்கண் நிலைத்த மனம் இன்பத்துக்கு ஏது. எனவே மனத்தை அடக்கி இறைவன் பால் நிறுத்த வேண்டும். இதுவே செயற்கரிய செயல. மனமெ அடங்கின் எல்லாமெ இன்பமே. மனம் அடஙகுதலே அரிது. 'சிந்தையை அடககியே சும்மா இருக்கின்ற திறமரிது

என்பார் தாயுமானவ அடிகள் அதனை இறைவனைப் பற்றி நிறுத்த முயலவேண்டும். வடலூர் வள்ளலாரும்.

''மனம்எனும் ஓர் பேய்க்குரங்கு மடப்பயலே நீதான்
மற்றவர்போல் எனைநினைத்து மருட்டாதே கண்டாய்
இனமுறஎன் சொல்வழியே இருத்தியெனில் சுகமாய்
இருந்திடுநீ என்சொல்வழி ஏற்றிலையா னாலோ
தினையளவுன் அதிகாரம் செலஒட்டேன் உலகம்
சிரிக்கவுனை அடக்கிடுவேன் திருவருளால் கணத்தே''

என்று அருளுதல் காண்க. பிரபுலிங்க லீலையில் ''வாயு நிற்க மனமும் உடன் நிற்கும்'' என்றார். என்றாரேனும் மனம் நிற்க வாயு நிற்கும் என்பதே பொருளாகக் கொள்க. வேறு பொருள் கொண்டு மூச்சடக்கும் யோகம் பயின்று காலத்தை கழிக்கற்க என்னை?

''துருத்தி எனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுரித்
தருத்தி உடம்பை ஒறுக்கில்என் னாம்சிவ யோகமென்னும்
குருத்தை யறிந்து முகம் ஆ றுடைக்குரு நாதன் சொன்ன
கருத்தை மனத்தில் இருத்தும்கண் டீர்முத்தி கைகண்டதே.
என்று அருணகிரிநாதப் பெருமான் அருளிச்செய்தல காண்க.

சிவயோகம் என்னும் கருத்தை அறிந்து முகம் ஆறுடைக் குருநாதன் சொன்ன கருத்தை மனத்தில் இருத்தும'' என்பதால அசசிவயோகம் பயிலும் முறையும் ஈண்டு உணர்த்துவாமாக.

சிவயோகம் பயில்வோன் பாவத்தைப் பறக்கச் செய்யும் திருநீற்றை உத்தூளனமாக அணிதல் வேண்டும். மலைச்சார்பான இடம், குளிர்ச்சியான சோலை, நன்னீர்க்கரை, அல்லது மனத்துக்கு இன்பம் விளைக்கும் ஓர் இடம் தெரிந்து கொள்க. அவ்விடம் நச்சுயிர்கள், பயிலாததாய்க் காடு இல்லாததாய இருத்தல் வேணடும். சிவயோகம் பயிலுதற்கு இடையூறாய் மக்கள் போக்கு வரத்து இல்லாமை வேண்டும்,

அங்கு மான்தோல் அல்லது புலித்தோல் அல்லது மிருது-வான விரிப்பு ஒன்றை இடுக அதில் வடக்கு நோக்கி பது மாசனம் இட்டு அமர்க. இறைவனே என்று தன்குரவனைப் பாவித்துச் சிந்திக்க பின்னர் முதுகுக்கும் இரணடு விலா-வுக்கும் அணையாவது, யோகதண்டமாவது, யோகபட்டை யாவது சேர்த்துவிடுக. மாரபு, கழுத்து, தலைஆகிய மூன்றும நேராக இருக்கும்படி நிமிர்ந்து இருக்க மனததை ஐமபுலன் வழிச் செல்லாமல் தடுத்தல் வேண்டும. அதாவது எவ்வித உலகச் சிந்தனையும் கூடாதபடி தடுக்க அங்ஙனம் சிநதனை அற்று இருக்கும் அளவில் உயிர்க்காற்றும் மன அளவாய் அடங்கும. இந்நிலை கூடலும் உள்ளத் தாமரை நாப்பண் இறைவன் திருமேனியைச் செவ்வே சிந்தித்தல் வேண்டும். இங்ஙனம் காலையிலும மாலையிலும் ஒரு மணி நேரததுக்குக் குறையாமே இப்பயிற்சி செய்க. இப்படிச் சில திங்கள வரை பயில்க இவ்வகையில் பயிற்சியின் நேரம் கூடிக் கொண்டே வரும். இராப்பகல் சேர்ந்த ஆறு நாள் எண்ணெய் ஒழுக்குப் போல இடைடயறாது இந்நிலையில் நிற்கும் ஆற்றல் கைகூடி வருமாயின் காரியம் கைகூடும். தீவினை தீயும இறைவன் மெய்யுணர்த்தும் குரவனாக வெளிப்பட்டு அருள செய்வதும் அங்ஙனமேயாம். மேல் அவனது கட்டளையின்படி நடப்-பதும் கடப்பாடாம வீடுபேறு அல்லாத வேறு வரங்களை நல்கியருளுமாறு வெளிப்படுமவன் இக்குரவா திருககோல மல்லாத வேறு ஒரு திருமேனி கொண்டு வருவன். இக-குரவப்பிரான் திருவாய் மலரினின்றும் ''யாம் உன்னை ஏன்று கொண்டாம்'' எனும ஒரு திருமொழி தோன்றுமேல் பிறவிப் பிணி தீர்நதது என்னும் முடிவு கொள்ளலாம். இறைவன் திருப்பெயரையுர் சிந்திக்குமாற்றையுர் முதலில் அறிவுறுத்திய நற்குரவர் பால் அன்பு குறையின் பயனும் குன்றும் தவப்பேறுடையார்க்கு மனத்துன்பு நிகழுமாறு யாதும் தேடிக் கோடல் கூடாது இப்பயிற்சிக்கண் முதலில் நுசுப்பு, பிடர், முதலிய உறுப்புக்களில் நோவுண்டாயில்

பொறுத்திருந்து விடாது பயிலல் வேண்டும. அந்நோ சில தினங்களில் நீங்கும் உறக்கம் தோன்றிச் சிநதனை கெடு-மாயின் விடாது பெயர்த்தும் பெயர்த்தும் முயறல் வேண்டும். முயலுங்கால் விழிப்பு உண்டாயின் அவன் சிந்தனையாகவே திருக்கோயில் வழிபாடு செயது திருநீறு அணிந்து மீண்டும் முயலல் வேண்டும். மனமும் உயிர்க்காற்றும அடங்கிய இவ்வுட்கும்பக நிலை நின்று செபிக்கும் மானசசெப மந்திர-மும், சிந்தனையுமே இனிது பலிக்கும். ஆண், பெண் என்னும் இருபாலார் விடுதலைக்கும் இந்த யோகம் உரித்து. இவ்விளக்கம் பாம்பன் குமரகுருதாசப் பெருமான் அருளியது. இஃதே எழில்மிகு சிவயோகம் எனப்படும்.

## 15 அறவாழி அந்தணன்

கவலையின் பிறப்பிடம் மனம். மனம் அடங்கக் கவலை அடங்கும். மனம் அலையும தன்மையது. மனத்தை அடகக முயலுங்கால் மனம் பிற பொருள்களைப் பற்றித் தன்னை அடக்க முயல்பவரை வெற்றி கொள்ளும். கொண்டு மீண்டும் கவலைகளைப் பெருக்கும். ஆகலின் பிறபொருள்களின்மேல உள்ள பற்று கழிய வேண்டும். பிறபொருளகளாவன பொரு-ளும் காமமும். அவற்றின பற்று கழிய வேண்டின் இறைவன் தாளைப் பற்றுகஎன்று அறிவுறுத்துகிறது எட்டாவது திருக் குறள்

''அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது''.

இக்குறளுக்குப் பரிமேலழகர் இயற்றியுள்ள உரை வருமாறு:

''அறக்கடல் ஆகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கு அல்லது அதனிற் பிறவாகிய கடல்களை நீந்தல் அரிது என்றவாறு.

''அறம் பொருள் இன்பம் என உடன் எண்ணப்பட்ட மூன்ற-னுள் அறத்தை முன்னர்ப் பிரித்தமையான் ஏனைப் பொரு-

ளும் இன்பமும் பிற எனப்பட்டன. பலவேறு வகைப்பட்ட அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவாக உடையன் ஆகலின் அறவாழி அந்தணன் என்றார். அறவாழி என்பதனைத் தருமசக்கரம் ஆக்கி அதனையுடைய அந்தணன் என்று உரைப்பாரும் உளர். அப்புணையைச் சேராதார் கரைகாணாது அவற்றுள்ளே அழுந்துவர் ஆகலின் நீந்தல் அரிது என்றார். இது ஏகதேச வுருவகம்''

பிற ஆழி என்பதனைக் காலிங்கரும மற்றொருவரும் பிறவு ஆழி எனப் பிரித்துப் பிறவிககடல் என்று பொருள் கண்டனர். பத்தாவது குறளில் ஆசிரியர் பிறவிப் பெருங் கடலைக் கூறுதலின் ஈண்டு அது பொருளன்மை விளங்கும். அறம் என்று கூறிப் பிற என ஆசிரியர் கூறியதனால அது மறம் எனக் கொண்டு பரிதியார் பாவக்கடல என்றார். இப் பொருளும் அமையும். இறைவன் அறக் கடலாயிருப்பின் உயிர்கள் அதனால் பயன் பெறும். தரும சக்கரம் என்பதொன்றை உருட்டுகின்றான் இறைவன் என்பதனால் அவன் பெருமையோ உயிர்கள் பெறும் பயனோ சிறந்தெடுத்துக் காண இயலாது. மற்றும் அறவாழி என்பதனைத் தருமசக்கரம் என்றால் பிற ஆழி என்பதனைப் பிறசககாம் எனல் வேண்டும். சக்காத்தை நீந்தலரிது என்று எவரும் கூறார். பிறவிக்கடல் என்று கொளக எனின் அஃது இவ்வதிகார இறுதிக் குறளில் கூறலால் ஈண்டும் கூறினார் எனல் கூறியது கூறல் என்னும் குற்றத்துட்படும். எனவே ஒருவர் மேற்கொண்ட மதப்பற்றுக் காரணமாக எழும் இத்தகு உரைகள் பயனிலவாய்க் கழியும் என்க.

இறைவன் அந்தணன் எனப்படுகின்றான். 'அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை-பூண்டொழுகலான்' என்று திருவளளுவர் கூறுகின்றது. இச்செந்தண்மையினர் நடையாதெனில வாய்மை, ஈகை, நறிய அருள், கொல்லாமை, தவம், பொறுமை, ஒழுக்கம் என்னும் ஏழுமாம் இவை வாய்ந்து திகழ்வோர் எக்குடிப்

பிறப்பினராயினும் அந்தணராவர் என்பது பாரதம். இறைவன் 'அறத்தால் உயிர்காவல அமர்ந்தருளியவன்' என்பதும் அறிக. அறவாழி அநதணன் ஆவான் சிவபிரானே என்க. திருத்தக்க தேவர் சிவனும் மாலும் மலரவனும் அருகனே எனக் கூறப்புகுவார் நான்முகனை "முனிமை முகடாய மூவா முதல்வன்'' என்றார்; நாரணனை "மலரேந்து சேவடிய மால்'' என்றார; ஆயின் சிவபிரானைக் "களிசேர் கணையுடைக் காமனைக் காய்ந்த, அளிசேர் அறவாழியண்ணல்''எனல காண்க. இதனானும் மூவர் முதல்வனாய முக்கட்செலவர் அறவாழியந்தணன் ஆதல் தெளிவுறும்.

பிறவாழி ஆவன பொருளும் காமமும் இவ்விரண்டும் இருபக்கமும் கூர்மை செறிந்த கத்தி போல்வன. நல்லார் கைப்பட்ட கத்தி நடைபாதையில் உளள முள்ளையும் புதரையும் களையப் பயன்படும அல்லார் கைப்பட்ட கத்தி பிறவுயிரைக் கொல்லவே பயன்படும். பொருள் சேர்க்கை ஒருவன் குணத்தைத் தலைகீழாக மாற்ற வலலது. "செல்வம்வந் துற்றகாலைத் தெய்வமும சிறிதும் பேணார, சொல்வன அறிநது சொல்லார் சுற்றமும துணையும நோக்கார'' என்பது வில்லிபுத்தூராழ்வாரின் மொழி காமமோ முதியோரையும் கலக்க வலலது இககாமவாய்ப்பட்டே துறந்தாலன்றி உய்தி இன்று எனத் தெளிந்தோரும் துறக்கமாட்டாமல் இல்லிலிருநது கொண்டே துறந்தார்போல் வஞ்சித்து ஒழுகுகின்றனர். இநநிலையில் பொருளும காமமும் சேரின் வேறு வினையே வேண்டா. அவை அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல், முதலியவற்றையும் சேர்க்கும். எனவே செலவக் கடலையும் காமக்கடலையும் கடந்தாலன்றி ஒருவர் நீடுவாழ்தல் இயலாது அவை கடக்கப் புணையாய் நிற்பன அம்பல வாணன் அடியிணை மலர்களே.

பொருளால் நல்வினை ஆற்றல் கூடுமே எனில் அங்ஙனம் ஆற்றுவார் எத்தனை பேர் என்று எண்ணிப் பார்க்க;

அவ்வாறு ஆற்றும் நலவினையும் பொன்விலங்காகிப் பிறவிக் கடலுள் உய்ப்பதேயாம். அங்ஙன் ஆகாது உய்தி பயத்தல் வேண்டுமெனின் அறம் இறைவனுக்கு உரிமைப்படுத்தப்பட வேண்டும். அதனினும் இறைவன் அடியார்க்குச் செய்யும் அறமே நற்றுணையாம்.

''அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்
சிகரம ஆயிரம் செய்து முடிக்கிலென்
பகரும் ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரில்லை என்பது நிச்சயம் தானே''

என்னும் திருமநதிரத்தைக் காண்க. எனினும பொருளை மேன்மேலும் ஈட்டுவதிலும் போற்றிப் பாதுகாத்தலினுமே இற்றைநாள் மக்கள் கருத்து செல்கின்றது. ஆகவே இவ்வறம் பற்றிக் கூறலும் பயன்படுமோ என்றே ஐயம் நிகழ்கின்றது நல்வினை செய்வாரும் அச்செயல் புண்ணியம், தம குடும்பத்தைப் பேணவல்லது என்னும் குறிக்கோள் உடையராயுளரே அன்றி கைம்மாறு கருதாது அறம் செய்வாரைக் காண்டல் அரிதேயாம். புண்ணியமும் பாவமும் விலங்கன்றோ? காமம் நன்றாமாறும் உண்டு. அஃது இறைவனடியவர்க்குச் செய்யும் தொண்டில் நிகழும் ஆயின் என்க ஏனைய பாச விலங்கேயாம். அதனாலன்றோ அப்பர் பெருமான்

''பொய்ம்மாயப் பெருங்கடலில புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தமமானைத் தலைமகனைத் தண்நல் ஆரூர்த
தடங்கலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்தன் அடித்தொடர்வான் உழிதர் கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே''

என்று அருளிச் செய்வாராயினார் என்க. தன்னைத் தொடர் வாரைத்துன்பக் கடலிலிருந்து மீட்டுக்கரை சேர்ப்பன இறைவன் திருவடிகள் என்பதை.

''துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர் தம்மை
இன்பக் கரைமுகந் தேற்றும் திறத்தன மாற்றயலே
பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப் பொய் பொருந்தா
அன்பர்க் கணியன காண்கஐ யாறன் அடித்தலமே''

என்று அப்பரடிகளார் உணர்த்துதல் காண்க.

## 16. எண்குணத்தான

''கல்லா நெஞ்சில் நில்லான் ஈசன்' எனவே எல்லாரும் கல்வி கற்றலின் பயன் கடவுளின் கழலிணை தொழுதலே எனவும் தொழுவாா நீடுவாழ்வார் எனவும் அவர் பொருள் காமம் ஆகிய கடல்களை நீந்தி மனக்கவலை யற்றிப்பார் எனவும் ஏனையர் கவலையால் வருந்துவர் எனவும உணர்த்திய ஆசிரியர் அவ்வாறு இறைவனைத் தொழார்க்கு மக்கட் பிறவியடைந்ததால் உள தாங்குற்றத்தை ஒன்பதாம் குறளில் உணர்த்துகின்றார்.

''கோளில் பொறியில குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

இக்குறளுக்குப் பரிமேலழகர் உணாததும் உரையாமாறு :

''தத்தமக்கு ஏற்ற புலன்களைக் கொள்கை இல்லாத பொறிகள் போலப் பயன்படுதல உடைய அல்ல; எண்வகைப் பட்ட குணங்களை உடையானது தாள்களை வணங்காத தலைகள் என்றவாறு

''எண்குணங்களாவன : தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை

என இவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது. அணி-மாவை முதலாக வுடையன எனவும், கடையிலா அறிவை முதலாக வுடையன எனவும் உரைப்பாரும் உளர். காணாத கண் முதலியன போல வணங்காத தலைகள் பயனில எனத் தலைமேல் வைத்துக் கூறினார். கூறினாரேனும் இனம்பற்றி வாழ்த்தாத, நாக்களும் அவ்வாறே பயனில என்பதூஉம் கொள்க. இவை மூன்று பாட்டானும் அவனை நினைத்-தலும், வாழ்த்தலும், வணங்கலும் செய்யா வழிப்படும் குற்றம் கூறப்பட்டது.''

இறைவனைத் திருவாசகத் தமிழ்மறை ''ஆதிகுணம் ஒன்றும் இல்லான் அந்தமிலான் வரக் கூவாய்'' என்னும். சுவேதாச்வதர உபநிடதமும் ''ஸர்வ பூதாதிவாஸஸ் ஸாக்ஷீ சேதாகேவலோ நிர்க்குணர்ச்ச'' என்றது. சர்வஞானோத்தர ஆகமமும் ''ஸுத்ருப்தம் நிர்க்குணம் சாந்தம் தத்வாதீதம் நிரஞ்ஜநம்!'' என்றது. எனவே இறைவனை எண்குணன் எனில் சாலுமோ என்றால் அவை நிர்க்குணம் என்று கூறியமை மாயையுட்படும் சத்துவம், இராகசம் தாமசம் ஆகிய முக்குணமின்மையே என்று உணர்க. யாதொரு குணமில்-லாதது யாதொரு பொருளாய் இருத்தலின்று. குணமற்ற எதுவும் பொருள் ஆகாது. பிரமம் பொருளும் ஆம் பொருளும் ஆகாது எனில் அதுவே அதன் பண்பாகி நிர்க்குணம் என்-பதை ஒழிக்கும். குணியும் குணமும் கதிரும் கதிரொளியும் போன்று பிரிக்க முடியாதவை. எனவே இறைமைக் குணங்-களாய எட்டும் சிவபிரானுக்கு உரியன என்று அறிக. நிர்க்-குணம் என்று கூறிய சர்வஞானோத்தர ஆகமமே தனது உண்மையை உணர்ந்து உறும் உபாயங்களைச் செய்வோரன் சீவன் முத்தனாய் உள்ளும் புறத்தும் நிறைந்து முற்று முணர்தல், வரம்பில் இன்பமுடைமை, இயல்பாகவே பாசங்-கள் இலனாதல், தன்வயத்தனாதல், பேரருளுடைமை, முடி-விலாற்றலுடைமை, இயற்கையுணர்வினனாதல், தூயவுடம்-

பினனாதல் என்னும் எண்குணங்களாகிய தத்தர்மத்தை-யுடையதாமியாய்ச் சிவத்துவத்தைப் பெறுவன். உண்மை, உண்மை, உண்மை மூக்காலும் உண்மை. இதற்குமேல் அறியற்பாலன ஒரு நூலினும் இல'' என்று கூறுதலை நோக்குக.

1) உயிர்கள் கருவி கொண்டு சுட்டி அறிவன. எனவே சிற்றறிவின இறைவன் கருவி கொணடு சுட்டியறியாது முற்றுமுணர்தல் உடையவன். இது வடமொழியில் சருவஞ்-ஞதை எனப்படும்.

2) இறைவன் திருவடி கூடும் உயிர்கள பேரின்பம் நுகர்கின்றன உயிர்கள் எண்ணில ஆதலாலும் அழிவில ஆதலாலும் அவை நுகரவுள்ள பேரின்பமும் வரம்பில்லா-துளது எனவே இறைவன் வரம்பிலின்பமுடைமை என்னும் பண்பினனாவான் வடமொழியில் இதனைத திருததி என்பர்

3) பதி, பசு, பாசம் ஆகிய மூன்றும் தமக்கொரு முதலும முடிவும இல்லாப் பொருள்கள் ஆம. ''பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில். பதியினைப் போல் பசு பாசம அனாதி'' என்பது திருமந்திரம. பாசம் உயிர்களைப் பிணித்து பசுவாக்கி நிற்கும். பதியாகிய இறைவன் முன் (கதிரவன் முன் இருள் போலத்) தன் ஆற்றல் மடங்கி நிற்கும். ஆகலின் உயிர்கள் பாசப்பிணி உடையன. இறைவனோ இயல்பாகவே பாசங் களின் நீங்கியவன். வடமொழியில இதனை அனாதி போதம் என்பர். இதனால் பாசங்கழலுமாறு செய்தல் இறைவன் திருவருள் ஒன்றினால் மட்டுமே இயலும எனபது விளங்கும. என்னை? இறைவனைத் தவிர்த்த ஏனையர் பாசத்தில் கட்டுண்டவராகலின். இஃது அனாதி முத்தத்துவம் எனவும் படும்.

4) யாவும் தன் ஆணைவழி நடத்தலும், யாவும் தன்-னையே சார்ந்து ஒழுகுதலும தான் பிறிதொன்றன் கீழ்ப்பட

லோ அன்றிப் பிறிதொன்றன் சொல்வழி நிற்றலோ இல்லாமல் யாவும் நடாத்துதல் தன்வயத்தனாதல் எனப்படும் இது வடமொழியில் சுதந்திரத்துவம் எனப்படும். இதனையே சர்வகர்த்திருத்துவம் என்பர்.

5) பாசங்கழன்று உயிர்கள் வீடுகூடி இன்பம் துய்க்க வேண்டும். அது கருதி இறைவன் உயிர்கட்கு வேண்டும் உலகும், உடம்பும, கருவிகளும் படைக்கின்றான். இஃது அவனது பேரருளைக் காட்டும் பேரருளுடைமையை வட-மொழியில் அலுத்த சத்தி என்பர்

6) முடிவிலாற்றல இன்றேல இறைவன் தன கருததின படி நிகழத்தி உயிர்களின் பாசத்தை அறுத்தல இயலாது முடிவிலாற்றலுடைமையை வடமொழியில் அனநத சததி என்பர்

7) மக்கள அறிவிக்க அறியும் தன்மையர். இறைவன் இயற்கையுணர்வினன். இயற்கையுணர்வினனாதலை வட-மொழியில் நிராமயத்துவம என்பா.

8) உயிர்களின் உடம்புகள் மாயையாகிய மலத்தில தோன்றியவை. அவை ஆண் பெண் கூட்டத்தில் தோன்றுவ பிணி, மூப்புச் சாக்காட்டுக்கு உட்படுவ. இறைவன் திரு-மேனி பிரணவம் ஆகும பஞ்சபபிரம உபநிடதம் ''ஆகாசமய விக்ரஹம்'' எனவும் தைத்திரிய உபநிடதம் சிட்சாவல்லி ''ஆகாச சரீரம் ப்ரஹ்ம'' எனவும கூறுதலால அவன் திரு-மேனி ஞானவெளியாம. இதுவே தூய உடம்பினனாதல ஆகும். வடமொழியில் விசுத்ததேகம எனபர். இது இறை-வனின் அழிவற்ற தன்மையைக குறிக்கும.

இவ்வெட்டனுள் ஏழாவதாகிய இயற்கையுணர்வினனா-தலை மூன்றாவதாகிய முற்றுமுணர்தல் (அனாதிபோதம்) என்பதினும எட்டாவதாகிய தூயவுடம்பினனாதலைப் பேரு-

ளுடைமையிலும் அடக்கி ஆறுகுணம் என்றும் கூறுவர் இந்த ஆறுகுணங்களுள் தன்வயததனாதலைச் சத்து எனவும் முற்று முணர்தல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை என்ப-வற்றை சித்து எனவும் வரம்பிலின்பமுடைமை, இயலபாகவே பாசங்களின் நீங்குதல் என்பவற்றை ஆனந்தம் எனவும் மூனறாக்குதலும் உண்டு. இதில் இயல்பாகவே பாசங்களி-னீங்குதலைத் தன்வயத்தனாதலோடு கூட்டிச் சத்து எனவும் சாற்றலாம்.

எண்குணத்தான் தாளை வணங்காத்தலை குணமில என்றார். கூப்பித் தொழாத கையும திருக்கோயில் சூழாக் காலும் குணமிலவே ஆயிடினும் அவை அறிகருவிகள் ஆகா-வாயத் தொழிற்படு கருவிகளாதலின் தாமே அறிந்து செய்-யாவாய் மனததின் ஏவலின் வழி நிற்றலின் அவற்றைக் கூறிறறிலர் அறிகருவிகள் ஆகிய வாய், கண, மூக்குச் செவி என்பனவற்றைத் தன்பால் கொண்டு திகழ்தலின் தலைமேல் வைத்துக் குணமில என்றார. மெய்யின் உணர்ச்சியாகிய ஊற்றுணர்ச்சியும் தலையின்கண் உளதாகலின் ஐம்புல உணர்ச்சியும் உடையது தலை எனக் கூறுவதும் அறிக.

எண்சாண் உடமபில தலைமை பெற்றது தலை. இத்-தலை தன்னுடைய தலைவனை வணங்குமேல உயிர் தலைமை பெறும. இதனைக காழிவேந்தர் ''சிற்றம்பலந தன்னைத் தலையால் வணங்குபவர் தலையானார்களே'' என்று உணர்ததியருளுகின்றார் உடமபு பெற்ற பயன் உடையவனை வணங்குதல. வணங்கல வேண்டும என்னும் உணர்ச்சி கல்வியால பெறுதலின் கடவுளைத் தொழாதாரின் கல்வி பயனிலது என்று முன்னரும் கூறினார். உடம்பில் உள்ள ஒவ்வோர் உறுப்பும் அதற்கே பயன்படல் வேண்டும். இவ்வுண்மையை உணர்த்துமாறே அப்பர் பெருமான் திரு-வங்கமாலை அருளிச் செய்துள்ளார்

இறைவனை வணங்காத் தலை பறந்தலை; காணாக் கண் முகத்து எழுந்த புண். அவன் புகழ் கேளாக் காது ஊசிக்காது. புகழாத நாக்கு புண்ணாக்கு. எனவே குணமில என்றார்.

இறைவனை எண்குணன் என்றார் திருவள்ளுவர். அவ்வெட்டுக் குணங்களையும் சிவாகமத்துக் கூறப்பட்டவாறே பரிமேலழகர் விளக்கினார். இந்த இடத்தில் பரிமேலழகர் எல்லாச் சமயத்தவர்க்கும் பொதுப்பட உரைத்தாரல்லர். ஏனைச் சமயத்தவரும் தாம் வழிபடு தேவனை எண்குணன் என்று எண் குணங்களையும் கூறுவர். அவை எல்லாம் இறைமைக் குணங்களாகாமையின் பரிமேலழகர் அவற்றை விலக்கினார். அணிமா முதலிய சித்திகளைப் பொருளாகக் கோடலே அறியாமையின் திறமாம் எனின் அவற்றை எண் குணமாக விரிப்பாரின் திறத்தை என்னென்பது? இனிக் கடையிலா அறிவு, கடையிலாக் காட்சி, கடையிலா வீரியம், கடையிலா இன்பம், நாமம் இன்மை, கோத்திரம் இன்மை, ஆயு இன்மை, அழியா இயல்பு என்ற எட்டையும் கொள்வாரும் உளர். கடையிலா என்று முடிவின்மையை மட்டும் குறித்ததனால் முதல் உளது என்று முடியும் முதல் இருப்பின் முடிவும் இருக்கும் எனவே கடையிலா என்று கூறிக்கோடலால் வரும் பயன் ஒன்றுமின்று. நாமமின்மை. இஃது பிறரால் இடப்படுவது. இஃதின்மையை ஒரு குணமெனல் அறிஞர்க்கு நகையே விளைக்கும். சைவ சமயத்துச் சிவபிரானுக்குக் கூறப்படும் எட்டுக் குணங்கள் போல் தம் தேவனுக்கும் வேண்டும் என்னும் விருப்பத்தால் படைத்திட்டுக் கொண்டவை சீரிய இயற்கைக் குணங்கள் ஆகா என்பது உணர்க.

இவ்விறைவனை வணங்குவோர் அவ்வெட்டுக் குணங்களையும் பெற்று வீடு கூடுவர். ஆகலின் உடம்பு பெற்ற தன் பயன் இறைவனை வணங்குதல் என்னும் உண்மையை இக்குறள் வலியுறுத்துகிறது.

# 17. பிறவிப் பெருங்கடல்

மக்கள் பிறக்கின்றனா. பிறந்து வளாந்து ஆசையாளராய இவ்வாழ்வே நிலைபெற்றது என்று எண்ணி அணுவளவு தவிடுமிகள் பிதிரவிட மனமிறுகி உழல்கின்றனர். ஆவியாய வோர் தேவியோடு கூடி மக்களைப் பெற்று முதுமையுற்று கண்களில் பீளையும் வாயில்—ஈளையும் ஒழுகித் துன்புற்று இறுதியை எதிாநோக்குகின்றனர். இதைச் சிந்திக்கும்போது மக்கள் வாழ்வெல்லாம் உண்பதுவும் உறங்குவதுமாகவே முடிகின்றது இச்செயல்களை நாய், பன்றி முதலியவை களும் செய்கின்றன ஆறறிவு கொண்டிருந்தும் ஐயறிவுடைய அஃறிணை உயிர்களைப் போல மக்கள் வாழ்ந்து முடிதல் நலங்கொல? மக்களாவார் பிறப்பிறப்பாகிய பவ்வத்தை நீநத முயல வேண்டும் இதைப் பினவரும் குறள் கூறுகின்றது.

''பிறவிப் பெருக்கடல் நீநதுவா நீநதார்
இறைவன அடிசேரா தார்.

இக்குறளுக்குப் பரிமேலழகர் விரித்த உரையாமாறு :-

''இறைவன் அடி என்னும் புணையைச் சேர்ந்தார் பிறவி ஆகிய பெரிய கடலை நீந்துவர். அதனைச் சேராதார் நீந்த மாட்டாராய் அதனுள் அழுநதுவர் என்றவாறு

''காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவிப் பெருங்கடல் என்றார் சேர்ந்தார் என்பது சொல்லெச்சம். உலகியல்பை நினையாது இறைவனடியையே நினைப்போாககுப் பிறவி அறுதலும், அவ்வாறன்றி மாறி நினைப்பாாக்கு அஃது அருமையுமாகிய இரணடும் இதனால் நியமிக்கபபட்டன.''

''புல்லாகிப் பூடாயப் புழுவாய் மரமாகிப், பல்விருக மாகிப் பறவையாய்ப் பாமபாகிக் கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய், வல்லசுரர் ஆகி முனிவராய்த் தேவ-

ராய்ச் செல்லா நின்ற இத்தாவர சங்கமந்துள் எல்லாப் பிறப்-
பும் பிறநதிளைத்தேன் எம்பெருமான்'' என்பது திருவாசகத்
தமிழ் மறையாகலின் பிறவி பெருங்கடலாம தன்மையை
உணர்க. இங்ஙனம் யானை முதலா எறும்பீறாய, ஊனமில்
யோனியின் உள்வினை பிழைத்தும் மானுடப் பிறவியினுள்
மாதா உதரத்துத் தகக தசமதி வருமிடர் பிழைத்தும் அதத
சமதி தன்னில தாயொடு தான்படும் துக்க சாகரத துயரிடைப்
பிழைத்தும வளர்ந்துழலும் மக்கள் யாகசைக்கே இரைதேடிக்
காகசைக்கே இரையாகிக் கழிவதல்லால் உடமபைப் போற்ற
உழைப்பதோடு அதனுள தங்கியுள்ள உயிரையும் போற்றி
வாழ்வம் என்னும் உணர்ச்சியற்று வாழகின்றனரே

உலக நிகழ்ச்சிகளை காரண காரியத் தொடர்புடையன.
பிறவியும் அததொடாபுடையதே. ''உலகியலபை நினை-
யாது' என்றார் பரிமேலழகர். எண்ணரிய பிறவிதனில்
மானிடப்பிறவியே யாதினும அரிது ஆகலின் இப்பிறவியே
மாண்புடையது. இப் பிறவி எடுத்த பயனை அடைதல்
வேண்டும். இங்ஙனம் மாந்தர் நினையாா. இன்றைக்
கிருப்பாரை நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ திட-
மில்லை என்பதை அறிவர்; கண்ணாலும் காண்பர். இருப்-
பினும் தாம் மட்டும் நீலமணி மிடற்று ஒருவன் போல் மன்னி-
யிருப்போம என்று கனவு காணபர். நெஞ்சம் பகீர் என்-
னும தீய செயல்களை அஞ்சாது செயவா. எப்படியேனும்
பொருள ஈட்டல வேணடுட தாமும் மனைவியும மக்களும்
எக்குறையும படாது வாழ வேண்டும் என்றே எண்ணுவர்.
இவர் வீற்றிருக்கும் வாழவும், ஈட்டிய பொருளும உயிர்
உடமபில வாழும மட்டுமே உதவுவ; எப்போதாயினும கூற்-
றுவன் வருவன்; அப்போது அநதக் கூற்றுவன் தன்னைப்
போற்றவும போகான; பொருள்கொடும் போகான் என்பதும்
நினையாா. ஒருவர் தம் மனைவி பண்ணிய சுவையான
உணவை உணடாா். தொழிற் கூடம் செல்லும்முன் சிறிது

இளைப்பாற எண்ணி ஊஞ்சலில அமர்ந்து மனைவியோடு இன்பமாகப் பேசிக கொணடிருநதார் திடீரென்று இடது மார்பு வலிக்கிறதே' என்றார. சிறிது ஓய்வு எடுககலாம என்று எண்ணிபபடுததவர் படுததவரே. எழுந்திருக்கவே இல்லை

''அடப்பண்ணி வைத்தாா அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரோடும் மநதணம் கொண்டார்
இடப்பகக மேஇறை நேர்ந்ததே என்றார்
கிடக்கப் படுத்தார் கிடநதொழிந் தாரே''

என்று திருமந்திரம அந நிகழ்ச்சியைக் கூறுகின்றது

அவர் போய் விட்டார் அவரோடு பெயரும் போய்விட்டது இப்பொழுது அந்த உடமபுக்கு ஒரு புதிய பெயரிட்டாாகள. பிணம என்பது அந்த பெயர் இடுகுபறை சிறுபறைகள் திமிலையொடு தவிலறைய பிணததை ஈமதேசம கொண்டு சென்றனா ஊரரா பிணத்திற்கு நெருப்பிட்டுவிட்டுத தலை முழுகினாாகள. தீட்டுக்கா தலை முழுகினர். அவரது நினைவுக்கே தலை முழுகி விட்டனர்.

''ஊரெல்லாம கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில மூழ்கி நினைப்பொழிந தார்களே''

என்று திருமநதிரம் அந்த வரலாற்றைக் கூறுகின்றது.

அவரோ கோடீசுவரர். வாழ்ந்த வாழவோ பலரும் மெச்சும வாழ்வு. மனைவியோ ஊருவசி போன்றவள். மக்களோ கண் போன்றவர்கள. இததுணை இருந்தும இவை அவரைத் தொடர்ந்தனவா? பொருளும் வாழவும வீட்டளவிலேயே நின்றுவிட்டன. மனைவி வீட்டைத் தாணடினாள்; ஆனால் தெருவிலேயே நின்றுவிட்டாள். கொள்ளி வைக்கவே மகன் சுடுகாடுவரை வந்தான் ஆனால அவரை விடாமல தொடர்ந்து சென்றவை இரண்டு பொருள்கள் : ஒன்று நல்வினை. மற்றொன்று தீவினை.

''அத்தமும் வாழ்வும் அகத்துமட் டேவிழி அம்பொழுக
மெததிய மாதரும வீதிமட் டேவிமமி விமமியிரு
கைத்தலை மேல்வைத தழும்மைந தருமசுடு காடுமட்டே
பற்றித் தொடரும் இருவினை புண்ணிய பாவமுமே''

என்று பட்டினத்தடிகள் இவ்வுண்மையை விளக்குகின்றார்.

இப்படிப்பட்ட வாழ்வை நிலையுடையதென்று கருதி வாழ்வதுதான் உலக இயல்பு. அறிஞராயோர் அவ்வியல்பை விலக்கி ஒழுகுவர் என்பதைப் பரிமேலழகர் 'உலகியல்பை நினையாது' என்றார் பிறப்பும் துன்பம, இருப்பும் துன்பம், இறப்பும் துன்பம். இதனைப் பாம்பன் அடிகளார "உல-கததே வருபிறப்பும இருப்பும் சாவும் ஒழியாத துன்பம்" என்று அருளிச் செய்தார். இத்துன்பம் ஒழிபாககு இறை-வன் திருவடி சோதல் வேண்டும். சேர்ந்தால் பிறவித் துன்பம் நீங்கி இறவாத இன்பம் கூடும்

இறைவன் திருவடி சேருமவகையைக் குரவா உணாத்-துவர். குரவரை நாம அடைவதற்கு நம உள்ளம் கனிந்து முதிர வேண்டும் அதற்கு இடையறாது இறை சிந்தனை தேவை.

சைவ சமயத்து நூல்களும் வழுத்துரைப் பாடலகளும் எணணிக்கையில மட்டுமின்றி மாட்சியிலும் தலை சிறந்தன. இறைவனை நம்பால் எளிதில் கூட்டுவன. தேவாரத திரு-வாசகங்களும் திருப்புகழும் பாம்பன்சுவாமிகள் பாடலும் ஆம் தத்துவ நூல்கள் கடவுளின் உண்மையை நாட்ட வந்தனவே அன்றிக காட்ட வநதன அல்ல. எனவே சாத்திரங்களையே பன்முறை ஓதி அதில வரும் விளக்கங்களைக் கொண்டு வழக்காடிக் காலம் கழிக்காது சான்றோர் பாடல்களை ஓதி

"நினைந்து நினைந துணர்ந்துணாந்து நெகிழந்து
நெகிழ்ந் தன்பே
நிறைநது நிறைந் தூற்றெழும் கண்ணீரதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று வனைந்து
வனைந்து எத்துமின்

அடியராவார் தாமே இறைவன் புகழைப்பாடி இன்புற விரும்பின் அங்ஙனமே பாடல் ஆக்கி இறைவன் அடியில கூடி மகிழலாம். அது பழம நழுவிப் பாலில விழுந்தது போலாம' எனபர் பாமபன் அடிகளார். அவ்வண்ணமே இறைவழிபாடு செய்து மேமபாடு அடைவோமாக.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 26 | மள்ளல் | மலலர் |
| 2 | 25 | தொலெயுந் | தொலையுந் |
| 3 | 8 | தமிழன்னெயைத் | தமிழன்னையைத் |
| 6 | 4 | மண்ணுவன | மன்னுவன |
| 6 | 19 | ஒநோ விடத்து. | ஒரோவிடத்து |
| 12 | 27 | தீக்கிததென்று | தீக்கிதரதன்று |
| 16 | 14 | பேசறிவில | பேரறிவில |
| 16 | 24 | நல்கு | நரகு |
| 17 | 16 | சிற்றறீவினராய் | சிற்றறிவினராய |
| 17 | 20 | தலைமைப்பாகுடைய | தலைபபாடுடைய |
| 21 | 4 | கூறப்படுகின்றனது | கூறப்படுகின்றது |
| 21 | 5 | நிற்பதாகும். | நிற்பதாகும |
| 21 | 15 | கபிலாகவல | கபிலரகவல |
| 21 | 23 | பலைச்சி | புலைச்சி |
| 21 | 27 | இறையனசாகப் | இறையனாரகப் |
| 21 | 27 | ஒரு நூலி | ஒரு நூ |
| 21 | 30 | யாளிததத்தன் | யாளிதத்தன் |
| 22 | 8 | என்னீன் | என்னும் |
| 22 | 23 | கனவு காணும | கனவு காணும் |
| 22 | 26 | ஒன்று | ஏன்று |
| 22 | 28 | நூலைக் | நூல |
| 24 | 12 | எலையா | ஏலையா |
| 26 | 8 | பகுப்பாற்குத் | படுப்பாற்குத் |
| 27 | 1 | விசுறு | விசிறு |
| 27 | 9 | இலலதென | இல்லதென் |
| 28 | 7 | வளளுவர் | வள்ளுவர் |
| 30 | 13 | மறையோர் | மறையோய் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 32 | 18 | இயற்பெ யரைக் | இயற்பெயரைக் |
| 34 | 3 | இருதாளினை | இருதாளிணை |
| 34 | 21 | பெரு நாட | பெருநாட் |
| 35 | 17 | ஆர்ப்பொரு | ஆர்ப்பொடு |
| 36 | 17 | குட்பட்டு | குட்படு |
| 37 | 21 | வேணயிவான் | வேணவாவான் |
| 37 | 26 | வருகிறன்றது | வருகின்றது. |
| 38 | 1 | வள்ளுவளார் | வள்ளுவனார் |
| 38 | 7 | கற்பனையே | கற்பனையையே |
| 38 | 20 | கயிளை | கயிலை |
| 39 | 28 | ஆலய | ஆலயம |
| 40 | 3 | கொணடனர் | கொண்டான் |
| 40 | 15 | கூறியவாரும் | கூறியவாறாம் |
| 40 | 23 | நுணமான் | நுண்மாண் |
| 41 | 2 | த் தொட்டே என்பதை நீககி விடவும் | |
| 41 | 14 | கூறலை வழக | கூறலே வழக் |
| 41 | 18 | நாவுக்கின்னாதாய் | நாவுக்கின்னாதாய |
| 41 | 30 | மபிலையில் | மயிலையில் |
| 42 | 7 | சிறப்புடைதது | சிறப்புடைத்து |
| 43 | 19 | நம்பற்கியலாப | நம்பற்கியலாப் |
| 43 | 23 | தோன்ற | தோன்றிய |
| 43 | 26 | கூற | கூறா |
| 44 | 12 | பொருநல | பொருநன் |
| 48 | 18 | புலமையுடையாதல | புலமையுடையராதல் |
| 49 | 21 | ஆலநிழற்கீழ | ஆலநிழற்கீழ |
| 54 | 18 | என்னும் நூல் | என்னும் நூலில |
| 55 | 1 | திகிர் | திகிரி |
| 55 | 1 | லாதளத் | லாதனத் |
| 55 | 6 | சரணமே | சரணம் |
| 55 | 9 | விட | விட் |

| | | | |
|---|---|---|---|
| 55 | 10 | காசினிபில் | காசினியில் |
| 55 | 13 | எதும் | ஏதும் |
| 55 | 14 | செய்திகளின் | செய்திகளில் |
| 56 | 1 | என்றால் என்பது நூல் | என்றால் நூல் என்பது |
| 56 | 3 | செய்யப்பட்டன்றி | செய்யப்பட்டதின்று |
| 56 | 23 | கீழமைத்து | சீர்மைத்து. கீழ்க் கணக்கில் |
| 56 | 25 | கூறியிருந் | கூறியிருத் |
| 57 | 3 | எனவே | ஏனவே |
| 57 | 17 | வறுமாறு | வருமாறு |
| 57 | 18 | இயல்பி | இயல்பின் |
| 57 | 22 | தைந்திணையும் | ஐந்திணையும |
| 58 | 3 | ரொனிபதாய்ச் | ரொன்பதாய்ச் |
| 58 | 12 | செல்வ | செல்வன |
| 58 | 23 | வாழும்படி | வாழலாம் |
| 59 | 2 | என்னும் | என்று |
| 59 | 3 | சுவைப்பார்த்தற்கு | சுவைபார்த்தற்கு |
| 59 | 25 | முறைமயில் | முறைமையில |
| 59 | 28 | வெண் பாடே | வெண்பாட்டே |
| 60 | 2 | நயநதலநதாள் | நயந்தளந்தான் |
| 60 | 16 | பாடலாக்கின்றாா | பாடலாக்குகின்றார் |
| 62 | 16 | இன்னதவாய்த | இன்னாதவாய்த் |
| 63 | 13 | போற்றியுணர்த் | போற்றியுணர்ந் |
| 63 | 21 | விளங்குதலின | விளக்குதலின் |
| 64 | 22 | அழிவை விளக்கும் | அழிலவ விளைக்கும் |
| 65 | 26 | பெருமைக்கு | பெறாமைகரு |
| 66 | 19 | கொள்ளாமம் | கொள்ளாமல் |
| 69 | 4 | வள்ளுரே | வள்ளுவரே |
| 71 | 16 | யைக்கு | க்கு |
| 73 | 4 | பண்டையாசிரியன் மார் | பண்டையாசிரியன் மார் பதின்மர் |
| 73 | 7 | திருமராயர் | திருமலையர் |

| | | | |
|---|---|---|---|
| 73 | 21 | கூறும் | கூறுப |
| 74 | 22 | Sew | Serve |
| 74 | 29 | அரிய கற்றார் | அரியகற்றா |
| 75 | 4 | உள்ளத் | உள்ளத்தைக் |
| 75 | 25 | தொழுபரபுதிருமால் கோயில் பூசகர் என்பர் | தொழுமரபுஉடையார திருமால் கோயில் பூசகர் என்பது |
| 76 | 3 | உலகரியக | உலகறியக் |
| 76 | 9 | ஓர் | ஓர் ஊர் |
| 76 | 13 | தமிழ்க் கடல | தமிழ்க் கூடல் |
| 76 | 15 | மதுரையைக் | மதுரையைச் |
| 77 | 18 | என்திற ஜீவன் | என்கிற ஜீவன் |
| 78 | 12 | கருததற்பாலது | கருதற்பாலது |
| 79 | 20 | அறத்தையும, அது — இந்தச் சொற்களை நீக்கவும | |
| 79 | 24 | கல்வியில் | கல்வியால் |
| 80 | 4 | மதம் என்று | மதம வேறு என்று |
| 80 | 30 | ஆகானமயை ''மகடுத் | ஆகாமையை ''மகட்குத் |
| 83 | 3 | ஒன்றுகொண்டு | ஏன்றுகொணடு |
| 84 | 12 | மழையின்றேன் | மழையினறேல |
| 86 | 12 | பொண்ணுக்கும | பெண்ணுக்குக் |
| 86 | 13 | எனறு | எனற |
| 87 | 13 | பெருமையால் | பெறாமையால் |
| 88 | 14 | தின்ற | தினற் |
| 88 | 15 | கொலலால் | கொல்லா |
| 89 | 11 | graud | grand |
| 95 | 7 | ''தம்மைக'' — இதனை நீக்கிப் படிக்க | |
| 97 | 25 | விரிப்பா — உரைப்பர் | |
| 99 | 1 | எகரமும் | எகரம் |
| 101 | 28 | சொல்லை | சொல்ல விலலை, |

## எமது பிறநூல்கள்

| | | விலை |
|---|---|---|
| 1. | அருணகிரிநாத அடிகளார் வரலாறு (ஆராய்ச்சி) | 2-50 |
| 2. | இகழுரை போக்கும் தகவுரை முதற்பகுதி | 1-50 |
| 3. | இகழுரை போக்கும் தகவுரை இரண்டாம் பகுதி | 2-50 |
| 4. | சங்க காலத்தமிழர் சமயம் | 5-00 |
| 5. | சிவபிரானின் முழு முதன்மை | 16-00 |
| 6. | ஏசுவின் ஆட்டுக்குட்டிகள் | 1-50 |
| 7. | ஏசு பிறந்தார் ஆராய்ச்சி | 8-00 |
| 8. | சிவம் பரப்பிரமம் | 16-00 |
| 9. | பெரியோர் செய்த பெரும்பிழைகள் | 16-00 |
| 10. | செந்தமிழ்த் திறம் (திருக்குறள் பீடம் மதுராந்தகத்தில் கிடைக்கும்) | |
| 11. | புலவர் பேரரசர் ஒட்டக்கூத்தர் (குன்றத்தூர் சேக்கிழார் பதிப்பகத்தில் கிடைக்கும்) | |
| 12. | சைவர் ஒலம் சிவனே ஒலம் | |
| 13. | உலகம் படைக்கப்பட்டது ஏன்? | |



இவை கிடைக்குமிடம்

புலவர். பி.மா. சோமசுந்தரனார்

4, லோகல் பண்டு சாலை (பிஞ்சி கிராமம்)

இராணிப்பேட்டை - 632 401

NA Dt.

## இந்நூல் கிடைக்குமிடம்

1) புலவர். பீ. மா. சோமசுந்தரனார்
4. லோகல் பண்டுசாலை (பிஞ்சி கிராமம்)
இராணிப்பேட்டை-632401.
N.A. Dt.

2) Dr. M. KUPPUSAMY. B.E.
FLAT 007- GARADI APARTMENTS
No. 26 III Main, K.R. Road,
BASAVANGUDI Tata Silk Farm.
*BANGALORE-560004.*

3) வீ. திருஞானம் அவர்கள்
பாம்பன் மெர்கண்டைல்ஸ்
33, காமராசர் சாலை
மதுரை - 625 009.